SAW. ...
KARAIKUDI. S. I. R.

உ

தமிழ்த் தாய் வாழ்க

KMM0696

# மொழி அரசி

2524

## முதற் பாகம்
## தமிழ்த் தெய்வ மாலை

### முதற் பகுதி
### தமிழ்ப் புகழ்

நூல் இயற்றியோர் :
சாமி. வேலாயுதம் பிள்ளை, B. A., L. T.,
தலைமை ஆசிரியர்
நாட்டாண்மை உயர்நிலைப் பள்ளி
திருவாரூர்

கரந்தைத் தமிழ்ச் சங்கம்
தஞ்சை
1947

உரிமை இயற்றியோரது] [ 3 ரூபா

SAW. GANESAN
KARAIKUDI. S. I. R.

# மொழியரசி

## பொருளடக்கம்

# பதிப்புரை

செந்தமிழ்த் தொண்டரும், நம் சங்கப் பேரன்பரும் ஆகிய திருவாளர் சாமி. வேலாயுதம் பிள்ளை யவர்கள் இதுகாறுஞ் செந்தமிழ்ச் சான்றோர் கண்டுரைத்த தமிழ்த்தாயின் நல்லிசைப் புலமை யெழினலங் கெழுமிய அணிகள் எல்லாவற்றையும் ஒருங்கு தொகுத்து வரிசைபெற வழங்கிய அருங்கலப் பேழை, மொழியரசி என்னும் இத் தொகுப்பு நூலாகும். தமிழ்த்தாயின் தனி மாண்பினை இனிதுணர்த்தித், தமிழ்ப் பற்றினை வளர்த்துத், தமிழர் வாழ்வினைச் செம்மை செய்யும் திறம் இந் நூலின் சிறப்பியல்பாகும். இதன் முதற் பகுதி இப்பொழுது வெளிவருகின்றது.

செந்தமிழும் ஆங்கிலமும் திருத்தகப் பயின்ற பேரறிஞராகிய பிள்ளை யவர்கள் தம் ஆராய்ச்சி வன்மையால் இயற்றியுதவிய இம் மொழியரசியினை நம் சங்கத்தின் சார்பாக வெளியிட இசைந்து, இதனல் வரும் சிறப்பினைத் தாம் பெறுவதே யன்றி, நம் சங்கத்திற்கும் பேரன்புடன் வழங்கியுள்ளார்கள். அவர்கள் வள்ளன்மையினைப் பாராட்டி நன்றி கூறுகின்றோம்.

இந்நூல் விற்பனையால் வரும் ஊதியத்தைச் சங்க வாயிலாகத் தாம் குறிப்பிடும் தமிழ் நூல்களை வெளியிடுதற்குப் பயன்படுத்திக்கொள்ள வேண்டுமென்பது அவர்கள் விருப்பமாகும். இப் பெருநோக்கம் தமிழகத்தாராற் பாராட்டத் தகுவதாம்,

இந் நூலிற் காணும் கொடி, தமிழ்த்தாயின் கொடியாகத் தொகுப்பாசிரியர் உள்ளத்திற் றோன்றியாங்கு, புலவர் பாக்களில் (பக்கம் 115, 117) வெளிப்பட்ட தோன்றும்.

இந் நூலினைச் செவ்வையாக அச்சியற்றி உரிய பொழுதிற் ,றந்த தஞ்சைக் கூட்டுறவுப் பதிப்பகத்தாரின் உதவி பாராட்டற் குரியது.

தனியரசியின் புகழ்நூலாகிய இம் மொழியாசியைப் பயின்று, தமிழர்கள் நலம் பெற்று மகிழ்வாராக.

க. த. சங்கம், 24-10-47. } ஆ. யா. அருளானந்தசாமி நாடார், தலைவர்.

உ

# நினைவுரை

ஆரூரமர்ந்த அரசே போற்றி

## தமிழ்ப் புகழ்

என்னும் இந் நூல்

பதினாலாண்டு பண்புடனும் அன்புடனும்
தமிழ், சைவப் பற்றுமிக்குப் பற்றூட்டி வளர்த்து
இளமையில் ஏங்கவிட்டகன்ற எந்தையார்
புகைவண்டி நிலையத் தலைவர்
தஞ்சை வே. சாமிநாத பிள்ளை அவர்களுக்கு
என்றுங் குன்றா நன்றி செலுத்தும்
நினைவு மலராக
அடியேனுக்கும் ஆரருள் புரிந்து
தேனமர் சோலைத் திருவாரூருக்குத் தருவித்து
இச் சிறிய நூலையும் பெரிய பெயருடன்
வெளியிடக் கடைக்கண் சாற்றிய
வள்ளல் வேந்தெனுங் கொடைக் கடவுளாகிய
தியாகராசப் பெருமான்
திருவடிக்கீழ்
ஆராக்காதல் பேரா அன்புடன்
திருவள்ளுவர் ஆண்டு ௧௯௭௮, ஐப்பசி, ௯ம் நாள்
கலைமகள் விழாவாம் வியாழனன்று
சூட்டப் பெறுகின்றது.

---

# முன்னுரை.

பிறந்து மொழி பயின்ற பின்னெல்லாம் என்னை அறியாததோர் இன்பக்காதல் என் தாய்மொழியாகிய தமிழிடத்துத் தானாகவே தோன்றி வளர்ந்து இதுதான் தெய்வக்காதலோ எனும்படி சிறந்து விளங்குவதாயிற்று. இன்னும் எளியேனினும் சிறந்த காதல் கொண்டோரின் உள்ளத்து ஊற்றெழுந்து ஒழுகிய இன்பக் கவிகளையுங் கட்டுரைகளையும் தம்மை மறந்த அருஞ் செயல்களையுங் காணுந்தோறும் அவை என்னுள்ளத்தைக் கொள்ளை கொள நேர்ந்தது வியப்பல்ல. ஆனால் அவை யாவும் பற்பல விடங்களில் பரவிக்கிடந்ததால் அவற்றால் அவ்வப்போது அடையக்கூடிய இன்பங் குறைந்தும் அவற்றைத் தேடும் வருத்தம் பெரிதாகியும் இருந்தது. இக்குறைகளை நீக்க அவற்றை ஒருசேரத் தொகுத்தும் வகுத்தும் வரிசைப் படுத்தியபொழுது யான் பெற்ற இன்பத்திற்கு அளவுதானும் இல்லையெனவே கூறலாம். யானின்புறுவதில் தமிழுலகும் இன்புறுவதுகண்டும், யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் எனக்கொண்டும் இத் தொகுதியை வெளியிடலானேன். இதன் பகுதிகள் தனித்தனியாகப் பலவிடங்களிலிருந்தபொழுது வலிமைகுன்றி, வீறிழந்து, இறந்துபடும் நிலையிலிருந்தன. ஆனால் அவை ஈண்டு ஒன்றுகூடி அரிய ஆற்றலுடன் புத்துயிர்பெற்று விளங்குவதைக் காணலாம்.

2. தாய்நாட்டுப் பற்றும் தாய்மொழிப் பற்றும் இவ்வுலக வாழ்க்கைக்கன்றி மறுவுலக வாழ்க்கைக்கும் உறுதி பயப்பனவாகும். அவை உள்ளம் உயிருக்கு உரந்தந்து வாழ்க்கையை எல்லா வகையிலும் சுவையுடையதாக்குகின்றன. அவையில்லா மக்கள் மாக்களேயாவர்; அவர் இருந்தும் இறந்தோரேயாவர். இவ்விருபற்றுள் தாய்மொழிப்பற்றில் தலைசிறந்தோர் தமிழரேயாவர். தமிழிற்குப்பின் பல மொழிகள் தோன்றி நின்று அழிந்திருக்க, வரலாற்றுக் காலங்களுக்குமுன் தோன்றிய இம் மொழியை இன்றும் நின்று நிலவி வளம்பெற்றோங்கச் செய்து வருவதே அவர்களது அரும்பற்றை விளக்கக்கூடிய பெருஞ் சான்றாகும். இப்பற்றும் நாட்டுப் பற்றுஇயக்கத்தின்பொழுது தமிழ் நாடு முழுவதும் பொங்கி எழுந்து பொலிந்து ததும்பி

வழிந்தது யாவரும் அறிந்ததே. தமிழ்க் கலைச் சொல்லாக்க இயக்கமும், தமிழிசை இயக்கமும் இப்பற்றிற்குப் புத்துயிர் அளித்து வந்தது, வருவது கண்கூடு. இந்நூலும் அதனை ஒரு சிறிதேனும் ஓங்கச் செய்வது திண்ணமாகும்.

3. தங்கள் தாய்மொழியைத் தங்கு தடையின்றி நேசிப்ப தற்கும் அதில் பெருமை கொள்வதற்கும் தக்க ஏதுக்கள் தமிழர்க்கு இருப்பதுபோல் வேறெவர்க்கும் இல்லை என்பது திண்ணமாகும். உலகில் வழங்கிய, வழங்குகிற, மொழிகளுக் கெல்லாம் பழமையானதும்,தாயாய் விளங்குவதும், அழகொழுகு வதும், சுவைமிகுத்திருப்பதும், தெய்வத் தன்மை பொருந்தி கடவுளுடன் நேரே உறவாடியதும், சீரிளமைத்திறங்குன்றாது தன்னியல்பைத் தானே காத்துக்கொள்ளும் தனித்தன்மைத் தாயதும், இயற்கைத் தன்மை மிக்கிருப்பதும், இலக்கணவரம் புடையதும், ஒப்பற்ற பல நூல்களை ஒவ்வொருவகையிலும் பெற்றிருப்பதும், பேருணர்வில் பொலிந்த பல புலவர்களை யுடை யதும், அரும்பெறற் புரவலர்களை அடைந்துளதும், இன்னோ ரன்ன இயம்புதற்கரிய பெருமைகள் இன்னும் பல ஈண்டியதும் நம்மருந் தமிழ் மொழியே யன்றோ? இவ் அரும் பண்புகளை இனி மையுடன் எடுத்துக்காட்ட இந்நூலின் ஒவ்வொரு பக்கமும், ஒவ் வொரு வரியும், ஒவ்வொரு எழுத்தும் பயன்படுவன ஆகும் என்பது மிகையாகாது. இவ்வாறு தமிழுயர்வு கூறவே தமிழர் உயர்வும் கூறப்பட்டதாகுமாதலின், தமிழர் யாவரும் தம்முயிர்ச் செல்வத்தை ஈண்டுகண்டு களிப்பெய்தலாம்.

4. தமிழர்களும் ஏனையோரும் தமிழைப் போற்றிப் புகழ்ந் திருப்பதுபோல வேறெம் மொழியும் எவராலும் பாராட்டப் பட்டிருப்பதாகத் தெரியவில்லை. உலகிலுள்ள மொழிகள் யாவற்றினும் பலவகையில் முன்னணியில் நிற்கும் ஆங்கிலத்தின் எல்லை யில்லா நூல்களைத் துருவித்துருவி ஆராய்ந்தும் அம் மொழிப்பற்றை வளர்க்கக்கூடிய ஒரு பாடலாவது சொற்றொட ராவது இருப்பதாகத் தெரியவில்லை. உலகம்போற்றும் உயர் கவியாகிய செகப்பிரியனை (Shakespeare) இழப்பதா, இந்தி யாவை இழப்பதா எனக்கேட்பின், இந்தியாவை இழப்பதற்கு ஒப்புவேன் எனக் கார்லைல் (Carlyle) புலவர் கழறிய தொன்று தான் நமக்குத்தெரிகிறது. இதுவும் ஓர் புலவனைப் போற்றிய

தாகுமேயன்றித் தம் தாய் மொழியை நேர்முறையில் போற்றிய தாகாது. ஆனால் தமிழ்ப் புகழ்மாலைகளை ஈண்டு தொகுத்திருப் பதை நோக்கப் பல தமிழ்ப் புலவர்களும் தமிழன்பர்களும் பெரு வியப் புறுவதைக் கண்டுளேன். இன்னும் இவை வளர்ந்து கொண்டே செல்லுவதைக்காண இம்மொழியின் முன்னேற்றத் தில் அளவுகடந்த நம்பிக்கை உண்டாகிறது. இன்னும் பன் மொழிப் பயிற்சியினரும் மொழியாராய்ச்சியாளரும் இம் மொழியை ஏனைய மொழிகளுடன் ஒப்புநோக்கும் போதெல்லாம் கண்டுள்ள பெருமையும் நயமும் எதிர்பாராத வகைகளில் மிகப் பலவாய் விளங்குவதைக் கண்டு இறும்பூதெய்தாதவரில்லை. எனவே, இவற்றை யெல்லாம் அடக்கிய இத்தகையதொரு தொகுதி வேறெம் மொழிக்கும் அமையாதென்பது திண்ண மாகும். ஆதலின் விலையிலா அரும் பொருளாகிய இந் நூற் கருத்துக்களை தமிழர் ஒவ்வொருவரும் போற்றுதல் கடனே யாகும்.

5. எம் மக்களது உயிர்ச் செல்வத்தையும் அவரவர் மொழி யிற் காண்பதுபோல் வேறெங்கும் காண இயலாததாகும். ஒவ்வொரு மொழியின் எழுத்துஞ் சொல்லும், இவற்றின் புணர்ப்பும் பிரிப்பும், சொற்றொடரும் கட்டுரையும் கவியும், இவை யாவற்றினும் ஊடுருவிச் செல்லும் அரும் பொருளும் அவற்றைப் பயன்படுத்தும் மக்களின் மாண்பைப், பண்பாட்டை விளக்க வல்லனவாகும். தமிழ் மக்களின் தனிப் பண்பு தம் மொழியைப் பல வகையில் ஒப்பற்ற உயர்வுடையதாக்கி எல்லா வகையிலும் இலக்கண வரம்புடையதாகச் செய்து தெய்வமாகப் போற்றி வருவதிலிருக்கிறது. தமிழின் தனிப் பெருமைகள் **தமிழுயர்வு மாலை** எனும் இரண்டாம் பாகத்திலும், இலக்கண வரம்பு முதலியன **தமிழாட்சி மாலை** எனும் மூன்றும் பாகத்திலும், தெய்வமாகக் கொண்டாடப்பட்டுவரும் வகை **தமிழ்த் தெய்வ மாலை** எனும் முதற் பாகத்திலும் விளக்கப்படுகின்றன. இப் பாகத்தின் இரண்டாம் பகுதி தமிழின் பழஞ் செயலையும் (புரா ணத்தையும்) முதற் பகுதி தமிழின் புகழ்களையும் விரித்துரைக் கின்றது.

தாம் பெரிதும் நேசித்து இன்பமடைய உதவும் பொருள் களைத் தெய்வமாகக் கொண்டாடுவது பண்டுதொட்டு மக்கள்

இயல்பாகவே வந்திருக்கிறது. இவ்வியல்பை முழுப்பயன் படுத்தித் தம் உயிர்ச் செல்வத்தை ஒரு வகையில் உருப்படுத்திக் கண்டோர் தமிழரே யாவர். இத்தகையதொரு எண்ணம் வேறெம் மொழியினரிடத்தும் இன்னும் எழவில்லை யென்பது குறிப்பிடத்தக்கதாகும். சிவப்பிரகாச சுவாமிகளின் இளவல் கருணைப் பிரகாசர் கொண்ட தமிழ்த் "தேவு மால்" சிறிது சிறிதாகக் கொழுந்துவிட்டு எழுந்து, வளர்ந்து இந் நூலில் முழுமை அடைகிறது. இதனால் தமிழ்த் தெய்வத்தை வாழ்த்தி நிலமிசை நீடு வாழ்ந்தும், வணங்கிப் பெரும் பயனெய்தியும், அவள் திருவுருவத்தில் நினைத்துப் பெருமகிழ்வுற்றும், வெற்றிக் கொடியேற்றி வெறியாட்டயர்ந்தும், தெய்வத் தன்மை வாய்ந்த பிறப்பு வளர்ப்பு ஆற்றல் செயல் அரும் பண்புகளில் ஈடுபட்டுச் செயற்கரிய செய்தும், தமிழர்பெற்ற பேரின்பம் தன்னிகரற்ற தாகும். இவற்றை இந்நூல் போல் விளக்க வல்லது வேறில்லை என்பது ஒரு தலை.

தமிழின் அனாதி முறைமையான பழமையும், பழமைப் பாடும், செவியாரல்களும் (Traditions) யாவராலும் வியக்கத் தக்கனவாய், சிலரால் நம்பத்தகாதனவாய்க் காணப்படினும், அவற்றுட் சிலவேனும் உண்மை நிகழ்ச்சிகளே என்பதற்குத் தக்க அகச் சான்றுகளும், புறச் சான்றுகளும் உள; தமிழ்ப் பாடல்களின் பயனளிக்கும் ஆற்றலும் இதனை நிறுவ வல்லன. ஏனையவை சிறந்த கற்பனைக் கவினுடனும் தக்க அடிப்படைகளுடனும் விளங்குதலின் இகழத் தக்கன அல்ல. உள்ளங் கவர்ந்தெழுந் தோங்கும் கருத்துக்களால் பெறக்கூடிய பேரின்பம் புறக்கணிக்கத் தக்கதல்ல என்பதையும், இன்னும் உயிரையுங் கொடுத்து ஓம்பத் தக்க தென்பதையும் 'ஆருருவ உள்குவார் உள்ளத்துள்ளே அவ்வுருவாய் நிற்கின்ற அருளுந் தோன்றும்' எனும் உண்மையை உணர்ந்தோரே உணர்வர். இத்தகைய உணர்ச்சியை ஊட்ட இந்நூல் பெரிதும் பயன்படு மென்பதற்கு ஐயமில்லை.

௬. நம் அருமருந்தன்ன தமிழன்னையின் வரலாற்றில் ஒரு புதிய இயல் தொடங்கி இருப்பது யாவரும் அறிந்ததே. அதற் கேற்ப அவள் புத்துயிர் பெற்றோங்கவும் அருந் தமிழன்பர்களை ஆக்க வேலை செயத் தூண்டவும் இந்நூல் ஓர் ஒப்பற்ற

கருவியாய் விளங்குவதைக் காணலாம். இதன் முழுப் பயனைத். தமிழ் மக்கள் தவறாது அடையவேண்டும் என்பதும் அதற்காக இந்நூல் ஒவ்வொரு கற்றறி தமிழன் கையில் இருக்க வேண்டு மென்பதும் எளியேனது வேண்டுகோளாகும்.

7. இந் நூலில் வரும் பாக்களைப் பயன் படுத்திக்கொள்ள எளிதில் இசைந்த பேராசிரியப் பெருந்தகைகளின் பேரருள் சொல்லுந் தரத்ததன்று. அவர்களது ஒப்பற்ற உணர்ச்சிக்கும் அரிய ஆற்றல்களுக்கும் தமிழ் மக்களும் அவருள் ஒருவனாகிய தமியேனும் என்றுங் குன்றா நன்றி செலுத்தக் கடமைப்பட்டவர் களாவோம். காலஞ் சென்ற சில ஆசிரியர்களின் பாடல்களைச் சேர்த்துக்கொள்ள இசைந்த பதிப்பாசிரியர் பலருக்கும் கடமைப் பட்டுளோம்; அவர்களுள் சிறப்பாகச் சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகத்தார், மதுரைத் தமிழ்ச் சங்கத்தார், பாரதி பிரசுராலய நிலையத்தார், குறிப்பிடத் தக்கவராவர்.

இந் நூலைத் தம் வெளியீடாக ஏற்றருளிய கரந்தைத் தமிழ்ச் சங்கத்தாருக்கு என் உளமார்ந்த நன்றியினைத் தெரிவித் துக் கொள்ளுகிறேன்.

இந் நூலின் திருத்தப்படி முதலியவற்றைத் திருத்திக் கொடுத்தருளிய பல புலவர்களுக்கும், அவர்களுள் சிறப்பாய் கரந்தைப் புலவர் கல்லூரித் தலைவர், கரந்தைக் கவியரசு திரு. அரங்க. வேங்கடாசலம் பிள்ளை அவர்களுக்கும், குத்தாலம் உயர்நிலைப்பள்ளி, வடமொழி ஆசிரியர், திரு. அரங்க. பொன் னுச்சாமி பிள்ளை அவர்களுக்கும், யான் என்றுங் கடமைப் பட்டவனாவேன்.

தமிழ் மொழி கலை தமிழ் மறை அறம்
தரணி எங்கணும் தழைத்துப் பொங்குக[1].

திருவாரூர்,
24—10—47.

சாமி. வேலாயுதம் பிள்ளை.

[1] சுவாமி அருணகிரிநாதர்.

உ

கடவுள் துணை

# மொழியரசி

## I. தமிழ்த்தாய் வாழ்த்து.

1. [நம் தாய்மொழியாகிய தமிழ்மொழியைப் பெற்ற தாயினும் உற்ற தெய்வமாக மதித்து, அவள் புரிந்துள்ள பேருதவிகளுக்குச் சிறிய தொரு கைம்மாறாக அரிய பல வாழ்த்துப்பாக்கள் பாடப்பட்டுள்ளன. அவற்றுள், காலத்தால் முந்திய, ஆராய்ச்சி அடிப்படையுடைய, நயத்தக்க கருத்துக்களுடைய, இன்னோசை மிக்கு மிளிர்கின்றதொரு பாடல், இந்நூலில் முதலிடம் பெற்றிருப்பது சாலப் பொருந்தியதே யாகும். இதுவே, இப்பொழுது புத்துயிர்பெற்று ஓங்கி வளர்ந்து வரு கிற தமிழ்ப் பற்றிற்கு அடிகோலிய பாட்டாகும். இது பாடப்பெற்று அரை நூற்றாண்டிற்கு மேலாகியும், இன்னும் 'சீரிளமைத் திறங்குன்றாது' விளங்கி வருவது கண்கூடு. இப்பாடலின் சிறப்பு, இதனை நேரே பின்பற்றி எழுந்துள்ள இருபெரும் பாடல்களால் நன்கு வலியுறுத்தப் படுகின்றது. அப்பாடல்களும் இதனை அடுத்து விளங்குகின்றன.]

மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா.

நீராரும் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகும்
சீராரும் வதனமெனத் திகழ்பரத கண்டமிதில்
தக்கசிறு பிறைநுதலுந் தரித்தநறுந் திலகமுமே
தெக்கணமும் அதிற்சிறந்த திராவிடநற் றிருநாடும்
அத்திலக வாசனைபோல் அனைத்துலகும் இன்பமுற
எத்திசையும் புகழ்மணக்க இருந்தபெருந் தமிழணங்கே!

பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினுமோர்
எல்லையறு பரம்பொருண்முன் னிருந்தபடி யிருப்பதுபோல்

கன்னடமுங் களிதெலுங்குங் கவின்மலையா ளமுந்துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே யொன்றுபல வாயிடினும்[1]
ஆரியம்போல் உலகவழக் கழிந்தொழிந்து சிதையாவுன்
சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே!

கடல்குடித்த குடமுனியுன் கரைகாணக் குருநாடில்
தொடுகடலை உனக்குவமை சொல்லுவதும் புகழாமே?

ஒருபிழைக்கா அரனார்முன் உரையிழந்து விழிப்பாரேல்[2]
அரியதுன திலக்கணமென் றறைவது மற்புதமாமே?

சதுமறைஆ ரியம்வருமுன் சகமுழுதும் நினதாயின்[3]
முதுமொழிநீ அநாதியென மொழிகுவதும் வியப்பாமே?

வேகவதிக்[4] கெதிரேற விட்டதொரு சிற்றேடு[5]
காலநதி நினைக்கவராக் காரணத்தின் அறிகுறியே.

கடையூழி வருந்தனிமை கழிக்கவன்றோ அம்பலத்துள்
உடையார்உன் வாசகத்தில் ஒருபிரதி கருதினதே.[6]

தக்கவழி விரிந்திலகுஞ் சங்கத்தார் சிறுபலகை
மிக்கநலஞ் சிறந்தவுன்றன் மெய்ச்சரித வியஞ்சனமே.[7]

வடமொழிதென் மொழியெனவே வந்தஇரு விழியவற்றுள்
கெடுவழக்குத் தொடர்பவரே கிழக்கொடுமேற் குணராரே.

---

[1] அச்சத் தெலுங்கு, மிசிரத் தெலுங்கு, பழங் கன்னடம், புதுக் கன்னடம் என்பன போன்ற பிரிவுகள் இங்குக் குறிப்பிடப்படுகின்றன.

[2] அரனார் முன்னிலையில் நக்கீரர் விழித்துத் திருந்தியது. இதனை வசவுப் பெருமை(நிந்தாத்துதி)யாக அரனார் வாயிழந்து விழித்தாரெனவும் கொளல் ஏற்புடையதே.

[3] உலகிற்கே ஒரே மொழியாயிருந்த முதல்மொழி தமிழ்மொழி.

[4] வைகை.

[5] புனலிலே டெதிர்சென்றது குறிக்கப்படுகின்றது.

[6] திருவாசகத்தைப் பரமன் ஏட்டில் எழுதிய திருவிளையாடல் குறிப்பிடப்படுகிறது.

[7] வியஞ்சனம்-அறிகுறி. சங்கப்பலகை போன்று கற்றறிந்தார் அறிவுக்கேற்பத் தமிழ் விரிந்தும் சுருங்கியும் விளங்க வல்லது.

வீறுடைய கலைமகட்கு விழியிரண்டும் மொழியானல்
கூறுவட மொழிவலமாக் கொள்வர்குண திசையறியார்.

கலைமகள்தன் பூர்வதிசை காணுங்கால் அவள்விழியுள்
வலதுவிழி தென்மொழியா மதியாரோ மதியுடையார் ?

பத்துப்பாட் டாதிமனம் பற்றினர் பற்றுவரோ
எத்துணையும் பொருட்கிசையா இலக்கணமில் கற்பனையே ?

வள்ளுவர்செய் திருக்குறளை மறுவறநன் குணர்ந்தோர்கள்
உள்ளுவரோ மநுவாதி யொருகுலத்துக் கொருநீதி ?

மனங்கரைத்து மலங்கெடுக்கும் வாசகத்தின் மாண்டோர்கள்
கனஞ்சடை[1]யென் றுருவேற்றிக் கண்மூடிக் கதறுவரோ ?

எனவாங்கு

நிற்புகழ்ந் தேத்துநின் னெடுந்தகை மைந்தர்
பற்பலர் நின்பெரும் பழம்பணி புதுக்கியும்
பொற்புடை நாற்கவிப் புதுப்பணி குயிற்றியும்
நிற்பவர் நிற்க நீபெறும் புதல்வரில்
அடியேன் கடையே னறியாச் சிறியேன்[2]
..................................................
ஆயினு நீயே தாயெனுந் தன்மையின்
மெய்யே விசையென மீக்கொள வோர்வழி
உழைத்தலே தகுதியென் றிழைத்தவித் திருப்பணி
வெள்ளிய தெனினும் விளங்குநின் கணைக்காற்கு
ஒள்ளிய சிறுவிர லணியாக்
கொண்மதி யன்பே குறியெனக் குறித்தே.

—இராய் பகதூர் பெ. சுந்தரம்பிள்ளை, எம். ஏ. [3]

---

[1] கனம், சடை முதலியன வேதத்தைப் பிறழாதிருக்கச் செய்ய ஏற்படுத்தப்பட்டவை.

[2] 'கொடு மலையாளக் குடியிருப்புடையேன்' எனும் ஆசிரியர் வாழ்க்கைக் குறிப்பை வெளியிடும் வரி இவண் விடப்பட்டது.

[3] இப்பெரிய பாடலின் அரிய ஆசிரியர் 1855 முதல் 1897

2. [முதற்பாடலில் கூறப்படாத சில கருத்துக்களுடன் அதன் ஆசிரியர் முதலியோரையும், சில மேம்பட்ட நூல்களையும் புகழ்ந்து தமிழ்த்தாயை வாழ்த்துவது இப்பாடல்.]

மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா

இமயவட வரைகுமரி யிருகடலும் புடைசூழ்ந்து
தமனியநா டிதுவென்னுந் தகைதருபா ரதநாட்டின்
அழகுசெழு முகமென்ன வமைந்துதென்பாற் பொலிந்தோங்கி
யொழுகுபொன்னி பொருநைமுத லுயர்நதிபாய் வளம்படைத்துக்
குலவுதென்றல் வருபொதியில் கொல்லிமுதன் மலைபலவும்
நலமுறவைந் திணைவளனுஞ் சுரந்துநலங் கொழித்துதவிச்

---

வரை வாழ்ந்தவராவர். இவர் இளமையிலிருந்தே நல்லொழுக்கம், கடவுளன்பு மிக்கவராய், கலாசாலை வகுப்புக்களில் முதல்வராய், இருமொழிப் பெரும்புலவராய் விளங்கியவர். திருவனந்தபுரம் மாவரசர் கல்லூரியில் (Maharaja's College), அறிவு நூற்பெரும் புலவராய்த் (Professor of Philosophy) திகழ்ந்தவர். நூல் தொகை விளக்கம் (1888) எனும் சூத்திரமும் உரையும் கூடிய அறிவியல் வகைதொகை நூலையும், திருஞான சம்பந்தர் காலம் எனும் கால ஆராய்ச்சிக் கட்டுரையையும், மனோன்மணீயமென்னும் நவீன நாடக நூலையும் (1891) இயற்றிப் பெரும் புகழ்பெற்ற அரும்பெறற் புலவர். இப்பாடல் மனோன்மணீயத்தின் அவையடக்கமாகும்.

இவரது காலவாராய்ச்சி அக்காலத்தில் மிகத்துணிவும் புதுமையும் உடையதாயிருந்ததன்றி, இன்னும் அசைக்கமுடியாததாய்ப் பெரியபுராணத்தையே உண்மை வரலாற்று நூலாகக் கருதும்படி செய்திருக்கிறது. இந்திய நாட்டின் வரலாறு தென்னாட்டிலிருந்து தான் தொடங்கப்படவேண்டுமெனத் தமிழ்நாட்டின் பழைமையை இவர்தான் முதல் முதல் நிறுவியவராவர். இச்செய்தி வின்சென்டு சிமித் (Vincent Smith) முதலிய வரலாற்றுப் பேராசிரியர்களால் போற்றப்பெற்றிருந்தும், இன்னும் பின்பற்றப்படாமல் வடநாட்டு வரலாற்றிலிருந்து தொடங்கப்படுவதுடன் தமிழ் நாட்டின் தொன்மை சிறிதும் இயம்பப்படாதிருப்பது பெருங் குறையாகும். இனியாவது உண்மை கடைப்பிடிப்பதற்கும் தங்கள் மானத்தைக் காப்பாற்றுவதற்கும் தமிழர் விழித்தெழுவார்களாக.

சரிதமுறு பதிபலவும் தழுவுதமி ழகத்தழைப்ப
ஒருகுடைக்கீழ்த் தனியரசா யுவந்திருக்கும் தமிழ்த்தாயே!

ஈன்றெம்மை யெடுத்தேந்தி யெழின்முலையா னமுதூட்டி
ஆன்றமழ லையும்பயிற்றி யகன்றிடுசொற் பொருளுணர்த்திப்
புல்லொழுக்கம் போக்குவித்துப் புகலுமுயி ரினுஞ்சிறந்த
நல்லொழுக்கின் றலைநிறுவி நவிலுமுல கியல்புணர்த்தித்
தன்னுணர்ச்சி யெமக்களித்துத் தற்கால வுணர்ச்சியொடும்
முன்னுணர்ச்சி யறிவித்து முத்திவழி காட்டினையால்!
அத்தகுநின் றிறம்வியந்தே யகநெகிழ்ந்து மகிழ்சிறந்து
வைத்தபெருங் காதலினால் வாயார வாழ்த்துவமே!

சங்கநூல் முதலாகத் தனி[1]யிசைநா டகநூலும்
பொங்குவழி நூல்பலவும் புடை[2]நூலும் படைத்தனையே!

வேதமோ வேதாந்த மோமனுநூ லோபகவற்
கீதையோ வெனுங்கவிகள் கிளர்ந்ததுநின் றிருவாக்கே!

கதி[3]நினக்குக் கதியெனவே கருதவரு மிருபுலவர்
மதியமைவில் நவில்தெய்வ வாக்கமைந்து நின்றனையே!

சிறியசொலிற் பெரிதுணர்த்துந் திறம்நினக்கே யெனவிளக்கக்
குறியகுறள் நிகரிலதாய்க் குவலயத்துப் படைத்தனையே!

வேலழகியா ருவந்த மெய்யுரையே [4]நல்லபரி
மேலழகி யாருரையும் மேவினைநின் விறலினிதே!

மெச்சினார்க் கினியாது வேறுரையுண் டிப்புவியில்
நச்சினார்க் கினியார்தம் நல்லுரைமுன் னவிலுதற்கே!

---

[1] முதனூல்.

[2] சார்புநூல்.

[3] கம்பர் திருவள்ளுவர் பெயர்களின் முதலெழுத்துக்களைச் சேர்த்தால் கதி எனும் சொல் ஆகிறதால் இவ்விருபுலவர் நூல்களே தமிழுக்குக் கதியாகும் எனச் சுவைபடக்கூறல் வழக்கு.

[4] இறையனாரகப்பொருளுரை. வேலழகியார்-முருகவேள்

மறைகேட்டு மமையானான் மணிமொழிக்கே யமைதலினால்
இறையோனா கமமுரைக்கு மீற்றிலுனைப் பாடுதற்கே![1]
ஆரியமா மறைதன்னை யடிதொடரல் மதியாது
சீரியநின் னடிதொடரும் திருமாலுன் னினிமைக்கே![2]
நாகரிகம் காலத்தால் நவநவமாய்ப் புகலோர்க்கு
நிகலவை[3] பெற்றோர்க்கு நிலையமைந்து நின்றனையால்!
வடமொழியிற் கடன்வாங்கி வந்தனையென் றுரைத்துநீ
கடன்கொடுத்த தறியாரைக் கடைக்கண்ணாற் காய்வாயே![4]
சீராரும் திரமிளமே திரிந்ததுன்பே ரென்பாரைப்
பாராளு மன்றெனது பதமெனவுள் நகுவாயே![5]
பவஞானங் கெடத்தமிழ்மா பாடியஞ்செய் தருள்துறைசைச்
சிவஞான முனிவரனின் சீர்விளக்க வருமகவே!
தேனாட்சி செயுமொழியாற் றிசைமணக்குங் கவிபாடும்
மீனாட்சி சுந்தரமால் விளங்குநின தொருமகவே!
மொழிகாட்டுங் கவிநடையே முரணென்போர்க் குரைநடையின்
வழிகாட்டும் ஆறுமுகநா வலவனின தொருமகவே!
அம்மேநின் சுவைக்கடலின் ஆழ்ந்துமனோன் மணியம்னாவல்
எம்மே[6] சுந்தரமால்நின் னிசைவிளக்க வருமகவே!

---

[1] சிவபெருமானின் வழிபாட்டின்முடிவில் ஆரிய மறை ஓதியபின் தமிழ்மறை ஓதப்படவேண்டுமென ஆகமங்கள் கூறுவது தமிழின் இனிமையையே நிறுவுவதாகும்.

[2] 'பழமறைகள் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சைப் பசுங்கொண்ட'லின் திருவிளையாடல் ஈண்டு குறிப்பிடப்படுகிறது.

[3] பிறமொழிகளிலிருந்து கருத்துக்களையுஞ் சொற்களையுந் தமிழ் இயல்வழாது தழுவிக்கொள்ளும் தன்மையுடையது தமிழ்மொழி.

[4] கடாட்சம் என்ற சொல்லின்முன் நிற்பது 'கடை' என்ற தமிழ்ச் சொல் என்ற பொருளும் இதற்குண்டு.

[5] திரமிளமெனும் சொல்லிலிருந்து தமிழ் எனுஞ்சொல் தோன்றியதென்பது பாராளுமன்றமெனுஞ் சொல்லிலிருந்து பார்லிமெண்ட் (Parliament) எனும் ஆங்கிலச்சொல் தோன்றிற்றென்பதை ஒக்குமெனக் கூறி நகைப்பள் தமிழன்னை.

[6] எம். ஏ. (M. A.) பட்டம்.

தரைமுழுதும் புகழ்மதுரைச் சங்கநிறு வியபாண்டித்
துரையெனும்பேர் நிலவுசெம்மல் தோன்றுகின தொருமகவே!

நீதின்றி நினைக்காக்குந் திறன்கொள்முத்து ராமலிங்க
சேதுபதி ராசரா சேசுரனின் திருமகவே!

எனவாங்கு

வாழிய செந்தமிழ் மாதா வேயினும்
இன்னணம் பல்லா யிரமகார் தோன்றிநின்
பன்மாண் இயல்பெலாம் பழகிநின் றேல்புகழ்ப்
புதுவழி யானே புதுக்கிட வுலகின்
முழுமுதற் கடவுளை முன்னுதும் ஒருநீ
வழிவழி சிறந்து வாழ்கமா வெனவே.

—அ. கந்தசாமி பிள்ளை [1]

3. [மதிநுட்பம் மிகுந்து, நயமுடை கற்கருத்துக்கள் வாய்ந்த இவ் வாழ்த்துப்பாவைக் கூர்ந்து நோக்கின், மேலான பாராட்டிற்கு உரிய தாதல் தெளிவுறும்.]

மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா

வளம்பெருகி மகிழ்பூத்த மாவிந்தி யாமடந்தைக்
குளம்பொருவென்[2] றுரைசான்ற தென்னாட்டி னேர்மொழியா

---

[1] இதன்ஆசிரியர் சேலம்சில்லா தோரமங்கலம் திரு. அப்பாசாமி பிள்ளை மகனும், ஆசிரியர் வரதஞ்சைய பிள்ளை இளவலும் ஆவர். 1885ஆம் ஆண்டிற்பிறந்து மதுரைத்தமிழ்ச்சங்க முத்தேர்வுகளிலும் முதல்வகுப்பில் தேறி, கோவை, குடந்தை, சென்னை முதலிய அரசாங்கக் கல்லூரி களில் (Government College) தமிழ்ப்பேராசிரியராயும், சென்னை, அண்ணமலைப் பல்கலைக் கழகங்கள், மதுரைத் தமிழ்ச் சங்கம் இவற்றின் தேர்வாசிரியராயும் விளங்கியவர். பல இனிய தமிழ்ப்பாடல்களையும், தமிழ்ப்பொழில், செந்தமிழ், செந்தமிழ்ச் செல்விகளில் பல ஆராய்ச்சிக் கட்டுரைகளையும் வெளியிட்டிருப்பவர். திருப்பேரூரில் திருச்சிற்றம்பல வரைத் தினமும் வழிபட்டு மாறிலா மகிழ்ச்சியில் மலர்ந்து வருகிறார்.

[2] இந்திய மாதின் உளம்போன்றது தென்னாடு எனக் கூறப்பட் டிருப்பது, இந்திய நாகரிகத்திற்கும், கலைகளுக்கும், நெறிகளுக்கும் அடிப் படை கோலியது தமிழ் நாடே எனும் சரித்திர உண்மைக்கு ஏற்றதாகும்.

இன்னகைய இளையசிறு ரிளங்குதலே யேரென்ன
மென்மையினி மைமுதலா மேதக்க குணங்கனிந்து
நுண்ணியநூற் கலையணிந்து நுவலறியாப் புகழ்சூடிக்
கண்ணியஞ்சேர் முதுகுடிக்குக் களைகணாக் தமிழ்த்தாயே!

குறிஞ்சிமுத லெவகையிற் குறித்ததிணைக் குடிவாழ்க்கை
நெருங்கிநெகி ழாவன்பி னிகழ்களவு கற்பென்றே
அருதிறத்த வொழுகலாற் றினிதொழுகிப் பெரும்பேறு
வருள்கனிந் தெப் பற்றுமறுத் தக்கிலெயா லெங்கிகரும்
அற்றதிரு வருட்பிழம்பை யறிவுருவாங் கந்தழியைப்
பெற்றுவருந் தமிழ்க்குடிக்குப் பிறங்கன்னை யாமமிழ்தே!

தனித்திடினும் பிறமொழிகள் தலைப்பெயினு மொருகிலெயா
இனித்தகினைக் கன்னிவரை யியலா[1]யென் பதுமென்னே?

தொன்மைமுதற் பெறுவனப்பின் றொகையுணரும் புலவர்கினக்
கம்மையிலெ[2]யெனத்தருக்கி யறைவதுமோர் வியப்பன்றே?

முத்துதிரு முறைதிருவாய் மொழிகுறளா முன்னூலைத்
தந்தவெம தாய்மொழிக்குத் தாய்மொழியோர் சேய்மொழியே?[3]

---

[1] வரையியலா யென்பது திருமணமானவள், வரையறுக்கப்பட்ட இலக்கண அமைதியுடையது என இருபொருள் நயமுடையதாகும். தனித்திடினும் திருமணமானவள் போன்ற நலம் பொருந்தியவள், பிறமொழிகள் தலைப்பெயினுங் கன்னி என மாறுகோளணியாய்த் தமிழ் வியக்கத்தக்கதாகின்றது. இவ்வாறு தமிழ் 'மங்கையோடிருந்தே யோகுசெய்வானை' ப் போன்று தெய்வத்தன்மை பொருந்தியிருப்பது ஈண்டுப் பாராட்டப் படுகிறது.

[2] தமிழிற்கு வனப்பு எட்டில் ஒன்றாகிய அம்மை இல்லை யென்று பொய்கூறிப் பழிப்பதுபோல, தாயில்லை யென மெய்கூறிப் போற்றுதல் ஆகிய பழிப்பெருமை (நிந்தாத்துதி) நயம் இங்குக்கண்டு மகிழத்தக்கது,

[3] தமிழின் தாய்மொழியெனச் சிலரால் கருதப்பட்ட வடமொழி வெகுதொலைவிலிருந்து வந்தமொழி எனவும், தமிழாலும் தமிழராலும் போற்றி வளர்க்கப்பட்டதால் பிள்ளைபோல்வதாகும் எனவும் இரட்டுற மொழியப்பட்டுளது.

இத்துணைத்தெம் புதுமையென மேதின்மொழிச் செருக்கெல்லை
அத்துணையு மான்றனின தமைவோரு மக்காளே![1]

எட்டின்முன மெழுதுமெழுத் தின்றுமெதி ராற்றேறக்
காட்டுமினக் கந்நாள்வை கைக்கதையொன் றருமையதே![2]

இழுமென்ற விழுமியநின் னெழுத்தொன்றும் மொழியாய
தழல்வெம்மை தணிந்துநினைத் தகையாத தொருவியப்போ?[3]

உலகறியா வொருகாலத் துளங்குறித்த அறங்குறித்த
நிலவியலாய்! நினக்குநிகர் நேர்வர்நடு நிலையோரே ?[4]

---

[1] வேறுமொழிகளில் அமையாத இன்னின்ன பெருமைகளை யாமுடையேம் எனப்பிறமொழிகள் பெருமை பாராட்டிக் கொண்டிருக்கக் கூடிய காலத்தின் எல்லை, தமிழில் அப்பெருமைகளெல்லாம் பண்டே அமைந்திருப்பதைக் காணுங்காலம் வருமளவுதான்.

[2] ஏடுஎன்ற சொல்லின் முன்னுள்ள ஏகாரத்தின் முடிவு, எழுத்துக்களின் போக்கிற்கு எதிராகச் செல்லல் ஈண்டு நயம்படக் கூறப்படுகிறது. காலமென்னும் ஆற்றிற் கரவாது தமிழ் இன்றும் எதிர்த்து நீந்தி வருவதால், தெய்வத்தன்மை வாய்ந்த அந்நாளில் திருவருள் பெற்ற சம்பந்தர் வையையில் எதிரேறச்செய்தது அவர்பெருமையை நோக்க அத்துணை அரிய செயலன்று என்றபடி.

[3] தழல் என்ற சொல்லிலுள்ள இழுமென்னும் ஒலியுடைய சிறப்பு ழகாரத்தின் குளிர்ச்சியே, சம்பந்தர் அத்தழலிலிட்ட ஏட்டை எரிக்காதிருக்கச் செய்ய வல்லதாதலின், அவர் தெய்வத்தன்மைக்கு இது ஒரு அரிய காரியமன்று என்றபடி.

[4] உளங்குறித்த அறமாகிய அகப்பொருள்பற்றிய இலக்கணநெறியை வேறெம் மொழியும் இன்னும் பெறாதிருந்தும், உலகறியா முற்காலத்திருந்தே நிலவுகின்ற அவ்விலக்கணத்தை நீ உடையையாயிருந்தும், நடுநிலையுடையோர் உனக்கு வேறெம்மொழியையும் ஒப்புக் கூறுவரா ? அல்லது ஒப்புக்கூறுபவர்தாம் நடுநிலையுடையரா ?

அணிமறையா தியற்கைநல மான்றுதெரி பொருணூலிற்
கணிபொருளோ குளிர்நடையோ களிமனத்தைக் கவர்ந்திடலே?[1]

ஞாலமிசை னிதருமை காட்டுகெனின் நல்லிசையோர்
காலமுளப் பாங்குபிற காட்டுபடங் காட்டுவரே![2]

·எண்விழுங்கு மேரணமுன் னியம்புபல நூல்விழுங்க
மண்விழுங்குங் கடல்விழுங்கு மலிபுகழ்க்கு மாறென்னே?[3]

எனவாங்குச்

சிலவும் பலவும் சிர்தெரித் தேனும்
புகன்றோர் புலத்திற் பொருந்தின அன்றிக்[4]
கலித்தொகை முதலாக் காண்டகு சிறப்பின்
ஒண்மாண் புலநா வுள்ளுறை யாய்ந்த
நல்லிசைப் புலவர் நயப்பினு முரைக்க
ஒல்லுமா றுண துனதுயர் புகழே[5]

—அரங்க. வேங்கடாசலம் பிள்ளை[6]

---

[1] இல்லது புனைதல் முதலாய அணியால் மறைக்கப்பட்டு ஒழியாது உலக இயற்கை நலம் அமைந்து தோன்றும் தமிழ்ப்பொருள் நூல்களில் அழகிய சொல்லும் பொருளும் ஒத்து மனதைக் கவர்கின்றன. கணி பொருள்-ஆராயப்படும் பொருள்.

[2] உன்பெருமையைக் காட்டென்பார்க்குக் காலம் (முதற்பொருள்), உளப்பாங்கு (உரிப்பொருள்), பிற (கருப்பொருள்) யாவும் ஒரு அகத் துறைச் செய்யுளில் ஒருங்கே ஒருபடத்திற்காட்டுவதுபோலக் காட்டுகிறாய் என்றபடி.

[3] எண்ணிக்கையற்ற ஏரணம் முதலிய நூல்களை விழுங்குவதற்காக குமரிக்கண்டம் எனும் மண்ணை விழுங்கிய கடலைவிழுங்கும் (தாண்டிச் செல்லும்) தமிழின் புகழுக்கு எதிர் யாது?

[4] எவ்வளவு முடியுமோ அவ்வளவு சொல்லியவாமன்றி.

[5] விரும்பினும் உரைக்க முடியாதது உனது உயர் புகழ்.

[6] இவர் கண்டர்கோட்டையைச் சார்ந்த மோகனூர் அரங்கசாமி பிள்ளை மகன் ஆவர். இவர் 1886-ல் பிறந்தவர். தஞ்சை தூயபேதுரு (St. Peter's) உயர் கலாசாலை, திருவையாற்று அரசர் கல்லூரிகளில் தலைமைத் தமிழ்ப் புலவராயிருந்து, கரந்தைக் கல்லூரிப் பேராசிரியராய்

4. [நாட்டுப் பற்றில் தலைசிறந்த புலவர் தாய்மொழிப்பற்றில் பின்னடைய முடியாதென்பதை இப்பாடல் விளக்குகிறது.]

பன்னிருசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

தான தனத்தன தான தனத்தன
தான தந்தானே.

வாழ்க நிரந்தரம் வாழ்க தமிழ்மொழி
வாழிய வாழியவே

வான மளந்த தனைத்து மளந்திடும்
வண்மொழி வாழியவே

ஏழ்கடல் வைப்பினுந் தன்மணம் வீசி
யிசைகொண்டு வாழியவே

எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ்மொழி
என்றென்றும் வாழியவே

சூழ்கலி நீங்கத் தமிழ்மொழி யோங்கத்
துலங்குக வையகமே

தொல்லை வினைதரு தொல்லை யகன்று
சுடர்க தமிழ்நாடே

வாழ்க தமிழ்மொழி வாழ்க தமிழ்மொழி
வாழ்க தமிழ்மொழியே

---

விளங்குபவர். ஆசானாற்றுப்படை, இன்பப்பத்து, துன்பப்பத்து, பிணிப் பத்து, வறுமைப்பத்து முதலிய பலப்பல அருமைப்பாடற்றொகுதிகளையும், பலப்பல வரவேற்புப்பாக்களையும், வாழ்த்துரைகளையும் இயற்றியவர். காந்தைக் கவியரசு எனுஞ் சிறந்த பட்டம் பெற்றவர். தொல்காப்பியம் தெய்வச் சிலையார் உரைப்பதிப்பாசிரியர். தமிழ்ப் பொழிலின் தொண்டர். சென்னை அகநானூறு மாநாட்டுத்தலைவர்; அந்நூலின் உரையாசிரியரு மாவர். இவர் பாடிய பல தமிழ்ப்பற்றுப் பாடல்களைப் பின்னரும் காணலாம்.

வானம் அறிந்த தனைத்தும் அறிந்து
வளர்மொழி வாழியவே. — சி. சுப்பிரமணிய பாரதி[1]

5. *[நம் தமிழ் மொழியே வழி வழி வந்த நமது செல்வம் என்பதைக் கல்வியறிவில்லாதவர்கள் உள்ளத்துள்ளும் ஊறச்செய்து அடிப்படை உணர்ச்சி யூட்டுவன இப்பாடல்கள்.]*

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

**(ராகம் - காம்போதி - ஆதிதாளம்)**

**மாற்றுப்பா**

எந்தையும் தாயும் மகிழ்ந்துகு லாவி
இயம்பிய திம்மொழியே!—இதன்
முந்துபல் லாயிரம் ஆண்டுகள் வாழ்ந்தோர்
மொழிந்ததும் இம்மொழியே!—அவர்
சிந்தையில் ஆயிரம் எண்ணம் வளர்ந்து
சிறந்ததும் இம்மொழியே!—இதை
வந்தனை கூறி மனதிலிருத்தி யென்
வாயுற வாழ்த்தேனே!—இதைச்
செந்தமிழ் வாழிய! செந்தமிழ் வாழிய!
என்று செபியேனே!

இன்னுயிர் தந்தெமை ஈன்று வளர்த்தருள்
ஈந்ததும் இம்மொழியே!—எங்கள்

---

[1] இப்பாடலின் பெயர்பெற்ற ஆசிரியர் 1882-ம் ௵ பிறந்தவர். இளமையிலிருந்தே கவித்துவம் வாய்ந்து, 1893-லேயே பாரதி எனும் பட்டம் பெற்றார். காசியிலும், காளிகட்டத்திலும் (Calcutta) 1901 வரை கல்வி பயின்றார். எனினும் தமிழ்ப்பற்று மேவி எட்டயாபுரம், மதுரையில் 1904 வரை தமிழ்ப்புலவராய்த் திகழ்ந்தார். 'இந்தியா' 'பாலபாரதா' எனும் தாள் ஆசிரியராய் 1907 வரை நாட்டுத்தொண்டு செய்ததின் பயனாகப் புதுச்சேரியில் 1918 வரை அரசியலில் தலையிடா திருக்க நேர்ந்தது. இறுதியில் சுதேசமித்திரன் உதவியாசிரியராய், 1921-ல் காலஞ் சென்றார். இவர் இயற்றிய பாடல்கள் தமிழ்நாடெங்கும் தலையெடுத்து வழங்குகின்றன. இவர் பாரதியார் எனும் பட்டத்தைத் தனக்கே சிறப்புப் பெயராக்கிக்கொண்டு புகழுடம்புடன் இன்றும் நின்று நிலவுகின்றார்.

அன்னையர் தோன்றி மழலைகள் கூறி
　　அறிந்ததும் இம்மொழியே!—அவர்
கன்னிய ராகி நிலவினி லாடிக்
　　களித்தது மிம்மொழியே!—தங்கள்
பொன்னுடல் மேவப் புதுப்புன லாடிப்
　　புகன்றதும் இம்மொழியே!—இதைச்
செந்தமிழ் வாழிய! செந்தமிழ் வாழிய!
　　என்று செபியேனே![1]

6. [செந்தமிழ்த்தாயின் அந்தமில் இனிமை பெருமைகளை நினைந்து நினைந்து அடிதொறும் விளித்து வாழ்த்தும் உணர்ச்சிமிக்க இப்பாடல்கள் 6, 7, 8-ம் கேட்போர் உளத்தை உருக்கும் தகையன.]

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

வானார்ந்த பொதியின்மிசை வளர்கின்ற மதியே!
　　மன்னியமூ வேந்தர்கடம் மடிவளர்ந்த மகளே!
தேனார்ந்த தீஞ்சுவைசால் திருமாலின் குன்றம்
　　தென்குமரி யாயிடைநற் செங்கோல்கொள் செல்வி!
கானார்ந்த தேனே! கற் கண்டே! நற் கனியே!
　　கண்ணே! கண் மணியே! அக் கட்புலம்சேர் தேவி!
ஆனாத நூற்கடலை அளித்தருளும் அமிழ்தே!
　　அம்மே! நின் சீர்முழுதும் அறைதல் யார்க்கெளிதே?

ஆற்றிடினும் தீயிடினும் அன்பர் தமைக் காத்தே
　　அவர் வேண்டும் பேறருளும் அன்பே! புன்மாக்கள்
போற்றிடினும் தூற்றிடினும் பொருள்செய்யாப் பொறையே!
　　பூவிலிணை மொழியில்லாப் பொலிவுடைய பொற்பே!
மாற்றறியாப் பொன்னே! நன் மணியே! செஞ்சுடரே!
　　வாடாத மண மலரே! மணந்தரு தென் காலே!

---

[1] பாரதியாரின் தேசியப்பாடல் ஒன்றில் சில சொற்களை மட்டும் மாற்றி மொழிப்பற்றுப் பாடலாகச் செய்தவர் திரு. அ. கந்தசாமி பிள்ளை யாவர். அவ்வாறாய இப்பாடலைப் படிக்கும்பொழுது மாற்றுப் பாவாகத் தோன்றாதிருப்பது இருபெரும் புலவரின் ஒரு பெரும் சக்தியை விளக்க வல்லதாகும்.

2524



ஏற்ற விளங் கோலமுடன் என்றென்றும் வாழ்வாய்
[1]எங்காரந்தைத் தமிழ்ச்சங்கத் தினிதுறைசெந் தமிழே!

—அரங்க. வேங்கடாசலம் பிள்ளை

7. பதினன்குசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

பெருகார்வ மோடு முனைகாளை மன்னர்
பிரியாத தொண்டு செயலாலே
பெரியார் புலத்த முதியோர் நலத்த
பெருநூற் கலன்கள் தாலாலே
ஒருகால் தனக்கே யிணையார்கொ லென்ன
உறுபோர் தொடுத்த ஒருமாதும்
உலகோர் வழக்கும் அறவே செருக்கும்
ஒழிகிற்க வென்ற முதலாயே!
மருவார் தடத்த மலிமேடை மீது
மணமோடு வந்த சிறுகாலே!
மதியே! மதித்தண் வளமே! யெமுள்ளம்
மகிழ்வித்து நிற்கும் ஒருதேவே!
[2]திருவார் கரந்தை நகரேயதொண்டு
திகழ்கின்ற சங்கம் அதுமேவி
தினநூறு நூறு மகவோர் தமக்குப்
பெருவாழ் வளித்து வளர்வாயே!

—அரங்க. வேங்கடாசலம் பிள்ளை

---

[1] வேண்டுவோர், 'எங்கடமி ழகமதனில் இனிதுறைசெந் தமிழே' எனப் பொதுவாகவும் அமைத்துக்கொள்ளலாம்.

[2] வேண்டுவோர், கீழ்க்கண்டவாறு பொதுவாகவும் அமைத்துக் கொள்ளலாம்:—

திருவார் காந்தை முதலாய சங்கம்
திகழ்கின்ற இந்த நிலமேவி
தினநூறு நூறு புலவோர் அளிக்கும்
செழுநூல்கள் கொண்டு வளர்வாயே.

8. இரட்டை விருத்தம்

சரண கமலாலயத்தை எனும் இசை.

இறையவனே டாறுமுகன் கலைமகள்முற் றேவருநின்
இனியசுவை யார்தருமோர் நசையாலே
இலகுதமிழ் வாணர்களா னினதுபுகழ் பாடிடுவார்
இசைநெடுமா லேவுபணி புரிவானே!
குறுமுனிதொல் காப்பியன்நற் கபிலன்இணை சேர்பரணன்
குறள்முனிஔ வைமுதல் நல் லிசையோர்கள்
குலவு சங்க மேவினர்கள் திருமனத்தி னூடரசர்
குமணன் வள்ள லார்கரத்தும் வளர்வாயே!
மறுவறு வெண் மாமதியம் பொழிதருதண் ணேர்நிலவே!
மழலையர்கள் ஏர்மொழியே! அமிழ்தூறும்
மணிவரைப்பொன் னும்நிலத்தே வளர்கணுவி லாக்கரும்பே!
மலியமிர்த மேநிறைந்த கடல்போல்வாய்!
நிறைதருசெந் நூலுடையாய்! அழிவிலாவா ணுளுடையாய்!
நினையுலகில் நேர்வதெது? எமையாள்வாய்!
நிலவுதிரு வார்கரந்தை நகரில் எழில் மேவுசங்கம்[1]
நெடிது வளர்வாய் எமது அனையாளே!

—அரங்க. வேங்கடாசலம் பிள்ளை

---

9. [தமிழ்த்தாயிடத்து அன்பு பெருகப் பெருக அவளை அழைக்கக் கூடிய அருமைப்பாடுகளுக்கும் அளவில்லையன்றே? அவற்றுட் சிலவற்றை ஈண்டுக்காணலாம்.]

கற்றறி புலவருள் மகிழா களியா
நிச்சலும் உறைதரு கனியே! சுவையே!
கட்டிவி ளையுமொரு கழையே! அளியேம் உளமூறும்

---

[1] 'நிலவுதிரு வார்தமிழர் தமதுநில வாழ்வதுவாய்' எனப் பொது வாகவும் அமைத்துக்கொள்ளலாம்.

கட்செவி யணியிறை யெனவே முதிரா
முத்தமிழ் துறைவளர் கடலே![1] மலையே!
கற்பக மேனவிழை வனவே தருவாய் பெருதேவி!
உற்றன இடரவை களையா மறவா
நிச்சிறு வர்கடமை அயலார் பழியா
துச்சமி கவடைய அருள்வாய் கலையே இணையாக
ஒத்தவெ றுமொழிகள் விழவே புலவ
நித்தரை யதுதனில் நிலையா வளர்வாய்!
ஒப்பிலை யெனனனி புகழ்வார் மொழிநூல் உரைகாரர்
சுற்றிய வுடைதிரு மணிமே கலையே
முச்சியி லணிவது சிதரு மணியே
தொக்கபல் சிறுவர்கள் பெறவே தருவாய் கலைமானே!
தொத்தும லர்களணி பொழில்சூழ் வளமார்
தெற்குறு மலைபெறு குறுமா முனிவோன்
சொற்குமி கமகிழ மொழியா மணமார் சிறுகாலே!
தெற்றென மறைவளர் குறளா ரமையே!
எட்டலர் தொகைவிரி மலரார் கொடியே!
செப்புறு நிலமக டனிமா மகளே! தமிழாயே!
செப்பமு டையவர்கள் உளமே எனவே
இக்கழ கமுமுயர்[2] நலமே யுறவே
திக்குள வரை இறை என வாழியவே இனிதாயே!

—மு. வே. மா. வி. உலகவூழியர் வாடாக்கரந்தை.[3]

---

[1] முத்து + அமிழ்து + உறை + வளர்கடல் எனவேறு வகையாகவும் பிரிக்கலாம்.

[2] "இத்தமி ழுகமுயர்" எனவும் கொள்ளலாம்.

[3] இவர் தஞ்சைசில்லா கறையம்பட்டியில் 1906-ம் ஆண்டு பிறந்தவர் மதுரைத் தமிழ்ச்சங்கப் பண்டிதர் தேர்வில் முதன்மையாகவும் தமிழ் வித்துவான் தேர்வில் முதல் வகுப்பிலும் தேறி உயர்நிலைப்பள்ளிகளில் தமிழாசிரியராய் விளங்குபவர். தமிழிசை, சோதிடம், சித்தமருத்துவப் புலமை வாய்ந்தவர். சந்திரவிலாசம் எனும் இசைநூலின் உரையும், பல இசைப்பாடல்களும், கட்டுரைகளும் இயற்றி பல சங்கங்களில் சிறந்த விரிவுரை ஆற்றிவருபவர்,

[பல சிறிய பாடல்களை ஈண்டுக் காணலாம். அவற்றுள் முதலிரண்டு அடிகளும் கடுகைத்துளைத் தேழ் கடலைப்புகட்டிக் குறுகத் தரித்தாங்குத் தமிழ்த்தாயின் நலங்கூறி வாழ்த்துவன.]

### 10. கலித்தாழிசை

இயற்கையிலே கருத்தாங்கி இனிமையிலே வடிவெடுத்துச்
செயற்கைகடந் தியலிசையில் செய்நடமே! வாழியரோ!
பயிற்சிநிலப் பயிர்களெலாம் பசுமையுற ஒளிவழியே
உயிர்ப்பருளும் திறம்வாய்ந்த உயர்தமிழ்த்தாய்! வாழியரோ!

—திரு. வி. கலியாணசுந்தர முதலியார் [1]



### 11. எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

தேனினும் இனியநற் செந்தமிழ் மொழியே
தென்னாடு விளங்குறத் திகழுந்தென் மொழியே
ஊனினும் ஒளிர்வுறும் ஒண்டமிழ் மொழியே
உணர்வினுக் குணர்வதாய் ஒளிர்தமிழ் மொழியே

---

[1] இவர் திருவாரூர் விருத்தாசல முதலியார் புதல்வராய் 1883-ல் பிறந்து சென்னையில் கல்விகற்று வெசுலி (Wesley) கல்லூரியில் சிறிது காலம் தமிழாசிரியராயிருந்து 1921 முதல் தேசபக்தன், நவசக்தி தாளா சிரியரானார். தமிழ்நாட்டு அரசியல் பொதுக்கட்சி வினைக்குழு உறுப்பின ராய் (Congress Working Committee member) 1925-ல் மாகாணத் தலைவரானார். சென்னைத் தொழிலாளர் சங்கம் நிறுவிய தங்கர். இவர்தம் நடைவன்மையும் நடைநயமும், எளியோர்க்கிரங்கும் பெருந்தகவும், எல் லோர்க்கும் இனியராயொழுகும் பண்புடைமையும், முதுமை யெய்தியும் ஊக்கமும் இளமை நீங்கா இயல்பும், தூய்மையும், துறவுள்ளமும் தமி ழுலகம் நன்கறிந்தவை. சைவசித்தாந்த மாசமாசத்தின் 1944 ஆண்டுத் தலைவரேனும் சமரசப் பண்புடையோர். முருகன் அல்லது அழகு, பெண்ணின் பெருமை முதலிய பலப்பல நூல்களின் ஆசிரியர் ஆவர்.

வானினும் ஓங்கிய வண்டமிழ் மொழியே
மாந்தருக் கிருகண்ணு வயங்குநன் மொழியே
தாணியில் சிறப்புறுக் தனித்தமிழ் மொழியே
தழைத்தினி தோங்குவாய் தண்டமிழ் மொழியே!

—கா. நமச்சிவாய முதலியார்[1]

12. ஆசிரியப்பா

இன்பமாகு மிறைவன் புதல்வி
இனிமையென்னு மிளந்திருச்செல்வி
முன்புமுப் பெருஞ் சங்கமுதல்வி
முத்து முத்தெனு முத்தமிழ் வாணி
தென்பரவை திருப்புக ழார்க்கத்
திக்கெலாமிசை மிக்கச்சிறந்தாள்
அன்பருளறி வின்பவரசி
யன்னைவாழி அருந்தமிழ்த்தேவி!

சுவாமி சுத்தாநந்த பாரதியார்[2]

---

[1] இவர் 1876 முதல் 1936 வரை வாழ்ந்தவர். நல்லாசிரியன், சன விநோதினிப் பத்திராசிரியர். மேரிராணி கல்லூரி, இராசதானிக் கல்லூரித் தமிழாசிரியர் (1920-1934). சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்க்கல்விக் குழுத்தலைவர் (Chairman, Tamil Board of Studies). பல பாடபுத்தகங்களை இயற்றியவர்; ஆத்திசூடி முதலிய பல நீதி நூல்கள், தணிகைப் புராணம், இளம்பூரணம்(எழுத்து,சொல்லதிகாரம்)முதலியவற்றின் பதிப்பாளர். 1911-ம் ஆண்டில் ஐந்தாம் சார்சு மன்னர் தில்லியில் முடிசூடிய பொழுது பாடிக்கொடுத்த கமலபந்தம் இலண்டன்மாநகர் இந்தியா நிலயத்தில் (Office) வைக்கப்பட்டிருக்கிறது.

[2] இவர் சிவகங்கைக் கருகிலுள்ள பனையூர் சடாதரய்யர் புதல்வராய் 1897-ல் பிறந்தவர். தமிழ், ஆந்திரம், வங்கம், இந்தி, ஆங்கிலம், பிரஞ்சு மொழி பயின்று அவற்றின் காவியங்களில் திளைத்தவர். இளந்துறவியார். இரமண இருடி, அரவிந்தர் பால் பயின்றவர். சேரமாதேவி குருகுல ஆசிரியராயும் பாலபாரதி உதவி ஆசிரியராயும் இருந்தவர். இவரியற்றியுள்ள தமிழ் நூல்களே ஓர் சிறு சுவடி நிலயமாகும். அவற்றுள் பைந்தமிழ்ச் சோலை, தமிழ்க்கனல், தமிழுணர்ச்சி முதலியன தமிழ்ப் பற்று நூல்கள். பலநெறி நூல்கள், வரலாறுகள், கதைகள், கட்டுரைகள், உடலியல்நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்களைப், பெரும்பகுதி தமிழிலும், சிறுபகுதி ஆங்கிலம், பிரஞ்சிலும் இயற்றியுள்ளார், இயற்றியும் வருகின்றனர்.

13. எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

தமிழினிய தெய்வதமே மொழிகள்குலத் தனிவிளக்கே
 தகவெழில்மெய் சீர்த்தசொல்லின்
அமிழ்துவிழைக் தடுத்தபல புலவரெலாம் அசையலேயைக்
 கடைந்தபொழு தழகினேங்கும்
தமிழினிடை எழுக்தொளிக்குஞ் செல்வி[1] அறி வெனுமமலன்
 துணைவியருண் முதல்வி தூய்மை
கமழ்கவிதை உலகுபடை கவிஞருளங் கனிவிக்குங்
 காதல்வளர் கன்னி வாழி

—க. சோமசுந்தர பாரதியார் எம். ஏ. பி. எல்.[2]

14. பதினன்குசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

பேரார்ந்த குறுமுனிவர் பரமனருள் வாயிலாய்ப்
 பெற்றதிரு மேனி கொண்டு
பீடுடைய முப்பகுதி வாய்ந்து மூவேந்தரும்
 பெருமைபெறு தொண்டி யற்றப்
பாரார்ந்த புகழெழச் சங்கமூன் றினுநின்று
 பரமனடியேவழுத்தும்
பைந்தொடை மலிந்தொழுகுசைவவை ணவகுரவர்
 பாட்டிற் பொலிந்தெ ழுந்து
ஏரார்ந்த பாவலர் கணக்கிலவர் போற்றவே
 எம்மொழிக் குஞ்செம் மையாய்
இன்றுவரை நின்றிலகு வென்றிபெரு தாயினை
 இணைக்கரிய இன்ப மொழியைச்

---

[1] கலைமகள், கம்பருக்கு இடைச்சியாய் வந்து 'தமி' என்ற சொல் வழங்கியருளி மறைந்தது.

[2] இவர் பசுமலையில் பெயர்பெற்ற வழக்கறிஞராவார். தமிழிற் சிறந்த ஆராய்ச்சியாளர். அண்ணமலைப் பல்கலைக்கழகத் தமிழ்ப்பேராசிரியராய்ப் பல்லாண்டு திகழ்ந்தவர். மாரிவாயில் முதலிய நூல்களின் ஆசிரியர். செந்தமிழ், தமிழ்ப்பொழில் முதலியவற்றில் பல அரிய ஆராய்ச்சிக் கட்டுரைகள் வெளியிட்டிருக்கின்றனர். இவர் பலப்பல தமிழ்க்கூட்டங்களில் தலைமை தாங்கியும் சொற்பொழிவாற்றியும் புகழ்பெற்றுளர்.

சீரார்ந்த தேவர்முதல் யாவரும் பருகிடினும்
தெவிட்டாத வமுதை ஈசா
தெய்வத்தி ருத்தமிழை வையத்தி ருப்பளவு
முய்யத் திருக்க வருளே.

15. செம்மைத் தனிமொழி, தேன்மொழி, நீதி சிறக்குமொழி
வெம்மைக் கிடம்பெற லாகா மொழிபண் விளையுமொழி
நம்மைப் புரக்குநற் றாய்மொழிக் காய்நலம் நாடுமிந்த
அம்மைக் குரனும் நெடுவாழ்வும் ஈசன் அருளுகவே

—தி. இலக்குமண பிள்ளை[1]

16. ஓம்சக்தி ஓம்சக்தி ஓம் என்ற இசை

வாழிய வாழிய வே செந்தமிழ்
வாழிய வாழிய வே
வாழிய வாழிய வே செந்தமிழ்
வாழிய வாழிய வே
ஊழி பலகண்ட செந்தமிழின்
உண்மையை யாரறிவார்
எழிசையிற்சிறந்த செந்தமிழ்
என்றென்றும்வாழியவே

---

[1] இவர் திரவியம்பிள்ளை மகனாக 1864ல் திருவனந்தபுரத்தில் பிறந்தவர். இளமையிலிருந்தே தமிழ் இயல் இசையில் வல்லவர்; தியாகையர் தெலுங்குக் கீர்த்தனைகளை ஒப்பத் தமிழிற் பாடுவதில் வல்லுநர்; அவரது பாடல்களுட் சில கல்லார்க்குங் கற்றவர்க்குங் களிப்பருளி மெய்ம்மறந்து பாடச் செய்வன; இதுவே சிறந்த கவியின் நிறைந்த மாட்சியாகும். இத்தகைய பாடல்களுள் 200 இசைக்குறிப்புடன் வெளிவந்துள. இரவிவர்மாவைப்பற்றிப்புதிதாக ஒன்றும், மேலைநாட்டுச் செகப்பிரியர், சபாக்ளிசு கவிகளை மொழிபெயர்த்து இரண்டும் ஆகமூன்று நாடகங்களையும், ஞானர்தன் அடிமாலை, நினைவாட்சி, இயற்கைக்குறிப்பு, எனுந் தமிழ்ப்பாடல்களையும் பல ஆங்கிலக் கட்டுரைகளையும் நூல்களையும் இயற்றியவர். திருவாங்கூர்அரசரின் பண்டாரப் பெரிய ஆட்சியாளராயிருந்து (Major Treasury Officer) விடுதிபெற்று, சிலகாலம் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழிசை ஆசிரியராய் விளங்கியவராவர்.

கள்ளங்களங்க மில்லாப் பண்டைத்தொல்
காப்பியன்கண்டதமிழ்
வள்ளுவன்கண்டதமிழ் என்றென்றும்
வாழிய வாழியவே
நீரிலெதிர்ந்த தமிழ் எரியும்
நெருப்பில் நின்ற தமிழ்
ஊரும் பெயரு மில்லான் பாடிய
ஒண்டமிழ்[1] வாழியவே

—பெ. கோவிந்த மூப்பனர்[2]

17. "தலையே நீவணங்காய்" எனும் இசை
எந்தாய் வாழியவே—எங்கள்
இன்னுயிர் வாழியவே
தந்தை சக்தி சிவனருள் பெற்றெங்கள்
தாரகம் வாழியவே!

ஆவிக் காரமுதே—அரு
ளானந்த மானவளே
தேவர் போற்றிடச் சீர்பெற் றொளிர்கநீ
தெய்வத் தமிழணங்கே!

அன்பை வளர்ப் பவளே—அறி
வானகலைமகளே

---

[1] இறையனாகப்பொருள்

[2] இவர் 1902-ல் திருவில்லிபுத்தூர் பெருமாள்மூப்பனரின் மகனாகப் பிறந்தவர். இளமையிலிருந்தே தமிழ்ப்பற்றுமிக்குப் பெரும்பகுதி தாமாகவே கல்விபயின்று அண்ணாமலைப் பல்கலைக்கழக வித்துவான் ஆகி ஆசிரியர் பயிற்சியும் பெற்றவராவர். பள்ளத்தூர், கொடுமுடி உயர்கலாசாலைத் தமிழாசிரியராயிருந்து இப்பொழுது பரமக்குடி உயர்கலாசாலையில் அவ்வேலை பார்த்துவருகின்றூர். உணர்ச்சி மிக்க எளியபாடல்களை இயற்றுவதில் சிறந்தவராவர். இவர் பாடியுள்ள நூல்களாவன:- (1) தமிழ்ப் பதிற்றுப்பத்து (2) தமிழர் பதிற்றுப்பத்து (3) ஒருபா ஒருபஃது (4) முடிமன்னர் மூவர் (5) சிறுவர்க்குரிய சிலபாட்டுக்கள் (6) கடையெழுவள்ளல் சரிதம் முதலியன.

தன்போலேபிறர் என்றுணர் சுத்த
சமரசங் கண்டவளே!

காலைச் செங்கதிர் போல்—எங்கள்
காட்சிக் கினியவளே
வேலை சூழ் உலகெங்கும் விரிகவுன்
வீரத் திருப்புகழே!

—சுவாமி சுத்தானந்த பாரதியார்



18. [ஆடவர் சிலம்பம், வில், வேல், வாள் பயின்றதற்கேற்ப மங்கையர் பந்து, ஊசல், அம்மானை, கழங்கு ஆடிவந்தனர். பந்தைப் பாடிக்கொண்டே ஆடினமையின் கந்துக வரிப்பாடல்கள் பல எழுந்தன. அவற்றுள் பழைய இசைத்தமிழ்ப் பகுதியின் இயல்புகள் சிறிது மிளிர்கின்றன. இப்பாடல் பந்தாடலுக்கேற்றபடி தத்திப்பாயும் ஓசையுடன் இசைந்திருப்பது பாடிமகிழத் தக்கதாகும்.]

கந்துகவரி

கொந்தலர்ந்த கோதைசூடு கொண்டலாட ஓடியே
முந்தளவில் மூதறிஞர் தந்தபுகழ் பாடியே
தந்தையோடு கந்தன்மேய சங்கம்வளர் பீடினள்
செந்தமிழ்மான் வாழ்கவென்று சென்றுபந் தடித்துமே
சேணிலாணை சென்றுவாழ்க என்றுபந் தடித்துமே

இந்துநுதல் வேர்வரும்ப எங்கணும் பரந்துலாய்
முந்துலகெ லாம்புரந்து மூவர்முடி மேயினள்
புந்தியின்மே லோங்குமின்பம் பொங்குகனி யாயினள்
செந்தமிழ்மான் வாழ்கவென்று சென்றுபந்த டித்துமே
சேணிலாணை சென்றுவாழ்க என்றுபந்த டித்துமே,

சிந்தூரஞ்சேர் குளமருங்கு செங்கயல்கள் திரியவே
சிந்துகங்கை சிங்களம் கடாரம்வென்ற சீரினுள்
தந்தவளம் ஒண்புலவர் கொளவழங்கு தகைமையாள்
செந்தமிழ்மான் வாழ்கவென்று சென்றுபந்த டித்துமே
சேணிலாணை சென்றுவாழ்க என்றுபந் தடித்துமே.

—ந. மு. வேங்கடசாமி நாட்டார்[1]

19. [இவ் வெளிய இனிய இசைப்பாடல் கேட்போர் உள்ளங் குளிரச் செய்வதாகும்.]

இராகம் மாண்டு—தாளம் ஆதி
(ஆதரவற்ற உயிர்க்கெல்லாம் என்ற இசை)

சந்தனக் குன்றளித்த[2] தமிழ்த்தாயே—மூன்று
சங்கத்தையும் வளர்த்த தமிழ்த்தாயே—சோம
சுந்தரர் தலைமைகொண்ட தமிழ்த்தாயே—முன்போல்
தோன்றி யெங்கும் வளர்வாய்தமிழ்த்தாயே.

சொட்டுஞ் சுவையளிக்குந் தமிழ்த்தாயே—இளஞ்
சுரும்பருங் குறம்பாடுந் தமிழ்த்தாயே—சதா

---

[1] இவர் நடுக்காவேரி முத்துசாமி நாட்டார் புதல்வர் (1884—1944) மதுரைத் தமிழ்ச் சங்க முத்தேர்வுகளிலும் முதன்முதல் முதற்பரிசு பெற்றவர்; திருச்சி பிசப் ஈபர் கல்லூரியில் 25-ஆண்டும், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் 7ஆண்டும், தமிழ்ப்பேராசிரியராயிருந்தவர். கரந்தைத் தமிழ்ச் சங்கக் கல்லூரித் தலைவராவர்; சென்னை, அண்ணாமலை, காசிப் பல்கலைக் கழகங்களிலும், மதுரைத் தமிழ்ச் சங்கத்திலும் தேர்வாளர்; பாடதிட்டக் கழக உறுப்பினர். ஏறக்குறைய எல்லாத் தமிழ்ச்சங்க, பல சைவ சங்க ஆண்டுவிழாக்களிலும் தலைமை பூண்டு, சொற்பொழி வாற்றித் தமிழ்நாடு முழுவதும் புகழ்பெற்றவர். திருவிளையாடற்புராணம், சிலப்பதிகாரம், மணிமேகலை, அகநானூறு முதலிய பல நூல்களின் உரை யாசிரியர். நக்கீரர், கள்ளர் சரித்திரம், சோழர் சரித்திரம், வேளிர் வரலாற்றின் ஆராய்ச்சி முதலிய பல நூல்களின் ஆசிரியர். பல தனிப் பாடல்களும் இயற்றிப் பண்டித நாவலர் பட்டம் பெற்றவர், தமிழ்த்தாயின் அரும்பெரும் தொண்டர் ஆவர்.

[2] அகத்தியர் இருப்பாகிய பொதிகை மலை.

எட்டுத் திசைமணக்குந் தமிழ்த்தாயே—முன்போல்
எழிலுட னேவளர்வாய் தமிழ்த்தாயே.
தென்னன்புகழில் வந்த தமிழ்த்தாயே—எனைச்
சேர சோழற்குரிய தமிழ்த்தாயே—உயர்
எண்ணும் எழுத்துங்கொண்ட தமிழ்த்தாயே—முன்போல்
எழிலுட னேவளர்வாய் தமிழ்த்தாயே.
கள்ளங் கபடமில்லாத் தமிழ்த்தாயே—கம்பன்
கற்பனை மிலுதித்த தமிழ்த்தாயே—உயர்
வள்ளுவன் முப்பாலில்வந்த தமிழ்த்தாயே—முன்போல்
மணிமுடி சூடிவாழ்வாய் தமிழ்த்தாயே.
குமரிவேங் கடத்தெல்லைத் தமிழ்த்தாயே—இனம்
கூறுமுத் தமிழ்கொண்ட தமிழ்த்தாயே—எங்கள்
சமயகுரவர் செப்புந் தமிழ்த்தாயே—முன்போல்
தருமஞ் சிறக்கவாழ்வாய் தமிழ்த்தாயே.
தத்வஞான முரைக்குந் தமிழ்த்தாயே—பல
சாத்திரத் தையுஞ்செப்புந் தமிழ்த்தாயே—எங்கள்
வித்வக் கவிக்குஞ்சரத் தமிழ்த்தாயே—முன்போல்
வெற்றி முழக்கி வாழ்வாய் தமிழ்த்தாயே.

—சனகை. கவிகுஞ்சர பாரதி

வாழ்த்து

20. [*தமிழ் மொழியின் தகைசால் பழ வரலாறும், அதன் தனிச்சிறப்புகளும் இதில் இயம்பப்படுகின்றன.*]

நிலைமண்டில ஆசிரியப்பா

திருவுங் கல்வியுந் தெய்வத் தன்பும்
பன்னி ராயிர வாண்டி னெடுநாள்
முன்னர் விளங்கத் தென்மா மதுரையில்
பார்புகழ் தென்னன் சீர்பெற நாட்டிய
தமிழ்முதற் கழகந் தன்னில் வளர்ந்த
அமிழ்தத் தென்மொழி அணியொடு வாழ்க!
எல்லா மொழியினு மின்னியன் மொழியாய்
வயங்கும் இறைதரு முதுதமிழ் வாழ்க!

"என்றுமுள தென்றமி ழியம்பியிசை கொண்டான்"
என்றுநற் கம்ப னிசைத்தசொல் வாழ்க
"மறையிலங்கு தமிழ்வல்லா" ரென்றுசம் பந்தர்
திருவாய் மலர்ந்த மறைமொழி வாழ்க
ஆண்டு பதினா யிரத்தின் முன்னர்
எருதூ ராட்சி யதன்பின் கழகி
பின்சா லடியர் பேணங் காடியர்
பின்னர்ப் பார்ப்பிலன் ஆட்சி நிகழ்த்திய
சுமேரி யர்பேண் டமிழ்ச்சொல் வாழ்க
தென்மா மதுரை கடல்கோட் பட்ட
பொழுது தமிழர் சென்று தங்கிய
பற்பல நாட்டு மொழித்தமிழ் வாழ்க
தமிழ்த்தாய் தந்த தண்மலை யாளம்
வடுகன் கன்னடம் வண்மைத் துளுவம்
முன்னைய மொழிகளில் மன்றமிழ் வாழ்க
பிராகிருதம் பாலி வடமொழி யிந்தி
மராடி குர்ச்சரம் வங்காளி முதலாம்
மொழிகளில் வழங்குந் தமிழ்க்கரு வாழ்க
உயிர்மெய் வெவ்வே றவிர்மொழி வாழ்க
இயற்கை யின்னொலிப் பழமொழி வாழ்க
நவையில் பால்திணை யில்வினைத் தெளிவில்
சொற்றொட ரழகில் முற்றுசொல் வாழ்க
ஆய்தந் தன்னாற் பலவொலி படைத்துச்
செயற்கை மொழிபல செய்யனை வாழியே!

—விருதை. சிவஞான யோகியார்[1]

---

[1] இவர் 1840 முதல் 1939 வரைவிளங்கியவர். திருப்புக்கொளியூர் அவிநாசியிற் பிறந்து பழனி மாம்பழக் கவிச்சிங்க நாவலரிடம் தமிழ் பயின்று விரைவாய்ப் பாட்டியற்றும் வன்மை வாய்ந்தவர். விருதுநகரில் நெடுநாட்டங்கிச் சொக்கநாத சுவாமி கோயில் திருப்பணிபுரிந்தவர். சித்தாந்த நூல் பயின்று சிவஞானபோதத்தில் பெரிதும் ஈடுபட்டு அதன் பெருமைகளை விளக்க எட்டயாபுரம் சென்று வடமொழி பயின்று வியாசர் பிரம சூத்திரங்களைச் சங்கரர், இராமாநுசர், மாத்துவர், நீலகண்டர் பாடியங்களுக்கு

[பல்லாண்டெனும் பதங்கடந்தானுக்கும் பல்லாண்டு கூறுதல் பழந்தமிழ் வழக்காம். இதற்கேற்பத் தமிழின் தன்னிகரற்ற பழமை ஈண்டு பலபட விரித்துக் கூறப்படுகின்றது. மனோன்மணீயத்திலுள்ள சிவகாமி சரிதை மணங்கமழ்ந்து திகழ்வது இவ்வினிய பதிகம்.]

தமிழ்ப் பல்லாண்டு

பாடுதுநாம் தமிழணங்கின் பல்புகழும்; பாடிப்
பரவுதுமே லவளருளப் பட்டுயர்வோ மன்றே;
ஈடுயர்வில் மொழிக்குழவி என்றும்வள ரிளமை
எழிலினிமைக் கிழவியைநா மேத்தியிறைஞ் சிடுவாம்.

நாவலநற் றீவிலுயர் நாயகமா யொளிர்வாள்
நாகரிக முலகில்முதல் நல்கிமகிழ் நங்கை
காவல்பெறுங் கடவுளர்க்கிங் கேவல்தரு மிறைவி
கவினனைத்துங் கருவுயிர்த்த கூரிகைநங் கன்னி.

முதலிலவோர் மூப்புமிலள், மொழிகள்குல முதல்வி
முன்னமுயிர்க் கிருளிரிய முறுவல் முகிழ்த் தொளிர
உதவியுயர் திணையினருஞ் சுட்டுணர்வி னுரையை
உலகில்விலங் கிடைநரர்க்கு விற்றுரிமை தந்தாள்.

---

ஏற்ப அமையுமாறு தமிழில் யாத்தனர். இவர் வடமொழி தமிழின் சிதை வென நாட்டித் தனித்தமிழியக்கத்தைத் தொடங்கினர். பின்னர் பெரும் பாலும் கோயிற்பட்டியிலேயே தங்கி பத்திவிளை கழகம், திராவிடர் கழகங் களைத் தோற்றுவித்துப் பல்லாண்டு நடத்தினர். சித்தவைத்தியத்தில் ஒப் பற்ற புலமை வாய்ந்து நான்கு முறை சென்னைமாகாண சித்தமருத்துவ மாநாடுகூட்டி அதன் அமைச்சராய்ப் பலருக்குப் பட்டம் வழங்கிச் சித்த மருத்துவ அரசாங்கக் கல்லூரி நிறுவ ஏற்பாடு செய்ததால் "ஆயுள்வேத பாற்கரர்" என்னும் பட்டம் சூட்டப்பெற்று மாகாண மருத்துவ சங்கத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இவர் நூறாண்டு வலிவுடன் வாழ்ந்ததே இப்பெருமைக்கு ஏற்றசான்றாகும். இவரியற்றிய வேறு நூல்களாவன:—கோவிற் புராணம், கடவுள்மாலை, தமிழ்மொழியும் சிவ நெறியும், விபூதி ருத்திராக்க தாரண நிருபணம், தேவோபாசனா தீபம், சிவஞான விளக்கம், வேதாகம உண்மை, பதஞ்சலி யோக சூத்திரம், தோமிர்த மஞ்சரி, தமிழர் தொன்மை, தமிழும் மருத்துவமும்முதலியன.

வசையுறுபாழ் வயதிலள்முன் முழுதுலகை யாண்டாள்
வரும்வடசொற் கிடம்வடக்கே வழங்கிமகி ழுளியாள்
திசைமொழிகள் கருவழியத் தேக்கெறியத் தின்ற
செய்மொழியின் பசிகுறையைச் செய்துயர் செந்தமிழாள்.

மண்ணுலகில் மொழிகள்பல மாண்டிடநாம் காண்போம்,
வளமலிநூல் பலபடைத்தும் வாழ்ந்திலவம் மொழிகள்.
எண்ணரிய வயதுமுதுக் குறைவறத்தால் முதியள்,
எழிலிளமை வளமிறவாக் கன்னிதமிழ்க் கடவுள்.

ஞாலமொழி பலவிறக்கத் தானிலவுஞ் செய்யாள்
நல்லியல்பை யுயிர்கிலையாக் கொண்டதமிழ் நங்கை;
காலவிடம் தொட்டறியாக் கட்டிளமை காட்டும்
கற்புயர்நற் காதலுயர் மெய்ப்புலவர்க் கருள்வாள்.

பொய்ம்மொழியாப் புலமைவளம் வள்ளுவர்போல் வாரும்
பேற்றுமறி வறவுரிமை கிரனனை யாரும்
மெய்ம்மொழியா லுயர்த்தபுகழ் மடியில்வளர் தமிழை
மேதினியாள் முதல்மகளாய் மேவுதலோர் வியப்போ?

புலவருளம் புகுந்தவர்நன் னுவில்வளர் நல்லாள்
புதியபல வழகுமணம் பொலியுமலர்ப் பொழில்கள்
பலவிதநற் கனியொடுதீம் பால்மலிபல் லுலகு
பைஞ்ஞிலமார் பண்ணையெனப் படைத்துநிதம் பரிப்பாள்.

தன்னிகரி லாதபழங் கபிலனுயர் கம்பன்
தமிழ்சொலிளங் கோவொடுமுன் வள்ளுவரைத் தந்தாள்
கன்னியழி யாமலருங் கருவில்முதிர் கலைகள்
கற்பமழி யாதகவி யுலகுபல தருவாள்.

நல்லதமிழ் நங்கைவளம் நாடுதுநாம் நாடி
நானிலத்து மேன்மொழிகள் நல்குபல நலமும்
எல்லையறு மெழிலினையாட் கணிந்து மகிழ்ந் தேத்தி
என்றுமிசை வளர்க்குவம்பல் லாண்டுநிதம் பாடி.

—ச. சோமசுந்தர பாரதியார்

[சிறுமியர் கும்மியடித்தாடுதல் தமிழ் நாட்டிற்கே தனிப்பெருமை அளிப்பதொரு பழக்கமாகும். இதனைத் தமிழ்ப்புலவர்களுங் கண்டு களித்துத் தங்கள் கவிதைகளைப் புனைவதற்கொரு துறையாகக் கொண்டுளர். வேறெம்மொழியிலும் இத்தகைப் பாடல்கள் இருப்பதாகத் தெரியவில்லை. சிறுமியரும் விளையாட்டாகவே தமிழன்னையின் தனிப்பெருமைகளைக் கற்பாராயின் தாய்மொழிப்பற்று மிக எளிதில் பரவுமென்பதற் கையமில்லை. அதற்கு மிகவும் பொருத்தமான தொரு பாடலைக் கீழேகாணலாம்.]

## கும்மி

வாழ்க தமிழன்னை வாழ்க தமிழன்னை
  வானம ளாவப் புகழோங்கி
வாழ்க தமிழர் வளநாடு—நீடு
  வாழ்க தமிழர் திருவாழ்வு. வாழ்க

அன்புரு வான தமிழன்னை—மொழி
  யரசி யான தமிழன்னை
இன்ப மளிக்குந் தமிழன்னை—எங்கள்
  இன்னுயி ரான தமிழன்னை. வாழ்க

செங்கதி ரன்ன நகைமுகத்தாள்—செல்வத்
  திருவி ளங்குங் கலைவளத்தாள்
பொங்கிப் பொலியும் பசுவளத்தாள்—பரி
  பூரணர் போற்றும் இசைவளத்தாள் வாழ்க

சித்தர் உலாவு மலைவளத்தாள்—பாலுந்
  தேனும் பொழியு நதிவளத்தாள்
முத்தலை மோதுங் கடலுடுத்தாள்—வங்கம்
  உலவிச் செல்வத் திரள் குவித்தாள். வாழ்க

நல்லறம் போற்றுந் தமிழன்னை—தீமை
  நலியப் போர்செய் தமிழன்னை
வில்லறம் போற்றுந் தமிழன்னை—வெற்றி
  வீரரை யீன்ற தமிழன்னை. வாழ்க

அருள் செழித்த தமிழன்னை—சொல்லால்
அற்புதஞ் செய்த தமிழன்னை,
பொருள் செழித்த தமிழன்னை—சுத்த
போகஞ் செழித்த தமிழன்னை. வாழ்க

உண்மை மிகுந்த தமிழன்னை—சற்றும்
ஓரக மற்ற தமிழன்னை
வண்மை மிகுந்த தமிழன்னை—பொழி
வான்போ லுதவுந் தமிழன்னை. வாழ்க

கற்றவர் போற்றுந் தமிழன்னை—தெய்வக்
காதலர் போற்றுந் தமிழன்னை
ஒற்றுமை நாட்டுந் தமிழன்னை—பாரில்
ஒப்புயர் வற்ற தமிழன்னை. வாழ்க

தொழில் செழித்த தமிழன்னை—திருத்
தொண்டர்கொண் டாடுந் தமிழன்னை
எழில் செழித்த தமிழன்னை—அருள்
இன்பஞ் செழித்த தமிழன்னை. வாழ்க

வன்னமணிச் சுடர்வாசகம் போல்விரி
வானென வாழ்க தமிழன்னை—
மன்னுயிர்க் கெல்லாம் புதிய மலர்ச்சியை
வழங்கி வாழ்க தமிழன்னை. வர்ழ்க

—சுவாமி சுத்தாநந்த பாரதியார்

[நம் இனிய தாய்மொழி நம்மை எவ்வாறு கருவுற்ற நாளுக்குமுன்னிருந்தே அறிவுக்கறிவாய், உணர்வுக்குணர்வாய், உயிருக்கும் உயிராய் நம் வாழ்விற் கலந்து கலந்து பிரிக்கமுடியாதபடி படிப்படியாய் வளர்த்து வந்திருக்கிறதென்பதை இவ்வரிய பாடல்கள் இனிது விளக்குவனவாகும். இதனால் நம் தமிழன்னையை இனைய பல் நல்லுரைகளால் நாம் வாழ்த்துவதன்றி வேறு யாது கைம்மாறளிக்க வல்லேம்.]

மங்கல மோங்க வளர்த்து நலந்தரு
மாமொழி தாய்மொழியே—எங்கள்

பன்குறை இன்ற முதற்றெய்வ மாகப்
பாரவுந் தமிழ்மொழியே—இரு
செங்கையி னேந்திடுந் தாயர் முதலுப
தேசித்த செம்மொழியே—அவர்
பொங்கு முலைதரு பாலோ டெமக்குப்
புகட்டிய நிம்மொழியே—அதனால்
எங்கள் தமிழன்னை வாழிய வாழிய
என்றடி வாழ்த்துவமே.

விறிட் டழுஞ்சிறு சேய்ப்பருவத்தொட்டின்
மீது கிடத்தியெம்மை—இசை
கூறிட்ட தாலாட்டுக் கேட்டெங்கள் கண்ணிமை
கூடத் துயிற்றுமொழி—தாயார்
எறிட்டுப் பார்த்துமுத் தந்தந் தணைத்தன்
பிசைத்துப் பயிற்றுமொழி—நிலாச்
சோறிட் டிளையவர் தம்முடன் பாடியெஞ்
சோர்வை யகற்றுமொழி—அதனால்
எங்கள் தமிழன்னை வாழிய வாழிய
என்றடி வாழ்த்துவமே.

கண்ணு மிளமைப் பருவத்தி லேமுதல்
காவை யசைத்தமொழி—எங்கள்
கண்ணைத் திறந்துல கத்தை விளக்கிக்
கருத்தோ டிசைத்தமொழி—எந்தம்
எண்ணத்தைக் கூறற்கு நானென்று முன்வந்
திருந்த திருந்துமொழி—வேற்று
வண்ணப் பிறமொழி கற்க வுதவிய
வன்மைபொ ருந்தும்மொழி—அதனால்.
எங்கள் தமிழன்னை வாழிய வாழிய
என்றடி வாழ்த்துவமே.

முன்ன மருகிருப் பேரொ ரொசாவி
முழுது மறித்தமொழி—எங்கள்

சின்ன வயதிற் சிறுருட டிைத்.
திரிந்து பயின்றமொழி—இங்கே
மன்னிய வெங்கண்மூ தாதைய ரெங்கட்கு
வைத்தவ ரும்பொன்மொழி—முற்றும்
பன்னரும் வாழ்வு துறக்கினுங் கைவிடாப்
பாங்கிற் றொடருமொழி—அதனால்
எங்கள் தமிழன்னை வாழிய வாழிய
என்றடி வாழ்த்துவமே.

தொன்றுதொட் டேபே ரறிவாள ரீட்டிய
செம்பொருள் தேக்குமொழி—தன்னை
நன்றறி வார்க்கப் புதையல் திறந்திட
நாளெண்ணிக் காக்குமொழி—நாங்கள்
இன்று படைக்கும் பெருமைக்கெல் லாமுத
லீந்து புரக்கு மொழி—செய்யும்
நன்றிகொன் றோருக்கும் நன்னயஞ் செய்தவர்
நாணவு ரைக்குமொழி—அதனால்
எங்கள் தமிழன்னை வாழிய வாழிய
என்றடி வாழ்த்துவமே.

எங்க ளிருகண்ணிற் பாவையி னூடு
மியங்கித் துலங்குமொழி—உடல்
தங்கு முயிரிற் கலந்தறி வாற்றலுந்
தான்றந் திலங்குமொழி—சிறுசு
தங்கை யடிப்புன் றலைச்சிறு ரின்கு
தலையிற் றழைக்குமொழி—இள
மங்கையர் காதலுள் ளக்குறிப் போத
மனது களிக்குமொழி—அதனால்
எங்கள் தமிழன்னை வாழிய வாழிய
என்றடி வாழ்த்துவமே.

அஞ்செழுத் தேதமிழ்க் கென்பவர் பேதை
யறிவை நகைக்குமொழி—சொல்லின்

அஞ்செழுத் தேயிக மும்பர முத்தரு
மாமென் றுரைக்குமொழி—இன்னும்
எஞ்சு பிறமொழி யிற்பல தன்பே
ரெழுதற் கரியமொழி—கல்லா
நெஞ்ச முருக்குந் திருவா சகத்தைமுன்
னேகொள் பெரியமொழி—அதனால்
எங்கள் தமிழன்னை வாழிய வாழிய
என்றடி வாழ்த்துவமே.

வாரிவா ரிமலை போற்பொரு ளீந்துமுன்
னோர்கள் வளர்த்தமொழி—யந்தச்
சீரிய செல்வரைப் போலப் புலவர்
சிறப்புறச் செய்தமொழி—வேறாய்
சேரு மொழியின ருந்தன் னலங்கண்டு
நேயம் படைக்கு மொழி—ஞானம்
சேருந் துறவு முனிவரு முள்ளத்
திரும்ப மயக்குமொழி—அதனால்
எங்கள் தமிழன்னை வாழிய வாழிய
என்றடி வாழ்த்துவமே

பற்றுவைத் தப்பிற நாட்டு மொழியைப்
பயின்று மகிழ்ந்தோமே—சொந்து
பெற்றதா யின்முகம் பாராத குற்றத்தாற்
பிழைத்து நைந்தோமே—நாங்கள்
கற்ற பிறகலை யைத்தாய் மொழிக்கண்ணே
காட்டித் திருத்துவமே—திசை
முற்றவு மெய்மொழி யின்வளஞ் சாற்றி
முரசு முழக்குவமே—அதனால்
எங்கள் தமிழன்னை வாழிய வாழிய
என்றடி வாழ்த்துவமே

—அ. வரதநஞ்சையபிள்ளை[1]

---

[1] இவ்வரும் பெரும் பாடல் தமிழரசி குறவஞ்சியிலுள்ளதாகும். இதன் ஆசிரியர் தோரமங்கலம் அப்பாசாமி பிள்ளை எனும் புலவரின்

## தமிழன்பு மாலை

*[தமிழ் மொழியின் பண்டைப் பெருமைகளும், தற்காலத் தாழ்வும், அதனை உயர்த்தோங்கச் செய்யவேண்டிய உறுதிப்பாடும், உணர்ச்சி ததும்ப விரித்து விளம்பப் படுதலின், இப்பகுதியின் ஈற்றில் இடம்பெறற் கேற்றதாதும் இவ்வரிய பாடல்.]*

### ஆபி இசை

*நிலைமண்டில ஆசிரியப்பா*

*தமிழே, தமிழே, தமிழர்க் குயிரே,*
*அமுதே, யழகே, யன்பே, யருளே,*
*சங்கரன் போற்றிய சங்கத் தமிழே,*
*மங்கலம் பொலியும் மாமணி விளக்கே,*
*பாண்டியன் வளர்த்த பச்சிளஞ் செல்வீ,*
*வேண்டிய வளங்கள் ஈண்டிய திருவே,*
*பொதிகைத் தென்றலும் பொன்னியும் வையையும்*
*எதுகை மோனையோ டேத்திடுந் தமிழே,*
*செவிக்கினி தாகிய கவிக்கனி குலுங்கும்*
*புவிக்கினி தாகிய புண்ணியத் தமிழே,*
*சித்தர் பாடிய சித்திரத் தமிழே,*
*புத்தொளி பாவும் பூரணத் தமிழே,*
*முருகன் மொழிந்த முழுநிறைத் தமிழே,*
*அருகர், புத்தர், கிறித்தவர், இசுலாம்*
*மதத்தினர் எல்லாம் துதித்தநற் றமிழே,*
*மதவரை கடந்த பொதுமறைத் தமிழே,*
*பனிவரை யுச்சியிற் படாம்விரி தமிழே,*
*முனிவர்கை தவழ்ந்த மோகனத் தமிழே,*

---

புதல்வர் வரதஞ்சைய பிள்ளை ஆவர். 1877ல்பிறந்து முருகன் திருவருளால் இளமையிலேயே தமிழறிவு பெற்றவர். காருணீகபுராணம் (1918) இயற்றியவர். கரந்தைத் தமிழ்ச்சங்கம் முதலிய பல சங்க ஆண்டுவிழாத் தலைமை தாங்கியவர். பலப்பல இனிய சைவத் தமிழ்ச் சொற்பொழிவாற்றி வருபவர். இவர் தமிழ்த்தாய்த் திருப்பணி எனும் அரும் பெரும் நூலியற்றி வெளியிட்டுவருவது தமிழுலகம் நன்கறிந்ததாகும்.

இயலிசை நாடக வியற்கைத் தமிழே,
குயிலிசை கைக்குங் குரலிசைத் தமிழே,
தன்னிக ரில்லா நன்மொழித் தமிழே,
பன்மொழி படைத்த தென்மொழித் தமிழே,
தென்பா லப்பன் சின்முத் திரையில்
தன்பொருள் விளக்குந் தத்துவத் தமிழே,
அணியார் மொழியே, அருளா ரமுதே,
மணிமருந் தாகு மந்திரத் தமிழே,
இதயக் கடவுளை இலக்கிய தமிழே,
பொதுவில் நடனம் புரிபர மேசன்
காதலர் உள்ளப் போதலர் தமிழே,
மாதவ னன்பர் ஓதிய தமிழே,
உலகெலா மோதற் குரியநற் றமிழே,
அலகிலா விளையாட் டரனுவந் தாடிய
பண்ணார் தமிழே, விண்ணார் தமிழே,
கண்ணினு மருமைக் கண்மணித் தமிழே,
சொல்லச் சொற்சுவை சொட்டுந் தமிழே,
எல்லையில் விரிவு நல்குசெந் தமிழே,
நுலக்கரு நுட்பக் கலைக்களஞ் சியமே,
கலைக்கரு நுட்பக் கடவுட் டமிழே,
வெற்றிவேல் பிடித்த வீரத் தமிழே,
கொற்றவர் மணிமுடி கொண்டநற் றமிழே!

(இன்று)

முழுமதி முகத்து முறுவலைக் காணேன்!
செழுந்திருக் கையிற் செங்கோ லில்லை,
அருளிசை யிருந்தும் அறிவா ரில்லை,
பொருளிசை யிருந்தும் போற்று வாரில்லை,
செஞ்சொ லுரைத்தும் செல்வாக் கில்லை,
அஞ்சும் பேதையர் அயலுக் கடியார்
பிஞ்சிள மைந்தர் பிணங்கிப் பிரிந்தார்,
அருஞ்சுவை யளித்தும் அருந்துவோ ரில்லை,
வெறுஞ்சிடு மூஞ்சிகள் விரட்டின ரிங்கே.

குடக்கிருந் தொருபுயல் குப்புறத் தள்ள
வடக்கிருந் தொருபுயல் வாரி விழுங்கத்
தவிக்கிறு யன்னை! புவிக்கினி தாகிய
கவிக்கட லமுதங் கையிற் பிடித்தே!
கொள்வா ரில்லை கொடுப்பா ரில்லை;
எள்வார் பலர்முன் னேங்கிநிற் கின்றாய்!
அன்னை, யன்னை, யன்னை, யன்னை,
என்னை, என்னை யீன்றநற் றாயே!

இனி,

விழித்தோ மெழுந்தோம் வீரராய் நின்றோம்;
அழித்தோ மிருளை யச்சம் விடுத்தோம்;
திருவா சகத்தின் சிறப்பொருள் கண்டோம்;
திருமந் திரத்தின் சித்தி யவாவினோம்;
'எல்லா வுலகிற்கு மிறைவ னொருவன்,
எல்லா வுடலு மிறைவனு லயமே'
என்றுணர் பொதுநெறி கண்டதன் வழியே,
சென்றுன் மைந்தர் ஒன்றுபட் டுய்ந்தோம்.
சாதி சமய சாத்திர கோத்திர
பேதஞ் செய்த தீதெலாந் தீர்ந்தோம்.
தேவுலா மியற்கைக் கோயிலா முலகில்;
யாவுமோர் குலமென் றறிந்தினி வாழ்வோம்;
தன்னலம் விடுத்துப் பன்னலம் புரிவோம்;
இன்னுயிர்க் கெல்லா மினிதே நோற்போம்.
உண்மையன் புறுதி யுட்பொரு ளறிவு
வண்மை யிரக்கம் மனமொழித் தூய்மை
மாசறு காட்சி, மன்னுயிர்த் தொண்டு
தேசுறுங் காதல் ஈசனுக் கடைக்கலம்
இவையே யெங்கள் இன்னற மாகுக!
அவஞ்செய் வேற்றுமை யகந்தை யொழிக!

* * * * * *

தமிழ னெவனுந் தருமம் தவறினல்,
தமிழ் மரபிற்கே தாழ்வுசெய் தோனும்.

தமிழருக் கெல்லாந் தமிழே யாவியாம்;
தமிழருக் கெல்லாந் தமிழ்ப்பணி தவமாம்;
தமிழனைத் தமிழன் றமிழென வுகந்து,
தமிழிசை பெருக்கித் தகவுற வாழ்க!

• • • • • •

வாக்கும் பொருளும் வாய்ந்தநற் கவிபோல்
மேற்குங் கிழக்கும் மேவுக தமிழில்!
எண்ணெழுத் துடனே இயன்றநற் றொழிலைப்
பண்ணப் பயிலும் பள்ளிக ளமைப்போம்.
பழமையே பேசிப் பொழுதைப் போக்கோம்.
புதுமை யுலகிற் பொலிந்திட முயல்வோம்.
பன்மொழிப் புலவர் பன்மொழிப் பயனைத்
தென்மொழி வளரத் திருவுட னுதவுக!
எக்கலை யாளரும் அக்கலை மிக்குச்
சொக்கத் தமிழையே சுடர்ப்பொன் னக்குக!
பாவலர், நாவலர், பௌதிகப் புலவர்,
ஓவியர், பாடகர், ஒண்கலை வாணர்,
ஐந்துலோ கத்தும் அருந்தொழி லாற்றுவர்,
இயந்திரம் வல்லார், தந்திரம் தெரிந்தோர்,
வரையற வழங்கும் வைசியச் செல்வர்,
குறையறப் பணிசெய் நிறைமனத் தொண்டர்,
அனைவருஞ் சேர்ந்துன் னுலய மமைப்போம்!
அனைவரும் உன்றன் அழகையே தொழுவோம்!
“ தமிழினி தோங்குக! தமிழ்நல் காளுக!
தமிழிசை முரசந் தாவிவிண் ணெழுக!
தமிழ்க்கொடி மீது தன்னவ னுறைக!
தமிழ்த்தாய் முடிமேற் றாரகை விளங்குக!
பிறமொழி கண்ட பெருமைக ளெல்லாந்
திறமுட னேந்தித் தெய்வச் சுவையுடன்
அருளமு கொளிரும் அருந்தமிழ் வாழ்க!
தமிழக முலகத் தாயக மாகுக!
தமிழ்மொழி யுலகத் தாய்மொழி யாகுக!

விழிமின், எழுமின், விரும்பித் தமிழைத்
தொழுமின், உழைமின், செழுமினோ தமிழீர்!''
என்றெம் முளத்துடிப் பியம்பிசை டெல்லாம்
ஒன்றி நன்றுசெய் ஊக்கங் கிளர்த்துவோம்.
'' தமிழே யெனது தாரகத் தாய்மொழி
தமிழர் அனைவரும் சமரசக் குடும்பம்;
தமிழுல கெனது தங்கக் கோயில்,
தமிழ்ப்பணி யெனது சலியா மூச்சு,
தமிழ ரனைவருந் தகைமிகு தோழர்,
தமிழ்த்தா யெனது சத்தித் தெய்வம்,
தமிழுணர் வேயென் றளராப் பூசனை,
'எந்தாய் வாழ்க'! மந்திர மெனக்கே,''
இந்தவா றெவ்வோ ரிதயமுந் துடித்துன்
அன்பினைச் செய்யும் ஆர்வந் தூண்டுவாம்.
இன்பத் தாயே யெமக்கருள் புரிவாய்!
சொல்லுந் தொழிலும் செல்வமும் வளமையும்
வெல்லுந் திறனும் வல்லவ ராகச்
சத்திக் கனலைத் தந்தெமை யாளாய்!
முத்தி யெமக்குநீ முடிபுனை நாளே!
வானுற வோங்கி வாழ்கநின் பெருமை!
மானிடத் தேவர் வாழ்த்துக நின்னை!
தென்னறி வன்புத் தேறலே! யுலகின்
உள்ளறி வன்பின் உயிர்த்துடிப் பாவாய்!
வானும் புவியும் வாழ்த்துக நின்னை!
வானைப் புவியில் வளர்த்த கற்பகமே!
முன்னிசை யுடனே பின்னிசை யிலகி,
இன்னு மின்னு மிசைபெற வாழியே!

—சுவாமி சுத்தாநந்த பாரதியார்

# II. தமிழ்த்தாய் வணக்கம்

1. ["வாழ்த்துவதும் வானவர்கள் தாழ்வாழ்வான்" என்பதற்கேற்பத் தமிழ்த்தாயின் தண்ணருளால் நாம் பெற்ற பிறப்புரிமையின்பத்திற்காக நன்றி கூறுமுகத்தால் அவளைப் பல புலவர் உதவியால் வாழ்த்தி வலிவுற்றோம். இனி "மனம் நின்பால் தாழ்த்துவதும் தாமுயர்ந்து தம்மையெல்லாம் தொழவேண்டி" எனும் மணிவாசகத்திற்கு இணங்க அவளை வணங்கிப் புதிய பல பேறுகளைப் பெற்று உய்வோமாக. அதற்கு உகந்த பல பாடல்களைக் கீழே காணலாம். அவற்றுள் தமிழ்த்தாயைத் தனித்தெய்வமாக உருவகப்படுத்தி வணங்கிய, காலத்தால் முந்தியபாடல் முதல் இடம் பெற்றிருக்கிறது.]

அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

மறைமுதற் கிளந்த வாயான்
மதிமுகிழ் முடித்த வேணி
இறைவர்தம் பெயரை நாட்டி
இலக்கணஞ்[1] செய்யப் பெற்றே
அறைகடல் வரைப்பிற் பாடை
யனைத்தும்வென் றாரி யத்தோ
டுறழ்தரு[2] தமிழ்த்தெய் வத்தை
யுண்ணினைந் தேத்தல் செய்வாம்.

—கருணைப்பிரகாசர்[3]

---

1 இறையனாரகப்பொருள்

2 அவர்காலத்தில் அவரறிந்தது இதுவாகும். இக்காலத்து நாமறியும் உண்மைகளைப் பின்னர்க்காணலாம்.

3 இவர் 17-ம் நூற்றாண்டில் காஞ்சிமாநகரில் பிறந்தவர்; துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள், வேலைய சுவாமிகளது இளவல். இம்மூவரும் திருநெல்வேலி சிந்தபூந்துறை வெள்ளியம்பலத் தம்பிரானிடம் பஞ்ச இலக்கணம் பயின்று பல நூல்கள் இயற்றினர். இப்பாடல் திருக்காளத்தி புராணத்தின் கடவுள் வாழ்த்திலுள்ளதாகும். கருணைப்பிரகாசரே இப்புராணத்தைத் தொடங்கியவராவர்; இவர் இட்டலிங்க அகவலும் பாடியவராவர்,

2. [இவ்வெண்செந்துறை யாவருக்கும் எப்பொழுதும் எளிதில் பயன்படக்கூடியதாகும்]

பைந்தமிழ்த் தேவியின் பாத மலரிணை
சிந்தையிற் புனைகுநர் நலம்பெறற் பொருட்டே

—அ. துடிசைக்கிழார்[1]

3. [ஒருதனி முதல்வனும் முழுமுதற் கடவுள் உலகம் உய்யுமாறு உருப்படுத்தியது இவ்வொரு மொழியையே என்பதை எடுத்துரைப்பது இவ்வரிய பாடல்]

அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

ஒருமொழியா னுலகனைத்து முருப்படுமென் றருஞ்சுருதி
யுரைத்த வாற்றால்
வருமறையா கமக்கலையாய்ப் பொருட்டுணிவா யாவுமாய்
வயங்கா நின்ற
திருமொழியைச் சித்திமுத்தி திகழ்மொழியை யனவரதஞ்
சிந்தித் தேத்தும்
பெருமொழியைக் குருமொழியைப் பிறைமுடித்தோன்
பெறுமொழியைப் பேணி வாழ்வாம்.

—சுவாமி விபுலாநந்தர்[2]

---

[1] இவர் துடிசை அருத்த நாரீச்சுர முதலியார் புதல்வராக 1883ல் பிறந்து பி. ஏ. வரை படித்து வட்டக்காப்பாளராக (Circle Inspector of Police) வேலைபார்த்து, விடுதிபெற்றுச் சைவத் தமிழ்த்தொண்டு ஆற்றி வருபவராவார். உத்தரமேரூர், செங்கற்பட்டு, திருவல்லம் சைவசபைகளைத் தோற்றுவித்தவர்; பல சங்க ஆண்டுவிழாத் தலைமை தாங்கியவர்; கோவைக் கலைமகள் வெளியீட்டுக்கழக உதவித்தலைவர். திருமந்திரத்தைக் குறிப்புரையுடன் பதிப்பித்தும் பல சிறு விளக்க நூல்களையும், வினாவிடைகளையும், வரலாறுகளையும், ஆராய்ச்சிக் கட்டுரைகளையும் வெளியிட்டவராவர்.

[2] இவர் 1892ல் யாழ்ப்பாணம் மட்டக்களப்பு காரேறு எனும் ஊரில் வேளாண் மரபில், சாமித்தம்பியார் புதல்வராகப் பிறந்தவர். மதுரைத் தமிழ்ச்சங்கப் பண்டித, இலண்டன் பி. எஸ்சி. பட்டங்கள் பெற்ற பேறிஞர். இளமையிலேயே பெருஞ்செல்வ முதலியவற்றைத் துறந்து இராம

4. [மக்கள் பேசத்தொடங்கிய காலத்திலேயே இயற்கையாகவே இனிதெழுந்தது தமிழே என்பதையும், அதுவே எம்மொழியிலு மில்லாக் கலைச்செல்வம் நிறைந்துள்ளதென்பதையும் எடுத்தியம்புவன இப்பாடல்கள்.]

கலிவிருத்தம்.

வைய மீன்றதொன் மக்கள் உளத்தினைக்
கைய ளுலுரை கால மிரித்திடப்
பைய நாவை யசைத்த பழந்தமிழ்
ஐயை தான்தலைக் கொண்டு பணிகுவாம்.

வெண்பா

எக்கலையும் இன்னே பெறலாமெல் லாமொழியும்
புக்கலையும் நெஞ்சே புகலிடமாய்—மிக்கதமிழ்த்
தாயேயென் றேர்த்து தனிரடிக்கிழ்க் கைகுவித்து
நீயே வணங்கப் புகின்.

—நீ. கந்தசாமி பிள்ளை[1]

5. [தனிப்பெருந் தமிழ்க் காப்பியமாகிய சிலப்பதிகாரத்தின் மங்கல வாழ்த்துப் பாடலை ஒட்டி விளங்குவன இச்செய்யுட்கள்]

சிந்தியல் வெண்பா

தமிழினைப் போற்றுதும் தாய்த்தமிழ் போற்றுதும்
தாயைச்சேய் பேணல் தலையறநம் மெல்லவர்க்குந்
தாய்தமிழே யாமாத லால்.

---

கிருட்டின மடத்தை அடுத்து கல்வித்தொண்டாற்றியவர். சில ஆண்டு அண்ணாமலைப் பல்கலைக்கழகத்திலும் இப்பொழுது கொழும்புக் கல்லூரியிலும் தமிழ்ப்பேராசிரியராய்த் தொண்டாற்றி வருபவர். திருக்கைலைமலை சென்றுவந்த சிறப்புடையவர். சென்னைத் தமிழ்ச் சொல்லாக்கமாநாடு, கரந்தைத் தமிழ்ச்சங்க ஆண்டுவிழா, மதுரை முத்தமிழ் மாநாடு முதலியவற்றில் தலைமைதாங்கியவர். தமிழிசை ஆராய்ச்சியில் தங்கிகாற்று விளங்குவதுடன் அரியதொரு ஆராய்ச்சிநூல் இயற்றியவருமாவர்.

1 இவர் தஞ்சையைச் சார்ந்த பள்ளியக்கிரகாரம் நீலமேகம் பிள்ளை புதல்வராய் 1898ல் பிறந்தவர்; தமிழ் ஆங்கிலக்கலை அறிஞர் கட்டிடக்கலை வல்லுநர். கரந்தைத்தமிழ்ச்சங்க அமைச்சராய்ப் பல்லாண்டு சீர்பெற நடத்தியவர். பள்ளியகரப் பழங்கதை முதலிய பல பாடலியற்றியவர். இது தமிழவன் நான்மணி மாலையின் ஓர் பகுதியாகும்.

தென்மொழி போற்றுதும் தீந்தமிழ் போற்றுதும்
தாயிற் சிறந்தம்மம் தானும்வாழ் நாளெல்லாம்
ஆய்சுவை யோடளித்த லால்

தொன்மொழி போற்றுதும் சொற்றமிழ் போற்றுதும்
போனகமாய்த் தாரகமாய்ப் போக்கியமாய் நாமார
வானமுதின் மேலினித்த லால்.

—ச. சோமசுந்தர பாரதி.

6. [தமிழ்த்தாயின் இன்னிசை இயல்பினை உவந்தேத்துவது இப்பாடல்.]

கைக்கிளை ஈருக் கட்டிய நரம்பிற்
கலந்துமின் றின்னிசை எழுப்பி
மெய்க்கிளை நட்புப் பகையினை தெரிந்த
மெல்லியல் இணையடி பணிவாம்
புக்கிளை யாத புலமையின் ஊற்றாய்ப்
பொருந்தினர்க் காரமிழ் தாகி
எக்கிளை ஞரினும் மிக்கஅன் பளிக்கும்
இருந்தமிழ் அணங்கினை உவந்தே.

—சுவாமி விபுலாநந்தர்.

7. [தமிழ்த்தாயைத் தன் தழுவில் சேர்த்துக்கொள்ளாவிடில் தன் உயிரையாவது ஏன்றுகொளக் கூறுவது இவ்வினியபாடல்.]

எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

நின்னருமை யானறிய நினைவுண்டோ இலையோ?
நின்மைந்தன் எனும்உரிமை எனக்குண்டோ இலையோ?
என்னருமைத் தமிழ்த்தாயே ஏங்கியுள மைந்தன்
எளிமையினைப் போக்கிடுவாய் எங்கும்புகழ் பரந்தோய்!
உன்னரிய கலைப்பெருக்கின் ஒளிநிலவின் ஒருசார்
ஒதுங்கினான் இருப்பதற்கே உன்னுவையென் தாயே

இன்னுமென்றன் தாய்க்குழுவில் இல்லாத பாவம்
எனக்கெதற்கோ என்தாயே ஏற்றருளாய் உயிரே!

—ம. ரா. போ. குருசாமி[1]

8. [செந்தமிழ்த் தேவியின் சேவடிகளைச் சென்னி சேர்ப்பதற்கான காரணங்களுட் சிலகூறுவது இச் சிறு பாடல்.]

செந்தமிழ்த் தெய்வத்தைப் பாடு—அவள்
சேவடித் தாமரை சூடு.

ஆதி பரசிவன் விண்டார்—அதை
அனைவரும் அமுதெனக் கொண்டார்;
பாதி அகத்தியன் கற்றான்—அவனும்
பாரினில் குருவெனப் பெற்றான். (செந்.)

ஓதும் உலகை வளைத்தாள்—ஓங்கி
ஒன்று பலவாகக் கிளைத்தாள்;
சோதியா யெங்கெங்கும் நின்றாள்—சொல்லின்
சுவையாலே எவரையும் வென்றாள். (செந்.)

வேந்தர் பணிந்ததும் அவளைப்—புலவர்
வேண்டிப் புனைந்ததும் அவளை—முனிவர்
மாந்தர் அணிந்ததும் அவளை—முனிவர்
மகிழ்ந்து நினைந்ததும் அவளை. (செந்.)

என்றும் கன்னியாத் திகழ்ந்து—முன்னே
எத்தரு சங்கத்தை மகிழ்ந்து

---

[1] இவர் திருவில்லிபுத்தூரை யடுத்த மமுசாபுரத்து இராக்கப் பிள்ளை புதல்வர். பச்சையப்பன் கல்லூரியில் கீழ்க்கலைப்புலமை (B. O. L)த் தேர்ச்சி பெறுகின்றார்.

துன்றும் பொருட்குற்றம் அகழ்ந்து—நின்று
தூய்மை நிறைந்தாளைப் புகழ்ந்து. (செங்.)

—மணி. திருநாவுக்கரசு முதலியார்[1]

9. [தமிழின் தனிச் சிறப்புக்களையெடுத் தெடுத்து இயம்பி வணக்கங் கூறுவது இவ்வினிய பாடல். இதனைப் பாடிப்பாடி வணங்க வணங்க மனம் அவள்பால் தாழ்வது திண்ணம்.]

தமிழென்ற பெயருடைய தையால் உனதினிய
அமிழ்த மொழியால் அடியேம் வணங்குகின்றேம்!

முன்னைப்பழம் பொருள்போல் முன்தோன்றி நின்றுலவும்
அன்னையே செந்தமிழே அடியேம் வணங்குகின்றேம்!

சிந்தைக் கினியாய் செவிக்கினியாய் வாய்க்கினியாய்
எந்தாய் தமிழே இறைஞ்சி வணங்குகின்றேம்!

சில்லெழுத்தால் மெல்லொலியால் செவிக்கினியாய் [நாற்பொருளும்
சொல்லுகின்ற எங்கள் தமிழ்த் தோகாய் வணங்குகின்றேம்!

எண்சுவையும் பத்தழகும் ஏந்தணியும் வாய்ந்ததமிழ்ப்
பெண்ணணங்கே வாழிநீ பேணி வணங்குகின்றேம்!

பிறமொழியி லில்லாப் பெருமைபல பெற்றாய்உன்
அறமொழிக்கும் ஒப்புண்டோ? அடியேம் வணங்குகின்றேம்!

பண்டை மொழிகள் பலசாவ நீவாழக்
கண்டேம் தமிழே களித்தேம் வணங்குகின்றேம்!

---

[1] இவர் 1888 முதல் 1931 வரை இசைபட வாழ்ந்தவர். சிறந்த சொற்பொழிவாளர். சென்னை பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியராய்த் திகழ்ந்து பல பாட புத்தகங்கள், கட்டுரைகள், பாடல்கள் இயற்றியவர். சித்தாந்தம், செந்தமிழ்ச் செல்வி, தமிழரசு முதலியவற்றின் பதிப்பாசிரியர். இப்பாடல் அவரது செந்தமிழ் வாசகம் நான்காம் புத்தகத்திலுள்ளது.

இமயம் உயரா திருக்குமரி தாழாதச்
சுமையுறா விறும்வாழ்ந்த அம்மை வணங்குகின்றேம்!

உள்ளமயக் கோட்டியுணர் வூட்டிநெறி காட்டுகின்ற
வள்ளுவனைப் பெற்றெடுத்த மாதே வணங்குகின்றேம்!

நன்மலியா எம்முதலாம் நங்கையரைப் பெற்றெடுத்தும்
கன்னியர சிபதமிழே களித்து வணங்குகின்றேம்!

—பெ, கோவிந்த மூப்பனர்.

10. [ஒவ்வொரு அடியிலும் ஒவ்வொரு வகையாக விளித்து விளித்துப் பரவும் இவ்வினிய பாடலைப் பாடப்பாட உள்ளம் உருகுவதைப் பாடிக்காண்க.]

"நாதவிந்து கலாதி நமோநம" எனும் இசை

செஞ்சுருட்டி

தேவி செந்தமிழ்த் தாயே பராவுதும்
ஆவி தந்தருள் வாளே பராவுதும்
தேரும் எம்பெரும் பேறே பராவுதும் உருகாம

தேனின் பாலைவெல் வாளே பராவுதும்
வானில் இல்அமிழ் தாளே பராவுதும்
தேசுயர் மதி யாளே பராவுதும் இனிதாகக்

நாவில் வீசுதென் காலே பராவுதும்
பூவில் வார்தரு தேனே பராவுதும்
காதல் சேர்கழைப் பாகே பராவுதும் ஒளிமேவிக்

காணுங் கண்ணனை யாளே பராவுதும்
பூணும் நன்மணி யாளே பராவுதும்
நாரில் உள்ளொளி யாளே பராவுதும் உமையாளே

நாவினுங் கலை யாளே பராவுதும்
பூவினுந் திரு வாளே பராவுதும்
நாளிலுந் தொழு வாளே பராவுதும் இசையோடு

நாடகம் உடை யாளே பராவுதும்
ஈடில் இன்னிய லாளே பராவுதும்
நாடும் ஓர்பொரு ளாளே பராவுதும் எழில்தேறும்

ஓவியன் புனை வாளே பராவுதும்
மேவு நூற்கட லாளே பராவுதும்
ஓவில் தென்றமிழ் நாடாய் பராவுதும் இருகோடி

ஓது மைந்தரு ளாளே பராவுதும்
போது மூன்றுமு ளாளே பராவுதும்
ஓர்சு ரந்தையின் வாழ்வே பராவுதும் அடியோமே.

—அரங்க. வேங்கடாசலம் பிள்ளை.

## தமிழ்ப்பொன்னூசல்

### தரவு கொச்சகக் கலிப்பா.

11. ["சீரார் பவளங்கால் முத்தங் கயிறாக ஏராரும் பொற் பலகையில்" தமிழ்த்தாயை ஏற்றிப், புகழ்ந்து பாடி ஆட்டி, அவ ளருளை நாடுவது வேற்று மொழியிலிலா அருந்தமிழ் வழக்காகும். அதற்கேற்ற பாக்கள் நான்கை ஈண்டுக் காண்க.]

கொண்மூத் திரட்கிழ்க் குளிர்மதியம் போனிலவும்
தண்ணார் நுதலிற் றனிமுத்தம் பூத்தனபோல்
தெண்ணீர்த் துளியரும்பச் செந்தேன் றொடையவிழப்
பண்ணார் மொழிக் கிறைவி! யாடுகபொன் னூசல்!
பாகார்ந்த சொற்கிள்ளா யாடுகபொன் னூசல்!

செங்கேழ் மலர்த்திருவுஞ் சிந்தை வியப்பெய்த
மங்காத கல்வியெனு மாப்பே றளித்திடுவாய்
பொங்கு மொழிப்புலவர் புதுக்கவிக ளாரமிர்தந்
தங்கியுனுஞ் செவ்வியினாய்! ஆடுகபொன் னூசல்!
தையலிளஞ் சேற்கண்ணா யாடுகபொன் னூசல்!

எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

பொதியமலைக் குறுமுனியும் புகழார் சங்கப்
புலவரொடு புரவலரும் போற்றி யேத்த
மதிதவழு முடியண்ண லருளே போல
வளர்ந்தெங்கும் புகழ்படைத்த மடவாய்! கஞ்சப்
பதிவளரும் புலவனருள் பூத்த நாவிற்
பயிலுமெழிற் பூங்குருந்தே! பாவி யேற்குக்
கதியருளும் பதயுகத்தி ராடி ரூசல்!
கலை மகளாங் காரிகையீ ராடிரூசல்!

வள்ளுவர்தந் திருக்குறளும் வகையார் கோவை
வயங்குமிளங் கோமொழியு மலருஞ் செல்வங்
கொள்ளுமொரு பெண்ணரசே! கோல மார்ந்து
குலவுதமிழ்ச் செங்கரும்பே! தொண்ட ருள்ளப்
பள்ளமிழி பூம்புனலே! பகரு மன்பாம்
பரியகயிற் றூலசையும் பண்பி லேன்றன்
உள்ளமெனும் பலகையமர்ந் தாடீ ரூசல்!
ஒளியுலவு மணியசைய வாடீ ரூசல்!

—சி. து. கன்னிசாமி[1]

12. [தமிழ் தன் மக்களுக்கீந்த தனி வளங்களை யெல்லாம் வரிசைப்பட வகுத்துரைத்து வணக்கங் கூறுவன இப் பாடல்கள்.]

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

1. அன்பக மேவினை நன்புறந்[2] தூயாய்
ஆரும் வியப்புறும் வீரம் நிறைத்தாய்

---

[1] இவர் 1917ல் மதுராந்தகத்திற் பிறந்தவர். தாமாகவே தமிழ் கற்று நாமகள் கலிவெண்பா, சிறு கவித்துணர்கள், சித்திராங்கதை (நாடகம்) முதலிய நூல்கள் இயற்றியுளர். சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால் "தமிழ்க்கவி" எனப் பட்டஞ் சூட்டப் பெற்றவர். இவரது தமிழ் மணம் தமிழ்நாடெங்கும் பரவுவது திண்ணம்.

[2] அன்புடை அகவொழுக்கத்தையும் தூய்மையுடைய புறவொழுக்கத்தையும் கற்பிப்பது தமிழ்.

என்பு முருக்கு மிசைத்திறங் கண்டாய்
ஏவர்க்கு மொத்த வுயர்நெறி விண்டாய்
முன்பொரு மூவரைப் பெற்றர சாக்கி
மும்முர[1] செங்கு முழங்க வளர்ந்தாய்
இன்புறு வாயினை யின்றமிழ்த் தாய்நீ
ஈண்டமர்ந்[2] தன்பர்க் கினிதருள் வாயே!

2. தெள்ளிய சங்கக் கபிலர்நல் லோராற்
செய்யுள்வளஞ் செய்வித் தாய்தென் னிலத்தே
வள்ளுவ ராலுல கூட்டினை முப்பால்
வண்கம்ப ராலிரு ளோட்டினை யப்பால்
ஒள்ளிய நெஞ்சிற் பெரும்புல வோரால்
ஓரரு ளின்சுவை யுண்ணவும் வைத்தாய்
எள்ளலில் தெய்வத நாலேணி[3] யால்வான்
ஏறவும் நேர்வழி கண்டனை யெம்மோய்[4]!

3. வில்வித்தை வேல்வித்தை மேவிச் சிறந்தாய்
மேதினிக் கொத்த மரக்கல மூர்ந்தாய்
பல்வித்த கத்துந் தலைக்கொள நின்றாய்
பார்வளங் கண்டுநல் லேர்வளங் கண்டாய்
கல்விக்கண் மெல்லிய லாரை வளர்த்தாய்
கற்றவர் வீறக்[5] கழக மமைத்தாய்
செல்வத்தி னலிவண் வாழத் தெரித்தாய்
சீரரு ளாலுயர் வீடுந் திறந்தாய்!

4. தேவினை[6] நெஞ்சிற் றிகழவும் வைத்தாய்
சித்தியை ஞானியர்[7] செப்பவும் வைத்தாய்
பாவினை நூலிற் சுவைக்கவும் வைத்தாய்
பத்தியைத் தொண்டர் புகழ்க்கிடை நட்டாய்

---

1 மும்முரசு:-வெற்றி, கொடை, நீதி ஆகியமூன்றையும் முழக்குவன.
2 அன்பர் வேண்டுமிடங்களில்.
3 தெய்வத்தன்மை பொருந்திய நூல்களாகிய ஏணி.
4 ஓய்—தாய். 5 விளக்கமுற.
6 தெய்வ சம்பந்தமற்ற இலக்கியந் தமிழிலில்லை.
7 சிவஞான சித்தியார் எனும்நூலை நினைப்பூட்டுங் குறிப்பும் உளது.

பூவினைக் காக்கென வேத்தியல் சொற்றாய்
புத்தியைக் காக்கப் புலவரை யுய்த்தாய்
யாவினைக் குங்குடி மக்களை வைத்தாய்
எத்தனை செய்தனை நற்றமி ழன்னே![1]

—ரா. இராகவையங்கார்[2]

13. [தேவர்களின் பொழுது விடியுங் காலமாய மார்கழி மாதத்தில் மகளிர் ஒருவரை யொருவர் துயிலெழுப்பிக்கொண்டு நீரா டச் செல்வதையும் செல்லுங்கால் தம் வழிபடு கடவுளின் பெருமை களைப் புகல்வதையும் ஒட்டி எழுந்த பழந் தமிழ்த்துறையே திருவெம் பாவையாகும். வேறெம் மொழியிலுமில்லா இத்தனித்தமிழ் வழக் கிற் கிலக்காய் அருந்தமிழணங்கே தன் ஆயத்தாரால் பலபடப் பாராட்டப்படுவது பாடி மகிழத்தக்கதாகும்.]

தமிழேம்பாவை

எண்சீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

வெள்ளி நகைக்குதுபார்! வெண்சங் கொலிப்பதுகேள்!
கிள்ளை மொழிகளையுங் கிதக் குயிலிசையும்,

---

[1]யாமனை வோருமிப் பூமியின் மக்கள்
ஏதமி லாமலு டன்பிறந் தோமால்
பூமியே லாமுமோர் நந்த வனந்தான்
பூத்தபன் மாமலர் யாத்தபல் கொள்கை
ஓமெனத் தாய்மொழி நாரொன் றிலுமே
உள்ளபல் கொள்கை ளாமல ரைச்சேர்த்
தாமன வின்றொரு மாலைசெய் தத்தந்
கர்ப்பிப்ப மித்தமி ழன்பர்நன் னூட்டே

இவை 1933ல் சென்னை பச்சையப்பன் கல்லூரிக் கட்டிடத்தில் நடந்த தமிழன்பர் மாநாட்டில் பாடப்பெற்றன.

[2]இவர் 1870ல் பிறந்து சேது சமத்தான வித்துவானாக விளங்கு பவர். மதுரைத் தமிழ்ச் சங்கத்து செந்தமிழ் எனும் மாசிகையின் பதிப் பாசிரியராய்ப் பல்லாண்டு உழைத்தவர். பின்னர் அண்ணாமலைப் பல் கலைக் கழகத்துத் தமிழ் ஆராய்ச்சியாளராய் இருந்து 1000 வெண்பாக்க ளடங்கிய பாரி காதையை அரங்கேற்றிப் பரிசு பெற்றவர். தமிழ் வர லாறு, புவியெழுபது முதலிய நூல்க ளியற்றிப் பின் ஒய்வு பெற்றுள்ள வர்.

அள்ளிவருந் தென்ற லருந்தேன் மலர்களுடன்
துள்ளிவிளை யாடுதுபார்! தும்பிஓம் சக்தியெனக்
கள்ளுண் டலம்புதுபார்! காதற் களிப்பூறி,
உள்ளங் குளிர, உயிர்குளிர, ஊன்குளிரத்
தெள்ளு தமிழென்னுந் திருவா ரமுதமய
வெள்ளத்தி லாட விரைந்தேலோ ரெம்பாவாய்! 1

வெற்றிக் குழலூதி விரையார்பூங் காற்றுன்னை
முற்றத்தே வந்தெழுப்ப, மூடிப் படுப்பாயோ?
கற்றைக் கதிர்விரித்துக் காரிருளைக் கீண்டிரவி
யுற்ற தறியாமல், ஊமைக் கனவுகளைப்
பற்றி மயங்கிப் படுக்கையில் மெய்யுணர்வு
செற்றுக் கிடப்பாயோ, சிற்றிடையே, சீவெட்கம்!
கற்றுக் கலையேறிக் கற்பகம்போ லேகனிகள்
முற்றி யுலகூட்ட வுவந்தேலோ ரெம்பாவாய்! 2

முன்னை மொழிக்கெல்லா முன்மொழியை, முத்தமிழை,
இன்னர் மொழிக்கு மினிதா மிளந்தமிழைப்
பொன்னைப்போற் போற்றிப் புதுநயங்க ளேற்றிடுவோம்
அன்னிய மாயத் தழுந்திக் கிடக்காதே
சொன்னச் சுரங்கங் காத்திருக்க வுன்மலையில்
இன்னொருவர் வீட்டி லிரந்துண்ணப் போவாயே?
என்னேயுன் னேழைமைதான்! எம்மொழிக்குந் தாரகமாய்
அன்னைமொழி யோங்க வருட்பணிசெய் யெம்பாவாய்! 3

தேவர் குறளாட்டித் திருவா சகஞ்சூட்டி
மூவர் தமிழ்பாடி, நாலாயிரம் மொழிந்து,
தாவடங்க ளாகமுச் சங்கத்தமி ழணைத்துக்
காவிய மாமணியாங் கம்ப முடிகவிழ்த்துத்
தீவினை மாற்றுந் திருமந் திரஞ்சொல்லி,
ஆவி யுருக்கும் அருட்பாவா லர்ச்சித்துக்
கூவித் திருப்புகழைக் கூத்தாடித் தெண்டனிட்டுத்
தேவாதி தேவனருட் சேர்ந்திடுவோ மெம்பாவாய்! 4

போற்றி தமிழரசி பூவெல்லாந் தாள்பணியப்
போற்றி தமிழ்ச்செல்வம் பொன்றா நவநிதியாய்ப்
போற்றி தமிழர்குலம் பொய்யா மணிவிளக்காய்ப்
போற்றி தமிழுலகம் பொன்னுலக மந்திரமாய் !
ஆற்ற லறிவாண்மை யழகின்ப வூற்றாகக்
காற்றுங் கடலுங் கதிரும்போல் வாழ்வோங்கிக்
கூற்றையும் வென்று குறைவற்றுப் பூரணனைப்
போற்றி யவனருளைப் பூண்டுய்வோ மெம்பாவாய்! 5

—சுவாமி சுத்தானந்த பாரதியார்

14. [பழந்தமிழணங்கின் பழுதில் தொல் புகழைப் பரப்பு வான் வேண்டி அவளது அருமை பெருமைகளை அறிவு முறையில் ஆய்ந்து மகிழ்வன இப்பாடல்கள்.]

எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

1 பழந்தமி ழணங்கே! பாரெலாம் பரவு
மொழியெலாம் பரவுறு மரசி!
பழகுவா ருள்ளத் துள்ளுதோ றினிக்கும்
பான்மையிற் சிறந்ததோர் சுவையே!
அழகுறு மொழியென் றியம்பிடு மொழிக
ளனைத்திற்கு மணிசெயு மணியே!
பழுதறு முலக முழுதுநின் புகழே
பகர்த்திடர் தணித்திட வருளாய்!

2. நீரினி லழுந்தி வெளிப்படு முலகில்
உயிர்த்துமுன் றோன்றிய மலையில்
வீரமு மறிவும் விளங்கிடத் தோன்றி
மேன்மைகொள் பழந்தமிழ் மக்கள்
சீருற முதற்க ணியற்கையி னின்று
செப்பிய பழந்தமிழ்ச் செல்வி!
பாரெலா நியாய்ப் பரந்தநின் பெருமை
பண்டுபோல் நின்றிட வருளாய்.!

3. முன்னரே தோன்றிப் பரந்தநின் றன்மை
மொழிந்தநல் லிலக்கண மீந்து

தென்மலை யிருந்த முனிவரன் பெற்றுன்
சீர்மிகு சிறப்பினை யம்மா!
என்பதே யன்றி யவனினைப் பெற்று
னென்பது புலத்துறை யாமோ!
மன்பதை முகம னாகவவ் வண்ணம்
மலைவுற மொழிந்ததை யன்றே!

4. திருமகள் கொழுநன் நெடியவ னாகித்
திகழ்ந்துமுன் மூவடி யளந்த
அருமைசே ருலக மனைத்தையும் நின்று
விளங்குமுத் தமிழினு ளளந்தோய்!
பெருமைசேர் மக்க ளுளத்தினி லியலும்
பேசிடு வாக்கினி லிசையும்
பருமைசேர் மெய்யிற் கூத்தையும் படைத்த
பண்புகள் பகர்ந்திட லெளிதோ?

5. தமிழர்கள் மொழியாய், நினைப்பினும் நாவில்
தயங்கிடக் கூறினும் செவியில்
அமிழ்தெனச் சிறந்து கேட்பினும் மினிக்கும்
அழகுறு மியல்பினை யாகி
தமிழ்என நான்கு கணங்களுங் கூடித்
தழங்குறு தன்மையாற் பெற்ற
தமிழெனும் பெயரே நின்னுடை யெழிற்குத்
தக்கதாம் பண்பின தம்மா!

—செ. வேங்கடராமச் செட்டியார்[1]

[1] இவர் 1913ல் வட ஆற்காடு கோட்டம் வில்வாரணியம் தாலுக்கா போளூரில் பிறந்தவர். அண்ணாமலைப் பல்கலைக் கழக வித்துவான் தேர்வில் முதல் பரிசு பெற்று ஆங்குத் தமிழ் ஆராய்ச்சியாளராய்ச் "சங்க இலக்கியங்களிற் கண்ட தமிழர் நாகரிகம்" எனும் நூலெழுதியவர். காஞ்சிபுரம் அண்டர்சன் உயர் கலாசாலைத் தமிழாசிரியராயிருந்து பின்னர்த் தம் சொந்த ஊரில் ஒரு பெரும் இலவசத் தமிழ்ச் சுவடி நிலையம் திறவிப் புலவர் வகுப்பு மாணவர்களுக்குப் பாடஞ் சொல்லிவரும் அருந்தமிழ்த் தொண்டராவர்.

15. [செந்தமிழின் சீர்த்திகளை விளக்கி விளித்துப் பராவுவது இப்பதிகமாகும்.]

## தமிழ்மாலை

### காப்பு

சட்சமயத் தேவரையுஞ் சந்ததமுன் னாற்றுதித்தே
னெட்சரி[1]யென் றேனு மிரங்கிலார்—பட்ச
மொருசிறிது வைத்தெனக்கா முண்மைதர வேண்டு
மிருமைநலந் தோய்ந்ததமி ழே.

### கலிநிலைத்துறை

அனகமாகிய[2] சித்தியு முத்தியு மடியே
னுனதுதாரகத் தாற்பெறக் கருதலோர்க் குதவாய்
சனகனாதியர்க் கருளிய சிவனிகர் தவத்தோன்[3]
மனமதாற்றா மலயமேல் வந்தசெந் தமிழே!

கவலைவாரிதி யிடைப்படு தமியனேன் கருத்திற்
றவமுமெய்யரு ளாண்மையும் பொருந்திடத் தாராய்
பவளவாய்ச்சிறு மானிகர் பரவைபாற் பரம
சிவனோர்தூதெனச் செல்லவுஞ் செய்துயர் தமிழே!

பாலும்வாய்வழி வழிதர மரிப்பவர் பலர்போன்
மாலுஞ்சோகமு மலியநான் வருந்திடத் தருமோ
ஆலும்[4]வாரியுந் துயில்பவன் போய்வர[5] வந்நா
ளோலு[6]மெய்ப்புக ழோடுமிகப் படருமொண் டமிழே!

எனதுநெஞ்சகத் திலங்குறு சாத[7]முற் றெய்திப்
பனகமேந்திய படி[8]யுயப் பார்ப்பதுன் பாங்கா
னுனதுமேன்மைகண் டுமையவ ளொருகவிப் புலவற்
கனமுலைக்கி[9]யன் றுடன்செலச் செயுமருந் தமிழே!

---

[1] எள்ளளவும். [2] பாவமற்றதாகிய. [3] அகத்தியன். [4] ஆலமரத்திலும் [5] திருமழிசையாழ்வாருக்காகத் திருமால் காஞ்சியைவிட்டு ஓரிரவிருக்கையெனும் ஊருக்குச் சென்ற கதை குறிப்பிடப்படுகிறது. [6] ஒலிக்கின்ற. [7] உண்மை. [8] இவ்வுலகம் உய்ய. [9] குமாரதேவர்க்கு விருத்தாம்பிகை அன்னம்பாலித்தது ஈண்டுக் குறிப்பிடப்படுகிறது.

கொவ்வைவாய்ச்சிறு வனிதையர் மயலிடை குளிப்பேன்
றெவ்வை[1]நேர்மிடிப் பிணியறச் செய்திடற் கிரங்கா
யௌவையாரைமுன் கணபதி கயிலையி லமைப்பச்
செவ்வையார்தொனி[2] விளைத்திடுந் தெய்வதத் தமிழே!

எந்தவேளையு மின்சுவை கருதிடு மியானும்
பந்தவேதனைப் படுவது முறைகொலோ பகராய்
யந்தகாளொரு குன்றமு மலகையு மழியக்
கந்தன்வேற்படை விடும்படி கவின்றரு[3] தமிழே!

அமையுமென்மனத் தாவலெல் லாமுடித் தப்பாற்
கமை[4]குலாவிய ஞானமுற் றுயும்வழி காட்டாய்
குமையுமானிடத் திரளெலாங் கொண்டுநின் றுய்யுஞ்
சமயமேயென[5]ப் பன்னிரண் டுயிர்கொள்பைந் தமிழே!

விரியுமேதினித் தலையெனை வெருட்டுறு மிடிபோ
யரியைநேர்புக ழுறவிழைந் திடலுன லலவோ
பரிதியாதிய முச்சுட ராமெனப் பார்க்கிற்
றெரியுமாய்தவக் காத்தொடு[6] திகழ்தரு தமிழே!

விதியை வென்றுயர் மெய்த்தவத் தினர்க்கிறை மேவும்
பொதியை வெற்பினிற் பேரய்வரும் புகழுறப் புரிவா
யதிர்ப வாங்கலைப் பகுப்பெலா மங்கமென் பதனூற்
பதினென் மெய்கொடு[7] பார்மிசை திகழ்பசுந் தமிழே.

---

[1] பகைமை. [2] விநாயகரகவல். [3] நக்கீரர் பாடிய திருமுருகாற்றுப்படை. [4] பொறுமை. [5] அகச்சமயம் ஆறும் புறச்சமயம் ஆறும் ஒப்ப பன்னிரு உயிரும் அமைந்திருத்தல். [6] பரிதி, மதி, தீ ஆகிய முச்சுடரும் இறைவன் திரு முகத்தில் ஃ வைப்போல் முக்கண்ணாய்த் திகழ்வது குறிப்பிடப்படுகிறது. [7] பதினென் மெய்யும் அவளது அங்கமாய்ப் பதினென் மொழிகளிலுள்ள (திசைச்சொல்) கலைப் பகுதிகளை உணர்த்துவனவாகும்.

தம்மை நின்புகழ்க் கடலிடை வீழ்த்தினர் தமரா
மிம்மை வாழ்வுறத் தமியனேற் கொருசிறி திரங்காய்
செம்மை வெண்மையாய்க் கருமையு மாய்த்திரு முதலா
மும்மை மாதரிற் றிகழ்தரு[1] முதியமுத் தமிழே.

நீடு சீர்த்திரு நெல்லையி னிலவிய சிறுவன்[2]
பாடு முத்தமிழ்க் கலையினைப் பழிச்சுமிப் பதிக
மோடு கொள்ளினு முயர்முடி கொள்ளினு[3] முலகோர்
நாடு மெய்ப்புகழ்க் கடலினை நல்கிடு மன்றே.

—தண்டபாணி சுவாமிகள்[4]

16. [*தமிழ்த்தாயின் தனிஇயல்புகளை நகைச்சுவை ததும்பவும், தமிழர்களின் அறியாச் செயல்களை அழுகை பிறக்கவும் அருமை வாய்ந்த கலவையாய் ஒரோ தமிழ்த்தாயை விளித்து விளித்து வணங்கும் உணர்ச்சி மிக்க பாடல்கள்-பின் வருவனவாகும்.*]

கலிநிலைத்துறை

இருநிலத்துப் பெருமக்கள் தோன்றியநாள் தோன்றியநின்
திருவடிகள் போற்றுகின்றேன் செய்ய தமிழ்த்தாயே!

---

[1] முறையே சிவப்பு, வெளுப்பு, கறுப்பு நிலமுடைய அலைமகள், கலைமகள், மலைமகள் போன்று விளங்குவது தமிழ். [2] இந்நூலாசிரியர் [3] ஓட்டாண்டியேனும் முடிமன்னரேனும் போற்றின். [4] இவர் முருகதாச சுவாமிகள், திருப்புகழ்ச்சுவாமிகள், வண்ணச்சரபம், தண்டபாணிப் பரதேசி எனவும் அழைக்கப்பட்டு, 1838 முதல் 1898 வரை விளங்கியவர். முருகவேள்பாற் பேரன்பு பூண்டு அவனருள் பெற்றுத் திகழ்ந்த அரும் புலவர். இப்பதிகமும் இனி வரும் தமிழலங்காரமும் அவன் கேட்டுக் கொடுத்துப் பாடியனவாகும். இவர் பாடியவை கணக்கி லடங்கா. சிறப்பாகப் புலவர் புராணம், திருவாமாத்தூர்ப் புராணம், தில்லைத் திருவாயிரம், பழனித் திருவாயிரம், தெய்வத்திருவாயிரம், திருவரங்கத் திருவாயிரம், ஏழாயிரப் பிரபந்தம், ஐவகையிலக்கணம், திருமகளந்தாதி, பதிகச் சதகம், சதகப் பதிகம். திருச்செந்தூர்த் திருப்புகழ், திருச்செந்தூர்க்கோவை, ஒலியலந்தாதி, குறிப்பிடத்தக்கன. இவர் திருவாமாத்தூரிலும், பழனியிலும் சிறப்பான மடங்கள் கட்டியவராவர்.

பாவேந்தர் மூவேந்தர் போற்றிசெயப் பண்டெல்லாம்
நீவேந்தர் வேந்தாகி நின்றாய் தமிழ்த்தாயே!

எழுத்தொடுசொல் லன்றிப் பொருள்கண்டா ரின்றாக
எழுத்தொடுசொல் லும்பொருளுங் கண்டாய் தமிழ்த்தாயே!

பொருளறியார் எல்லாப் பொருளுநின்பால் இன்றென்னல்
குருடர்ஒளி இல்லையெனல் ஒக்கும் தமிழ்த்தாயே!

பின்றோன்றி எண்ணற்றார் பேச்சொழிந்து நிட்டையுற
முன்தோன்றி நின்றாய்நீ மும்மைத் தமிழ்த்தாயே!

கால வரம்பு கடக்கும் முதுமையுற்றும்
சால இளமை தழைத்தாய் தமிழ்த்தாயே!

கண்ணோடி யாவரையும் ஆதரித்தாய் எல்லோரும்
கண்மூடி நீவாழக் கண்டார் தமிழ்த்தாயே!

நின்னை விழுங்கவந்த நீரோடு மண்ணெருப்புத்
தம்மை விழுங்கித் தளிர்த்தாய் தமிழ்த்தாயே!

பாலொடுதேன் பழமிவைகள் உண்ண வினித்திடுமால்
ஏல நினைத்தாலு மினிப்பாய் தமிழ்த்தாயே!

ஈன்றாள் பசித்திருக்க எண்ணான் கறம்புரிந்தாங்
கான்ற மொழிபல்ல பயில்கின்றார் தமிழ்த்தாயே!

எல்லோரும் ஓர்குலமே என்ற மொழிமறைத்துப்
பொல்லா தவர்கொடுமை புரிந்தார் தமிழ்த்தாயே!

வன்பால் அறிவிழப்பால் தெய்வம் பலசமைத்தார்
அன்பே யெனவுரைத்தாய் தெய்வத் தமிழ்த்தாயே!

சிந்தா மணிபடைத்தும் செம்பொன் நிதிமிகுத்தும்
அந்தோநின் மக்களுண வற்றார் தமிழ்த்தாயே!

வள்ளுவர்வாய் மொழியினொடு மந்திரப்பொன் மொழியிருந்
[தும்
தெள்ளியநல் லறிவிழந்து திகைத்தார் தமிழ்த்தாயே!

பொய்யற்ற கேள்விப் புலத்துறைமுற் றியகம்பன்
தெய்வநூல் பெற்றுச் சிறந்தாய் தமிழ்த்தாயே!

சைவ நெறிவளர்த்த தலைவர் ஒருநால்வர்
தெய்வ அருட்பாடல் பெற்றாய் தமிழ்த்தாயே!
பரந்த கலைகளெனும் பன்மா மலர்ப்பிணையல்
கிடந்து மணங்கஞற்றல் உண்டோ தமிழ்த்தாயே!
காவியப்பூந் தேறலிடை வண்டாய்ப் புலன்கள்விழ
ஆவி மறந்துநிற்ப துண்டோ தமிழ்த்தாயே!
காதல் வரம்புகண்டும் வீரச்சுவை மடுத்தும்
சாதல் விழைத்திடுநின் புறநூல் தமிழ்த்தாயே!
உள்ளுந்தோறும் அள்ளூறித் தெள்ளமுதம் ஊற்றியென்றன்
உள்ள முருக்கியாட் கொண்டாய் தமிழ்த்தாயே!

—வித்துவான் முருக. இலக்குவனார்[1]

17. [பூக்கொய்தல் மகளிர்க்கேற்ற விளையாட்டாகும். அது நிகழுங்கால் அவற்றை ஊதும் தும்பிகளுடன் உரையாடத் தோன்றல் இயற்கையேயாகும். அதற்கேற்பத் துறை வகுத்துப் பாடிய தமிழ்ப் புலவர்களின் கற்பனைத்திறன் ஒப்பற்றதேயாகும். தமிழணங்கு பற்றிய அவ்வறிவுறுத்தலின் விழுமிய கருத்துக்களைக் கேட்கக் கேட்க அவளது இன்னலத்தில் ஈடுபடாதிருக்க ஒண்ணுமா?]

தமிழ்த்தாய்க் கோத்தும்பி.

கொச்சகக்கலிப்பா

நந்தும்உல கியல்மலியும் தொல்லைகளால் நலிவுற்றும்
வெந்துயராம் பாலையிடைத் திரிந்தும் சோர்தருமென்
சிந்தைகனி தளிர்ப்பெய்திக் களிப்பூறித் தனைமறக்கும்
செந்தமிழ்த்தாய் சேவடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ! 1

---

[1] இவர் 1914ல் பிறந்து திருவையாற்றுக் கல்லூரியில் தமிழ் பயின்று வித்துவான் பட்டம் பெற்றவர். சில கலாசாலைகளில் தமிழாசிரியராயிருந்து தமிழ்ப் பற்றைப் பெருக்கியவர். சென்னை அகநானூற்று மாநாட்டுப் பாலைத் திணைச்சொற்பொழிவாளர். திரு. வி. கலியாணசுந்தர முதலியார் மணிவிழா அமைச்சர். முருகன் புகழ்மாலையும் பலசில்லரைப் பாடல்களும் இயற்றியவர். சென்னைத் தமிழ்ச் சங்கத்தில் அருந்தொண்டாற்றி வருகிறார்.

உற்றா ரிலாதேனுக் குற்றாரா யுடனமர்வும்
பற்றேது மில்லேனைப் பற்றிவிடாப் பெரும்பற்றும்
மற்றாரும் தன்னொப்பா ரில்லாத மாண்பும்உடை
நற்றாய்தன் றாண்மலர்க்கே நயந்தூதாய் கோத்தும்பி! 2

உலகமெலாம் இருள்மூடி ஊமர்களாய் மக்களுற்ற
தலைநாளே நாகரிகத் தனியரசு செலுத்தியவள்
கலைவார்தம் அழிவுசெயல் புறங்கண்ட இளமையினாள்
உலவாச்சீர்த் திருவடிக்கே உணர்ந்தூதாய் கோத்தும்பி! 3

தீங்கனியிற் பிழிந்தெடுத்த நறுஞ்சாறும் செழுங்கரும்பின்
தேங்குசுவைக் கட்டிகளும் சேல்விழிய மடவாரும்
ஓங்குமுடி கவித்துலகா ளரசும்உவை கைப்பூறும்
பாங்குதரும் தமிழ்த்தாய்க்கே படர்ந்தூதாய் கோத்தும்பி! 4

எழுத்தொடுசொற் பெற்றார்கள் எல்லாரும் பொருளிலராய்
வழுத்திநனி கையேந்த வளஞ்சான்ற பொருள்பெற்றாள்
தழைத்தனளால் அகம்புறமும் தமிழ்த்தாய்தன் தண்ணார்ந்த
முழுத்தபுகழ்ச் சேவடியே முன்னூதாய் கோத்தும்பி! 5

தாதணையைத் தள்ளிநனி வாய்வல்ல பாட்டிசைத்துக்
கோதுவாய் தினையளவிற் குறைதேனை உண்ணாதே
ஓதலின்றி உள்ளுதொறும் தெள்ளமுதக் கள்ளூறும்
தீதில்லாத் தமிழ்த்தாய்தன் திருவடியே கோத்தும்பி! 6

திறைகொண்டிவ் வுலகாண்ட திறல்வேந்தர் சிந்தையெலாம்
திறைகொண்ட பெருமாட்டி சிறியேன்றன் உள்ளத்தே
உறைகொண்டாள் ஓவாத சுவைத்தேறல் துளித்தூற்றும்
நறைகொண்ட தாமரைநாண் மலரூதாய் கோத்தும்பி! 7

உலகியலின் இன்பமெலாம் உவர்த்துநனி உயர்ந்தோரும்
கலையினிமை மொழியினிமை கருத்தினிமை தனில்மூழ்கி
அலையுமனம் ஓய்ந்தொடுங்கி அருள்நிழல் பெறநின்றாள்
ஒலியினிய தமிழ்த்தாய்க்கே உணர்ந்தூதாய் கோத்தும்பி! 8

இயலானிவ் வுலகியன்றும் இசையால்நல் லிசைவளர்த்தும்
மயல்திர்நன் னாடகத்தால் மக்களறி வுறச்செய்தும்
அயல்நாடு தலைவணங்கப் பிறமொழிகள் வாயடங்க
வியலரசு வீற்றிருந்த விழுமியாள் கோத்தும்பி! 9

நிலையாமை நிலையுலகில் தாயிழக்கும் நீள்துயரம்
தொலைவாக ஒருஞான்றும் தொலையாத தாயாகிப்
புலியாகிக் கயலாகிச் சிலையாகி உலகளந்த
கலைஞானப் பெருமாட்டி கழலிணையே கோத்தும்பி! 10

—வித்துவான். முருக. இலக்குவனார்.

18. [*தமிழரசியின் தனிப்பிறப்பு வளர்ப்பையும் அருஞ்செயல்களையும் இனிது மொழிந்து அவளை அழைத்து அழைத்துப் போற்றுவது இச்சுவை மிகு பாடல்.*]

வண்ணகவொத் தாழிசைக் கலிப்பா.

அருமருவு மொருகுடிலை யருள்நோக்கக் கருவாக்கும்
உருமருவு நாதவிந்தின் உறுமியற்கை யொலித்திரளை
விங்குநீர் வியன்கங்கை வேணியணி வேதியனும்
பூங்கடம்பு புரளகலப் புண்ணியனு முருவாக்கித்
தம்பதங்கள் விதிமுறையே நெஞ்சழுத்தித் தவங்கிடந்த
கும்பமுனி கரங்கொடுக்க வவன்மடியிற் குருத்தாகி
மூவேந்தர் தாலாட்ட முச்சங்கத் தேகிடந்து
பாவேந்தர் செந்நாவில் நடைபழகி மொழிபயின்று
மங்குலுறை வேங்கடமும் வான்குமரிப் பேராறும்
தங்குமிடைத் தமிழுலகம் அரசுபுரி தமிழ்த்தாயே!

மன்னுமருட் தன்மையினும் வளமையினும் புதுமையினும்
உன்னைநிக ரானமொழி யுலகினிலே யொன்றுண்டோ!
பாற்கடலின் விடங்கொடுத்த பண்ணவர்கள் நனிகாண
நூற்கடலின் சுவையமுத மரன்செவியில் நுழைத்தனையே!
உருக்காணாப் பேரிருளில் ஒருவனுக்காய் ஒருத்தியிடை
இருக்காலும்[1] காணானை யிருக்காலு[2] மேவினையே!

---

[1] இருக்குவேதத்தாலும் [2] இருமுறையும்

பெருமுதலே சிறுமதலை தாவருளிப் பெற்றோர்கள்
பொருமுதலுங் கருமுதலும் போக்கமொழி புகன்றனையே!

நிறைமதி பொழிதரு நிலவெனு மெழிலினை!
மறைபிணி கதவுடன் வழிவிடு மொழியினை!
இருமையு முதவிடு மிசைதரு மதியினை!
வருமறி வினரக மகிழ்வுறு துதியினை!
வாமிகு புலவர்கள் மனநிறை குறியினை!
மதுரையி லரசியல் மருவிய நெறியினை!

பொய்யுரைப்போர் புன்னவில் பொருந்தியதீட்
[டோட்டுதற்கோ
செய்யதமிழ்ப் பெருமாட்டி தீயிடைநீ குளித்ததுவே!
வேற்றுமொழி தீண்டுதலான் மேனிகழீஇக் கொள்வதற்கோ
ஆற்றெதிரே யேட்டின்மிசை யம்மாநீ நீந்தியதே!
எஞ்சலிலா வுயிர்மருந்து யானென்ப துணர்த்துதற்கோ
நஞ்சமுத மாக்கியெங்கள் நாயகிநீ காட்டியதே.!

நாவினிலே நின்றோய்நீ! நல்லமொழி பயின்றோய்நீ!
பூவினிலே யமர்ந்தோய்நீ! பூவுலகம் புரந்தோய்நீ!

உரையுநீ! பொருளுநீ! உள்ளுநீ! புறமுநீ!
விரையுநீ! மலருநீ! வித்துநீ! முளையுநீ!
எனவாங்கு
யாழினுங் குழலினும் பாலினுந் தேனினும்
காணினுங் கேட்பினுங் கருதினு மினிக்கும்
அருந்தமிழ்ப் பாவாய்! ஆருயிர் மருந்தே!
இருந்தவர்க் கொளியே! இசைமூரல் கிளியே!
நந்தா விளக்கே! சிந்தா மணியே!
பூமிசைப் பொலிந்தநின் தோமறு சீர்த்தி
புந்தியிற் கொண்டு சந்ததம் போற்றுவன்

நிலவினும் தண்ணிய நின்சீர்
உலகெலாம் ஓங்க உளங்கொள் ளுதியே[1]!

—திரு. சோமசுந்தரப்புலவர்[2]

19. [ஒண்டமிழ்ச் செல்வியின் பண்டைப் பயன்களையெல்லாம் பகர்ந்து பல்வகை மலர்களைப் பரிந்தாய்ந்து எடுத்து வணங்கி, இனி வருங்காலத்துச் சிறப்பும் சீரியதாய் இருக்குமாறு அருள்புரிய வேண்டிக்கொள்வது இப்பதிகம்.]

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

1. வழிவழித் தமது நாடுக ளாண்டு
வடபுலம் காத்திசை கொண்ட
செழியனற் சோழ சேரரை யின்று
சிறப்புறுஞ் செந்தமிழ்ச் செல்வி!

---

[1] மேற்கண்ட வரிகளே மூல பாடமாவன:—

நீதரு முயிரிளங் குமரன்
காதை கூறக் கருணைசெய் குதியே

[2] இவர் 1879ல் யாழ்ப்பாணத்து நவாலியூரில், பழந்தமிழரசரால் அருமையினர் என்ற பட்டம் சூட்டப்பெற்ற வன்னியசேகர முதலியார் குடியிற் பிறந்தவராவர். தமிழ்ப் புலமை வாய்ந்த தம் தந்தையாரிடம் தமிழ் கற்று சைவ சித்தாந்த நூல்களில் சிறந்த தேர்ச்சியும், சோதிடம், மருத்துவம், ஆங்கிலப் பயிற்சியுமுடையவராவர். பெங்களூர் சுப்பிரமணிய சுவாமிகள்பால் ஞானம் பெற்றவர். வட்டுக்கோட்டை சைவ ஆங்கில வித்தியாசாலையில் 1898 முதல் 1939 வரை தலைமைத் தமிழாசிரியராய் விளங்கி விடுதிபெற்றவர். 1927ல் நவாலியூர் சைவமாசபையாரால் புலவர் பட்டமும் 1939ல் 3000 ரூபாய் பொற்கிழியும் பெற்று போற்றப் பெற்றவராவர். இவரியற்றிய நூல்களாவன:— உயிரிளங்குமரன் நாடகம் (இப் பாடல் அதன் பாயிரமாகும்), மருதடி விநாயகர் பாமாலை, முருகன் பாமாலை (1000 செய்யுட்கள்), நாமகள் பாமாலை (1500 பாடல்கள்), கதிரைச் சிலேடை வெண்பா, கதிரையுலா, கந்தவனக் கடவுள் நான்மணி மாலை, தந்தையார் பதிற்றுப்பத்து, தாலவிலாசம் முதலியன.

மொழிமலர் புனைந்து திருவடி தொழுதும்
முன்புபோல் வன்மையும் அறிவும்
ஒழிவரும் உழைப்பும் வென்றியும் எமக்கிவ்
வுலகினை யாளுமா றருளாய்!

2\. இல்லையென் றுரையா திரவலர் புலவர்க்
கிந்தவேள் பாரியே முதலாம்
நல்லிசை வள்ளல் எழுவரை யீன்று
நலம்பெறுஞ் செந்தமிழ்ச் செல்வி!
முல்லைநன் மலரால் திருவடி தொழுதும்
முத்தமிழ் வளர்ச்சிக்கு நெஞ்சக்
கல்லையு முருக்கிச் செல்வங்கள் நல்கிக்
களிக்குமா றுலகினுக் கருளாய்!

3\. பண்டங்கள் கொண்டு காலினும் கலத்தும்
பலநிலம் புகுந்துவிற் றரும்பொன்
கொண்டிவண் ஈன்ற வணிகரை யீன்று
குலவுறுஞ் செந்தமிழ்ச் செல்வி!
இண்டைகள் கொண்டு திருவடி தொழுதும்
எமதுபல் தொழிலையும் பெருக்கிப்
பண்டுபோல் என்றும் வாணிபம் புரிந்து
பலபொருள் கொள்ளுமா றருளாய்!

4\. பட்டுநூல் மயிரால் பார்மிசை முதலில்
பலவுடை நெய்தலே முதலாம்
ஒட்பமார் தொழில்செய் தவர்களை யீன்றிங்
குயர்வுறுஞ் செந்தமிழ்ச் செல்வி!
வெட்சிமா மலரால் திருவடி தொழுதும்
வினைசெயுந் திறமையும் வினைக்கு
நுட்பமா ரறிவுஞ் செப்பமார் பயனும்
நூலறி வேமடைமக் கருளாய்!

5\. வள்ளுவ னொடுதொல் காப்பியன் இளங்கோ
வண்டமிழ்ச் சாத்தனே முதலாம்

தெள்ளிய புலமைச் செல்வரை யீன்று
சிறப்புறுஞ் செந்தமிழ்ச் செல்வி!
கள்ளவிழ் மலரால் திருவடி தொழுதும்
கள்ளமி லுள்ளமாம் வயலில்
ஒள்ளிய கல்வி விதைவிதைத் துணர்வாம்
உயர்பயிர் விளைத்தெமை யுயர்த்தாய்!

6. நல்லிசைப் புலவ ராடவர் போன்று
நயமிகுந் தொடைபல தொகுத்த
மெல்லியல் மகளிர் பற்பல ரீன்று
மேம்படுஞ் செந்தமிழ்ச் செல்வி!
மல்லிகை மலரால் திருவடி தொழுதும்
மகளிர்க்கு மடமையா மிருளைக்
கல்வியாம் விளக்கா லகற்றிநா லுணர்வுக்
கதிரினால் நாற்கதி காட்டாய்!

7. பிள்ளைகள் பெற்று மகிழ்தலிற் பகைக்குப்
பிற்கிடா திறந்தபிள் ளையைக்கண்
டுள்ளுவப் புற்ற தாயரை யீன்றிங்
குயர்வுறுஞ் செந்தமிழ்ச் செல்வி!
வெள்ளைநன் மலரால் திருவடி தொழுதும்
வீரத்தைப் பாலுட னூட்டிப்
பிள்ளையை வளர்க்கும் முறையினை யிந்நாட்
பெண்களுக் குளமகிழ்ந் தருளாய்!

8. பிறப்பிலுள் பொருளே கடவுளாம்[1] மக்கட்
பிரிவின ரொருகுல மென்னும்
அறத்திற முணர்ந்த அறிஞரை யீன்றிங்
கழகுறுஞ் செந்தமிழ்ச் செல்வி!
திறத்துநன் மலரால் திருவடி தொழுதும்
நினைப்புக்கும் வாழ்க்கைக்கும் ஒவ்வாத்
திறத்தினைப் போக்கி அகத்திலும் புறத்துஞ்
செம்மை யோடிருக்குமா றருள்வாய்!

---

[1] பிறப்பில்லாத உள்பொருளே கடவுளாம்.

9. ஆரியப் படையைப் பலகளத் தோட்டி
அடிபணிந் தருளினல் விடுத்த
சீரிய தானை வேந்தரை யீன்று
சிறப்புறுஞ் செந்தமிழ்ச் செல்வீ!
காரிடு மலரால் திருவடி தொழுதும்
நற்றமிழ் நாட்டிற்கும் நினக்கும்
பேரிடர் புரியும் பூரியர் தம்மைப்
பிறக்கிட எமக்கருள் புரிவாய்!

10. அறஞ்செயு முறையும் பொருள்செயு முறையும்
அன்பின லின்புறு முறையும்
திறம்பட வுரைத்த தேவரை யீன்று
சிறப்புறுஞ் செந்தமிழ்ச் செல்வீ!
நறுஞ்சுனை மலரால் திருவடி தொழுதும்
நற்றமிழ் நாடும் அந்நாட்டின்
புறங்களுங் குறளின் நெறிவழி யொழுகிப்
பொய்யெலாம் போக்குமா றருளாய்!

—பெ. கோவிந்தன்.

20. [தமது வழிபடு கடவுளும் தம்மைப்போலவே எழுந்து முழுகி, உடுத்துப், பூச்சூடி, உண்டுண் டுறங்குவதாகப் பாவித்துவழி படல் தொண்டரியல்பாம். அதற்குகந்தவாறு திருப்பள்ளியெழுச்சி எனும் தனித் தமிழ்த்துறை ஒப்பற்ற பெரும் புலவரால் வகுக்கப்பெற் றுளது. ஈண்டு ஒருக்காலுந் துயின்றறியா ஒப்பரிய தமிழ்த்தாயும் சில பல பதிகங்களால் துயிலுணர்த்தப்படுவதின் அருமைப்பாடுகள் அழகுடையனவேயாகும்.]

### தமிழ்த்தாய்த் திருப்பள்ளியெழுச்சி.

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

(அ)

1. பன்னிய புறமொழி விழைவெனுங் கங்குல்
பைப்பைய விடிந்தது படரொளி பரப்பி

மன்னிய வின்புக ழாயிரஞ் சுடர்க்கை
வானவன் நாவெனும் மலைமுக டுதித்தான்
துன்னிய புறமொழித் தாரகைச் சூழல்
சுடரொளி யவிந்தன குவிந்தனர் தொண்டர்
என்னித யத்துறை முத்தமிழ்க் கடலே
இன்னமு தேபள்ளி யெழுந்தரு ளாயே!

2. சந்தனச் சிலம்பினி லிசைக்குயில் கூவுந்
தருமருட் பாவினச் சங்கொலி மேவுஞ்
செந்தமிழ்த் திருப்புகழ்ச் சேவல்கள் யாவுஞ்
சிறைபுடை யடித்தெதிர் சிலம்பிடக் கூவும்
அந்தமில் கலைக்குரு காற்றிய வொலியும்
அடியவர் சயசய வமலையு மலியும்
எந்தமை யாண்டருள் முத்தமிழ்க் கடலே
இன்னமு தேபள்ளி யெழுந்தரு ளாயே!

3. அன்புடை யடியவர் அகப்புனற் றடந்தோ
றறிவெனும் தாமரை முகைநெகிழ்ந் தவிழ்ந்த
வன்புடைப் பேதைமை மடுவினிற் பூத்த
வஞ்சனை பொய்முதல் மலர்வகை குவிந்த
இன்புடை யறம்பொரு ளின்பமும் வீடும்
எய்துதல் விருப்பினில் யாவரு மெழுந்தார்
என்புயிர் பெறவருள் முத்தமிழ்க் கடலே
இன்னமு தேபள்ளி யெழுந்தரு ளாயே!

4. புத்தலர் பூங்குழற் புயல்புறந் தவழும்
புதுநில உமிழ்மதி முகமலர் பொழியும்
முத்தன விளநகை முறுவலின் கருணை
முந்துறக் கண்டடி முளரிகள் தொழுவான்
பத்திமை யடியவர் கோயிலின் வாயில்
பாடின ராடினர் பரவினர் படர்ந்தார்
இத்தரை மதித்திடு முத்தமிழ்க் கடலே
இன்னமு தேபள்ளி யெழுந்தரு ளாயே!

மீட்டிய யாழினர் குழலின ரொருபால்
 வெண்டுகிற் பட்டினர் விரையின[1] ரொருபால்
கூட்டிய சுண்ணத்தர் வண்ணச் செஞ்சாந்தர்
 குளிர்புனல் மஞ்சனக் குடத்தின ரொருபால்
தீட்டிய செழுந்தமிழ் மாலைய ரொருபால்
 திருவடி வணங்குபு திறையொடு புகுந்தார்
ஏட்டினி லெதிர்தவழ் முத்தமிழ்க் கடலே
 இன்னமு தேபள்ளி யெழுந்தரு ளாயே! 5.

அரன்றனைக் கடலி லழைத்தமை பாடி
 அருமறைப் பூட்டினை யவிழ்த்தமை பாடி
சிரந்தனை யறுத்துயிர் கொடுத்தமை பாடி
 தீயின்மே லாடிய திறமையும் பாடி
வரந்தரு வாரமுங் கோவையும் பாடி
 வாசகம் பாடிநல் வாய்மொழி பாடி
இரந்தனர் தொண்டர்கள் முத்தமிழ்க் கடலே
 இன்னமு தேபள்ளி யெழுந்தரு ளாயே! 6.

முப்புர மெரிசெய்த முதுபரம் பொருளும்
 முருகனு மொருகுறு முனிவனும் பிறரும்
செப்பிய செழுந்தமிழ்ப் பாண்டிநன் னாட்டில்
 திருவொடும் வளர்த்தருள் செய்தவப் பாவாய்
கைப்பிடி புதுமலர் கொண்டுன தடியார்
 காமரு சேவடி கைதொழ வடைந்தார்
இப்படி துதித்திடு முத்தமிழ்க் கடலே
 இன்னமு தேபள்ளி யெழுந்தரு ளாயே! 7.

தேனெனப் பாலெனச் செழுங்கரும் பூருந்
 தீஞ்சுவைச் சாறெனத் தெள்ளமு தெனவே
மானன நோக்கிநின் வாய்மொழி கேட்டு
 மகிழுபு புறமொழி மாந்தரும் வந்தார்

---

[1] வாசனைப் பொருள்களையுடையவர்.

பூநனை புனைகுழற் பொன்னனை யாளே
பொற்சிலம் பலம்பிடு பூவடிப் பாவாய்
ஈனனை யும்மருள் முத்தமிழ்க் கடலே
இன்னமு தேபள்ளி யெழுந்தரு ளாயே! 8.

தேவர்கள் பாற்கடற் றீவிடங் கொடுத்தார்
சிவனுக்கு நாற்கடற் செவியமு தளித்தாய்
காவியங் கயல்விழிக் கலைப்பெரு மாட்டி
காசினிக் கேகனி கற்பகக் கனியே
ஆவியை யுருக்கிடு மருமொழிப் பாவாய்
அகத்தியன் மடிமிசை யமர்ந்திடு பூவாய்
ஏவிய புரிகுவம் முத்தமிழ்க் கடலே
இன்னமு தேபள்ளி யெழுந்தரு ளாயே! 9.

ஆடினர் பாடினர் ஆர்த்தனர் செறிந்தார்
அம்மையுன் வாய்மொழி யருமையை அறிந்தார்
தேடின ரோடினர் சிறுமையை அறிந்தார்
தெருவெங்குஞ் செந்தமிழ்த் தோத்திர மெடுத்தார்
வாடின ருன்திருக் கோலத்தைக் காண
வந்தனர் செந்துவர் வாய்ப்பெரு மாட்டி
ஏடியல் வெண்மலர் முத்தமிழ்க் கடலே
இன்னமு தேபள்ளி யெழுந்தரு ளாயே! 10.

திரு. க. சோமசுந்தரம் பிள்ளை,

(ஆ)

பொழுது புலர்ந்தது யாஞ்செய் தவத்தால்
புன்மை யிருட்கணம் போயின முன்பே
தொழுதுனை வாழ்த்தி வணங்குதற் குன்றன்
தொண்டர்பல் லாயிரர் சூழ்ந்துநிற் கின்றோம்
முழுவது மெமையுடை யாய்உயர் நடையாய்
முகமலர்ந் தருண்மொழி புகல்வது மறந்தே
விழிதுயில் கின்றதோ? இன்றமிழ்த் தாயே
வியப்பிது காண்பள்ளி யெழுந்தரு ளாயே!

இளங்கதிர் ஞாயி றெழுவனெம் மணங்கே
  எண்டிசை சென்றுசென் றுன்புகழ் புகுவ
துளங்கவர்ந் தேயய லாரையு மிங்கே
  யுய்த்ததுன் தீஞ்சுவை மெத்த வுவந்தேம்
வளங்கெழும் ஆங்கிலம் ஆரியம் என்னும்
  மங்கையர் நின்பணி கொண்டிடே நின்றார்
விளங்கவெம் முளத்தொளிர் செந்தமிழ்த் தாயே
  விழிமலர்ந் தேபள்ளி யெழுந்தரு ளாயே!

அ. கந்தசாமி பிள்ளை.

(இ)

வேங்கடங் குமரியின் விரிந்திடும் அமிழ்தே!
  விளம்பிய இனிமையின் சிகரமாங் கொழுந்தே!
பாங்குடைப் புலவர்கள் பயின்றிடு கனியே!
  பண்புடன் பாரினில் பரந்திடு பரப்பே!
தீங்ககல் நலனுறு செந்தமிழ்த் தேவி!
  தீஞ்சுவைப் பாதரு சீருடைச் செல்வி!
ஓங்கிய புகழுடை யுத்தம நிதியே!
  உயர்தமிழே பள்ளி யெழுந்தரு ளாயே!

புலவர்கள் நாவினில் பொருந்திட என்றும்
  பொய்யகல் உளத்தினில் விருந்தென உணர்வோய்!
அலகினில் ஆதியும் அந்தமு மில்லா
  அருந்தமி ழேஉன தழகதே அழகு!
பலனெலா மொன்றென உன்றனைக் கண்டோர்
  பற்றுவர் உண்மையைப் பார்நிறை செல்வி!
நலமுற அருள்பெற நயமுற இன்றே
  நற்றமிழே பள்ளி எழுந்தரு ளாயே! 2.

தென்மது ரைநகர் சீர்பெருந் தகைத்தாய்
  தெரிந்திடு தலைச்சங் கத்திருந் தாயே!
உன்னரும் இறைவனும் உடனுனை வளர்க்க
  ஓம்பினர் மன்னரும் மக்களும் ஒருங்கே!

பன்னருங் கலையுடைப் பாவையே நீயும்
பார்த்தவர்க் கருள்கலை பார்த்தனம் மறக்கேம்
இன்னருள் புரிந்தெமக் கேற்றம தளிப்பாய்!
இன்றமிழே பள்ளி எழுந்தரு ளாயே! 3.

நற்கபா டபுர நன்னக ரிருந்து
நல்லிடைச் சங்கத்தை நாட்டினர் புரப்ப
பொற்புடைச் செல்வியே! பூந்தமிழ்த் தாயே!
புண்ணியம் பயந்தருள் இன்னிய முதல்வி!
விற்பனர் கற்றவர் மற்றவர் யாரும்
விரும்பிடும் இன்றமிழ் விருந்தெனு மமுதே!
அற்புதம் அற்புதம் நின்மொழிப் பெருமை
அருந்தமிழே பள்ளி எழுந்தரு ளாயே! 4.

இயற்கையில் இறைவனின் ஏற்றம துணர்ந்தே
எடுத்துரைத் தார்அதை இனியநற் றமிழில்
அயர்ச்சியை அகற்றுவர் நின்கலை உணர்ந்தோர்
ஆண்மையும் பெறுவர்மற் றவனியிற் றிகழ்வர்
மயக்கம தறுத்துமே மாண்பொரு ளுணர்வர்
மற்றெவை உற்றெதிர் வருத்தினும் மயங்கார்
தயக்கமில் இனிமையில் வாழ்குவர் தாயே!
தண்டமிழே பள்ளி எழுந்தரு ளாயே! 5.

ஐம்பெருங் காப்பிய அணிகல முடையாய்!
அரும்பெரும் பத்துப்பாட் டாடையு முடையாய்!
நம்புறு பதினெண் கீழ்க்கணக் குடையாய்!
நாட்டிய கலைகளின் நலமெலா முடையாய்!
இன்பத்தொல் காப்பிய இலக்கண முடையாய்!
இனியநல் இறையனார் அகப்பொருள் உடையாய்!
அன்புடைத் தமிழ்மொழி ஆகிய முதலே!
அருளுரு வேபள்ளி எழுந்தரு ளாயே! 6.

முப்பெரு வேந்தர்கள் ஒருபுறம் புரக்க
முத்தமிழ்ப் புலவர்கள் ஒருபுடை தாலாட்

டொப்பினிற் பாடிட உயர்திரு மகவாய்
ஓங்கினை இன்றிவண் உற்றிடு தாயே!
செப்பிடு மகப்பொருட் செறிவினை உடையாய்
தெய்விகக் காதலைத் தெரிந்திடு முதல்வி!
ஒப்புனக் கொருவரு மில்லையீ துண்மை
உத்தமி யேபள்ளி எழுந்தரு ளாயே! 7.

எக்குலத் தாரெனும் வேற்றுமை யின்றி
எம்மதத் தாரினும் இரண்டென லின்றி
மிக்குடை ஒற்றுமை வழிதனைக் காட்டி
மேன்மைத் தமிழர்கள் எனஉணர்த் திட்டாய்!
ஒக்கலும் நண்பரும் உளமுவந் துன்னை
உச்சரிப் பார்கண்ட வுடனருந் தமிழே
பக்குவ உணவெலாம் நீயெனப் புகழும்
பைந்தமி ழேபள்ளி எழுந்தரு ளாயே! 8.

களவெனும் மணமதிற் காணரு மின்பம்
காட்டியே காதலை மீட்டிடுந் தேவி!
உளமுவந் தாரெலாம் ஒள்ளமிழ் தாக
ஓங்குவர் நின்புகழ் ஓங்குக வென்றும்!
அளவிலா மக்களும் ஆகும் இயற்கை
அனைத்தும்நின் நிலைத்திறம் ஆகுவ தறிந்தே
உளமடை திறந்துனை ஓடிடக் கண்டார்
உயிர்த்தமி ழேபள்ளி எழுந்தரு ளாயே! 9.

உன்னரு மக்கள்யாம் உன்னருள் மொழியால்
உணர்த்துவம்! அயர்ச்சியை ஒழித்திடல் வேண்டும்!
இன்னருங் கலைஅணிக் கினியகன் முகத்தோ
டெங்கள்முன் எழுந்தருள் எமதருட் டமிழே!
மன்னவர் மற்றவர் மாற்றமொன் றின்றி
மண்ணின்மேற் சமமென வந்துனைப் பணிந்தோம்!

உன்னருள் விழியுடன் கண்டெமைப் புரக்க
ஒங்குமென் தமிழன்னை உடனெழுந் தருளே! 10.

அ. மு. பரமசிவானந்தம்[1]

21. [தமிழ்த்தாயின் தண்ணளிகளையெல்லாம் எடுத்தியம்பி இன்னும் மிகுதியாகப் பேரருள் பாலிக்குமாறு அவளை அழைத்து அழைத்து வேண்டிக்கொள்வன இவ்வுணர்ச்சிமிகு பாடல்கள்.]

கட்டளைக் கலித்துறை.

செந்தமிழ்த் தாயைத் திருவுறு செல்வியைத் தென்பொதியக்
கொந்தலர் சோலையி லேழிசை கூவுங் குலக்குயிலை
நந்தலி லெல்லை நறைபொழி கொண்டலை நன்றெனுளம்
வந்து புகுந்திட மாமறை யாட்டியை வாழ்த்துவனே. 1.

தொன்மை மலர்ந்தா ரினிமை பழுத்துச் சொலும்பொருளேர்
தன்மை கனிந்தோங் கிளமை செறிந்து தவழ்திருவே
பொன்னையொப் பாய்புக லென்றுன் கழலிணைப் போதடைந்த
வென்னையாண் டுன்மக் களுளொரு ருவனா யெடுத்தருளே. 2.

சொல்லினுங் கேட்கினுஞ் சிந்தை நிறைக்கினுந் தோன்றுமின்ப
நல்லியல் நோக்கித் தமிழெனன் றறைந்தனர் நல்லறிஞர்
மெல்லிய லேயவ் விழுப்பொருள் ஆயாது வேறுசொலும்
புல்லியர் தம்மையான் புல்லா வகைநீ புரிந்தருளே! - 3.

---

[1] இவர் 1914ல் சைவ வேளாண் மரபில் காஞ்சிக்கடுத்த அங்கம் பாக்கத்தில் தோன்றி பள்ளியிறுதிவரை பயின்று பின்னர் வித்துவான் பட்டம் பெற்று பல ஆண்டுகள் தமிழ்க்கலை எனும் மாசிகை ஆசிரியராய் விளங்கியவர். செங்கற்பட்டு கோட்டகக் கழக உறுப்பினர். காஞ்சி ஆண்டர்சன் உயர்கலாசாலைத் தலைமைத் தமிழாசிரியர். தமிழ், சைவம் பற்றிய பல சொற்பொழிவுகள் பலவிடங்களில் ஆற்றியவர். சைவப்பணி பலபுரியும் செல்வர். இவரியற்றியுள்ள நூல்களாவன :—தணிகையந்தாதி, தணிகைப்பதிகம், வெள்ளம்விடுதூது, வளிவிடுதூது, பாரதி வாழ்வு, கவிதையுள்ளம் I, II முதலியன.

பொருளா ரிலக்கணச் செவ்வியும் நாற்பா புகல்வகையும்
திருவார் திணைப்பகு பாடும் பிறவுந் திகழ்ந்துநனி
யருளார் வினைகள் பலசெய் தரும்புக ழாருமுனை
மருளா ருளத்தர் தனித்தியங் காயெனும் மாற்றமென்னே? 4.

என்னே யிவர்த மறிவின் றகைமை யிரும்புகழார்
பொன்னே யுனதின் பொருணலந் தோயும் புலமையிலார்
கொன்னே யுனைக்குறை கூறினும் யானுளங் கொள்ளுவனோ
தன்னேர் பிறிதி லுனதருள் வைப்பெனைத் தாங்கிடுமே! 5.

திங்கட் குழவி தவழுந் திருமுடிச் செல்வனுஞ்சீர்
தங்கும் புலவனு முன்னல முண்ட தகையையெனிற்
பொங்கும் பொருளார்ந் தினிமை கனிந்த பொலங்கொடியே
இங்குன் புகழை யெடுத்தார் முழுது மியம்புவரே. 6.

"மாணிக்க வாசகர்" வண்மறைக் காவில் மணிக்குயிலோ
டாணிப்பொன் னம்பலத் தண்ணலைக் கூவு மருட்குயிலே
காணி னுளக்கண் பொலியும் பொருளே கடலமுதே
பேணி யுனதருட் போதினை யான்புகழ் பேறருளே. 7.

அருளே யினிமை கனிந்த வமுதே யரும்புகழார்
திருவே சிவம்பொலி சேக்கிழார் உள்ளந் திகழொளியே
பொருளே புலவ ருளமார் புதுநலப் பூங்கொடியே
மருளே வளர்வினை யேனுன் னடிக்காம் வகையருளே. 8.

தீயிற் கிடந்துநீ ரிற்சென்று செப்பருந் திண்முதலை
வாயிற்சேர் பிள்ளையைத் தந்து மறைக்காட்டு வண்மைவளர்
கோயிற் கதவந் திறந்து புகழார்ந்த கோமளமே
தாயிற் பெரிது மருள்சுரந் தென்னைநீ தந்தருளே. 9.

பொன்னுற்ற நன்முடி மன்னர் புரந்த பொலங்கொடியே
பன்னுற்ற செம்பொருட் பாடல் மலிந்து பரும்புகழால்
மன்னுற்ற வுன்சீர் வழுத்திப் பணியா வளர்வினையேற்
கென்னுற்ற போதினு மின்ப மளித்திலை யென்னிதுவே. 10.

குன்றாகிய புகழ்க் கொள்கல மேயுன் கொடைபுகழ்ந்து
சென்றா ரளித்த செழும்பொருள் வைப்பைச் சிறியவனும்
நன்றாய் மூகத்து நறைநனி யுண்டு நலமுறவுன்
பொன்றாள் வணங்கிப்புகழ்ந்தேனருளப்பொருளெனக்கே. 11.

தேவர் மணிமுடி சூடித் திருநின்றார் சிந்தைகொளும்
மூவ ரலங்கல் புனைந்து திருக்கோவை முத்தணிந்து
காவ லிளங்கோ சிலம்பொலிப் பவாடுங் கண்மணியே
ஆவ துனதரு ளல்லா லடியேற்கிங் கார்துணையே. 12.

தொல்காப் பியனெனும் உன்னருட் டோன்றல் துறைபலவும்
பல்காற் பயின்று பழமை பழுத்த பரும்புகழை
யொல்காப்பெரும்புகழ்த்தொல்காப்பியத்தில்வைத்தோதினனால்
நல்கா யதன்பயன் நான்நனி துய்க்க நறுநுதலே. 13

சிந்தா மணியிருக் கத்திருக் கோவையென் தேனிருக்க
நந்தா வொளிசே ரகம்புற நானூறு நன்கிருக்க
எந்தா யுனதி னியல்தேரா துற்ற விருவினையேன்
பிந்தா வுனதின் பொருணலந் தோய்வருள் பெய்வளையே. 14.

அறியா மையினுன் னடியினைப் போற்றா தருவினையேன்
சிறியார் செயல்விழைந் தேதிரிந் தேனதைச் சிந்தைதனிற்
குறியா துனதளி யான்பெறத் தந்தருள் கோதிவரும்
நெறியா ருளத்தர் நனியாய் பொருள்செறி நேரிழையே. 15.

காணற் கரியவுன் செவ்விய மின்பமுங் கண்டவன்பர்
பேணத் தகுமுன் புகழ் சிறியேனும் பெறுவகைநீ
பூணத் தருவது பொற்பல்ல வென்று புறக்கணித்தால்
மாணப் பொலிந்த வருளே யெனையார் வளர்ப்பவரே? 16.

கல்லைக் கலமாய்க் கடலைக் கடக்கக் கருதறிவின்
சொல்லிற் கிறைவர் சிவனைத் தொழவரு தூமணியே
யெல்லைப் புரையும் புகழுடை யின்பத் திளங்கொடியே
நல்லை யெனைநீ யுனதடிக் காளாம் நலமருளே. 17.

வண்ணீர் தருவையை சூழ்பாண்டி நாட்டில் வளருமுன்சீர்
கண்ணீர் தரமின் றெடுத்துப் புகழாக் கடையவனைத்
தண்ணீர் தருமுன் பொருட்டெங் கடலினிற் றுழவருள்
பண்ணீர்தருவையம்போற்றும்பரும்புகழ்ப்பைங்கொடியே. 18.

அருளார் முருகன் பெரிதாய் அகப்பொருள் ஆர்ந்தபெருந்
திருவே யுனதி னரும்புகழ் பாடித்தஞ் சிந்தைநனி
யுருகார் பணியா ருவமையி லுன்னடி யுற்றுநலம்
பருகா ரிருந்தெ னிறந்தென் பரும்பொறை பாரினிற்கே. 19.

வாயாரவுன் புகழ் வாழ்த்துகின் றேனருள் வண்மைதனிற்
சாயாத செந்தமிழ்த் தாயே யுனதருந் தாளிணைக்கே
ஓயாத வன்பென துள்ளத்தி னூறு மொருதிருநீ
தாயான தன்மையிற் றந்தருள் வாயித் தமியனுக்கே. 20.

—வே. க. வேந்தனார்[1]

22. [இன்றமிழின் இயற்கைத் தோற்றத்தையும் அதனை இலக்கண வரம்புள் சீர்ப்படுத்திய பண்டைப் புலவரின் பெருமைகளையும் அதன் மூவகையாற்றல்களையும் விரித்துவிளம்பி, இன்னும் விளம்பியுள்ளவர்களையும் விளக்கி நாத்தழுதழுப்ப நயந்து பரவுவது இந்நலமிகு பாடல்.]

---

[1] இவர் யாழ்ப்பாணம் வேலணையூர் தலையசிங்கம் கனகசபைப் பிள்ளையின் மகனாக 1914ல் பிறந்தவர். மதுரைத் தமிழ்ச்சங்கப் பண்டித பட்டமும், பண்டிதப் பயிற்சியும் பெற்றவராவர். பல கட்டுரைகளும் பாக்களும் வெளியிட்டும், பலசங்கங்களில் சொற்பொழிவாற்றியும் வரும் தனித்தமிழ்த் தொண்டராவர்.

தாப்புலிப்பா[2]

அமிழ்தினுமே இனியதென அறைதமிழின் சிறப்புரைப்பத்
தமிழ்மொழியைப் படுகிரியில் தன்னொருகோட்
[டால்வரைந்தான்
தானடத்து நானென்னே?

**தமிழ்த்தாய் வணக்கம்.**

ஆசிரியப்பா.

உலகந் தோன்றி நிலவிய பின்னர்
ஆரிய மென்னும் சீரிய பாஷை
துன்னுங் கருப்பையிற் றோற்றும் முன்னர்,
பாரிடத் தனைவரும் ஓரிடத் திருக்கையில்,
எல்லாம் வல்ல இறைவன் அருளால்
மனிதர் தங்கள் கனிதரு கருத்தை
ஒருவர்க் கொருவர் தெரிவித் துய்ய
அருவமாத் திரையாய் அழகுறத் தோன்றி
நாடக மென்னும் ஏடகப் பேர்பெற்
றணிமலை என்னும் மணிமலை மேரு

---

[2] இப் பாவினம், தொல்காப்பியம், அகத்தியம், குமரம் முதலிய இலக்கணங்களுக்கு முந்திய காலத்தில் வழங்கிவந்த பேராற்று நெடுந் துறையன் பெருநூல் என்னும் இலக்கணத்திலும், இடைகழிச்செங் கோடன் இயநூல் என்னும் இலக்கணத்திலும் உள்ளது. தற்காலம் வழங்கிவரும் இலக்கணங்களில் இது காணப்படவில்லை. இத்தாப்புலிப் பாவினாலேயே 'செங்கோன்தரைச்செலவு' என்றநூல் யாக்கப்பட்டிருக் கிறது. மேற்கண்ட இலக்கணங்களில் இதா இலக்கணங்களில் காணப் படாத நீட்டொலிப் புணர்ச்சி, எழுத்தொலிப் புணர்ச்சி, குவித்தொலிப் புணர்ச்சி முதலிய சந்திகள் காணப்படுகின்றன. இப்புணர்ச்சிகளைத்தான் தீர்க்க சந்தி, குண சந்தி, விருத்திசந்தி என ஆரியத்தில் எடுத்தாளுகிறார் கள்.

சூழ்ந்த காடாம் குறிஞ்சி நாட்டில்
நிலவிய மக்கள்பால் உலவிய நங்காய்!
கூத்தெனும் செய்கையின் நாத்திறம் படப்பட
இயற்கை யோசை வியன்செவிப் படவும்,
புள்விலங் கோதை பொன்செவிப் படவும்
புள்விலங் கிசைவழி தெள்ளுதங் கருத்தை
நடித்தல் என்னும் பிடித்த கையுடன்
இசைக்கும் மனிதர் மிசைப்பால் அமலன்
திருவரு ளாலரு வுருவாய்த் தோன்றி
மனித கணங்களுக் கினிய பாழையாய்
இசைப்பெயர் தாங்கித் திசைப்பெயர் கொண்டு
தென்ற லுலாவும் குன்றி லுலாவிய
தனக்கெதி ரில்லா மனக்கசி வுளதாம்
தனித்தமி ழென்னும் இனித்தசொல் நங்காய்!
இயற்கை ஓசையை இசைக்க இசைக்க
இசைக்கும் கருவியாம் தசைபொதி நாவால்
பிறக்கும் ஓசை செயற்கையாம் ; பெரிதே
இயற்கை செயற்கை இருதிற வோசையால்
கருணைக் கடவுள் கவினருள் பெற்று
அறிவுடை மாந்தர் நெறியுடன் வளர்க்க
மாந்தருக் கியல்பாய்ச் சேர்ந்துருக் கொண்டதால்
இயல்பெனும் பெயர்த்தாய்க் கயல்விழி நீயே.
அருவ நிலையிலும் அருவுரு நிலையிலும்
மக்களுக் கின்பம் மிக்கவி ளைத்ததும்
குறைவென் றெண்ணி நிறைசெயக் கருத
வேண்டியார் வேண்டியாங் கியாண்டு மருள்செய்யும்
முன்னவன் தானுநீ முன்னிய கருத்தை
முடிக்கவும் மனிதர் படிக்கவும் பரவவும்
பதிபசு பாச மெனப்பகர் மூன்றின்
விதியறிந் துய்யவும் வேதா கமங்களை
நெறிபடக் கிளக்கவும் நேர்ந்துதன் னுருவாம்
அகர வுயிர்முதல் தோற்றத் தோன்றினும்

உருக்கொடு வந்து உலாவர நிற்ப
ஐவே றுருவிற்[1] செய்வினை முற்றிய
இலக்கண முடிகொடு நலத்தகு கடவுளாம்
மகேந்திர நாட்டு மாகே சுரரும்
பேராற்றை யடுத்த பெருந்துறை யூரிற்
சிராற் பெருநூல் செப்பிய புலவனும்
இயனூல் செய்த இயற்பா வலனும்
இடைகழி நாட்டை யுடையசெங் கோடனும்
பெருவள நாடாண் டிருந்த செங்கோனும்
தக்கார் புகழும் சக்கரப் புலவனும்
திரிபுர மெரித்த விரிசடைக் கடவுளும்
குன்ற மெறிந்த குமர வேளும்
சந்தனப் பொதிகைச் செந்தமிழ் முனியும்
ஐந்திர மளித்த இந்திரன் றானும்
ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப் பியரும்
இறையனார் அகப்பொருள் இயற்றிய இறைவரும்
முடிக்கச் சிறந்து நடிக்கு நங்காய்!
நின்சிறப் புரைக்க வென்பே ரியர்கட்
காகுமோ! ஆகுமோ! ஆகுமோ! ஆகுமோ!
கராக்கவர் பாலனைக் குராப்புனை யண்ணல்
திருவரு ளாலே யுருப்பெற வாக்கியும்
தருமி தனக்குப் பொருடனை யளித்தும்
புத்தனார் தலையுடன் தத்த வழித்தும்
ஆக்கியு மளித்தும் நீக்கியும் புரக்கும்
தன்னுடைப் பெருமை தானே யறியா
மின்சடைப் பெருமான் தன்செய்கை யன்ன
முத்தொழில் நடாத்தும் சித்துரு·மாதே!
கணிகண் ணற்காக் காஞ்சியை நீங்கிச்
செந்நாப் புலவன் செல்லப் பின்னால்
பைந்நா கப்பாய் பற்றிக் கொண்டு
மணிவணப் பெருமாள் வழிகொளச் செய்தாய்!

---

[1] எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி எனும் ஐந்து உருவில்.

அருந்தமிழ்க் கிழவி ஒளவைக் காகப்
பட்டுக் கிடந்த பனந்துண் டங்களை
பங்குக்கு மூன்று பழந்தரச் செய்தாய்!
கல்வியிற் பெரிய கம்பருக் காகப்
பயிரினை மேய்ந்த பரிமா வதனின்
உயிரது நீங்கவும் உயிர்க்கவும் செய்தாய்[1]!
கருவே ரறுக்கும் திருவொற்றி யூரில்
தொண்டத் தொகையுரை வன்றொண் டற்கா
அகமகிழ்ந் திடவே மகிழடிக் கீழே
இந்தணி வானை வந்துறச் செய்தாய்!
தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்தாய்!
கூட லாலவாய் மாடமார் மதுரையில்
பாடற் றொழிலே பான்மையாக் கொண்ட
இசைகொள் பாணற்கா விசைவாது வென்ற
அளப்பில் பெருமை யளக்கில்லின தலவோ?
இன்னுங் கேண்மோ நின்னுடைப் பெருமை
நீற்றறை குளிர மாற்றுதல் செய்தாய்!
ஆலந் தானு மமுதாச் செய்தாய்!
கடலிற் கல்லே படகாச் செய்தாய்!
அடுகளி றேதான் அடியார் பாதம்
தொடுகளி றாகவும் தொட்டிடச் செய்தாய்!
என்பைப் பெண்ணா இன்புறச் செய்தாய்!
அட்டமா சித்திகள் அரிய வல்லவே
புனலெதி ரேடு செல்லெனச் செல்லுமே
கனலி லேடிடப் பச்சென் றிருக்குமே
பனையி லாண்பனை பெண்பனை யாகுமே
திருமடத் தீமெலச் செழியற் சேருமே
கொள்ளம் பூதூர் வெள்ளத்தி லோடம்
திகழெனத் திகழுமே திருமறைக் காட்டில்
மறைக்கத வதனைத் திறக்கவும் மூடவும்
செய்தனை பின்னும் செழியன் கூனை

---

[1] இது பொய்யாமொழிப் புலவர் செயலாகவும் கூறப்படுகிறது.

நிமிர்த்தவும் செய்தனை நீற்றின் பெருமையை
சைவப் பெருமை யறியாச் சமணர்க்கு
அறிவு கொளுத்தினை ஆவடு துறையில்
காழிப் பெருமான் காசுறச் செய்தனை
செப்பும் பெருமைச் செங்கோ டதனில்
வெப்புநோய் நீங்க விளம்பினை நல்லூர்ப்
பெருமண மதனில் பெரிய தேவர்க்கும்
அரிய செயலாம் அழிவிலா முத்தியை
மணத்திற்கு வந்த கணத்தர்க் கெல்லாம்
வாரிக் கொடுத்த வண்சத்தி யலையோ?
அம்ம நின்திறம்! அம்ம நின்புகழ்!
இத்தரை மட்டோ? இல்லை இல்லை
சேரமான் உலாவால் திருக்கை லாயம்
வரைக்கும் பரந்தது; உரைக்கும் புகழெலாம்
மனத்திற் கொண்டோ மனித ருய்யவோ
மூத்த பிள்ளையும் முருகக் கடவுளும்
மலைமகள் கலைமக ளாமணங் குகளும்
அரனய னரிமுத லாமுத் தேவரும்
இந்திரன் முதலா வெண்டிசைக் கிறைவரும்
அகத்தியர் முதலாச் சகத்திற் றவரும்
பேசினார் எழுதினர் பீடுறப் பாடினர்
என்றால் நின்சீர் ஒன்றுமிலாத
நாயேன் புகழ்வது நன்றுகொல்! நன்றுகொல்!
எல்லா வாழ்வும் இனிதுறக் கொடுக்கும்
வல்லாள் உனக்கு வாழ்த்துக் கூறல்
நன்று! நன்று! அன்று சேந்தன்
பல்லாண்டு கடந்த பரமர்க் கன்பால்
பல்லாண்டு பாடிய பான்மை யதுபோல்
செம்பொருள் பயக்கும் சீரிய தெய்வமே
என்னே நின்திறம்! என்னே நின்சீர்!
என்னே நின்புகழ்! என்னே நின்செயல்!
என்றித் திறம்பட என்பு நைந்துருக

மெய்புள கெடுப்ப மயிர்சிலிர்ப் பெய்த
நாத்தழு தழுப்ப நயந்து வாழ்த்தியே
செஞ்சிலம் பணியுநின் சீரடி பரவுவாம்!

—துடிசைக்கிழார்.

23. [நமது பேரன்பைக் கடவுள்பால் ஈடுபடுத்தற்குப் பூவால் அவரைப் போற்றி செய்தலினும் சிறந்த வழியில்லை. அதன் பயனாக அத் தெய்வத்தின் உருவமுங் குணங்களும் நமது உள்ளத்தில் ஊன்றி நின்றெழுந்து நம்மை உவகை வெள்ளத்தில் அமிழ்த்துகின்றன. அவ்வாறு தமிழ்த்தாயை வணங்குதற்கு இப்பாடல் பெரிதும் பொருந்தியதாதலின் இப்பகுதியின் ஈற்றிடம் பெறுகின்றது].

ஆசிரியப்பா

வெண்டா மரைமேல் வீற்றிருந் தருளுந்
தண்டா முத்தமிழ்த் தாயே போற்றி
நெஞ்சிலன் புடனே நினைதொறுஞ் சுவைதருஞ்
செஞ்சிலம் பலம்புஞ் சேவடி யிணையும்
வெண்பட் டாடையுந் தண்முத்த மாலையும்
சந்தணி தனமுந் தந்தன[1] விடையும்
மாலையுந் நூலும் யாழு மேந்திய
வாலிய காந்தண் மலரொரு நான்கும்
பொன்புனை களனும் மென்பணைத் தோளும்
முத்தமிழ் மதுரப் புத்தமு தொழுகும்
பவளவாய் மலருந் தவளவா ணகையும்
அருண்மழை பொழியும் வரிநெடு விழிகளும்
வாங்கிய புருவமும் பூங்குமிழ் நாசியும்
காரிருள் கடந்த வாரிருங் கூந்தலும்
பொன்மகள் கொழுநனும் புத்தேள் கூட்டமும்
மன்மலை நட்டு மதித்திட வெழுந்த

[1] நூலைப்போன்ற

தெளிவள ரமுது மொளிவளர் பளிங்கும்
உருக்கிவார்த் தன்ன திருக்கிளர் மேனியும்
ஆராக் காதலொ டனுதின நோக்கினுந்
தீராப் புதுமைத் தெய்வத வடிவுமாய்ச்
சங்கரன் மலர்த்தாள் தவமுனி வேண்ட
அங்கவ னருளிய வமுதே போற்றி
அறுமுக னருள்பெறு சிறுமுனி மடிமிசைக்
குறுகுறு நடந்த குருந்தே போற்றி
பூவினின் மேவிய புத்தேள் பொய்யா
நாவினின் மேவிய நங்காய் போற்றி
அல்லியல் கண்டத் தானிட மமரும்
வல்லிதன் கண்ணாய் வதிந்தாய் போற்றி
பூமகள் கேள்வன் புரத்தினிற் பொருந்தும்
மாமக ளொருமரு மகளே போற்றி
ஆடக மதுரை யருந்தமிழ்ச் சங்கக்
கூடலில் வளர்ந்த கொடியே போற்றி
மன்னுயிர் நாவெனும் வாவியின் மலர்ந்த
பொன்னறி யாநறும் பூவே போற்றி
தென்னவன் சேரன் செம்பிய னென்னும்
மன்னவர் மூவர் வாழ்வே போற்றி
வேங்கடங் குமரி தீம்புனற் பௌவமென்
றந்நான் கெல்லை யகலிட மாளும்
பன்னாப் பெருமைப் பாரதி போற்றி
மெய்ந்நா விரும்பும் வித்தகி போற்றி
எந்நாட் டவர்க்கும் இறைவி போற்றி
பொருப்பிலே பிறந்து புகழிலே கிடந்து
நெருப்பிலே நின்று நீரிலே தவழ்ந்தென்
சென்னியி னாவிற் சிந்தையிற் கலந்து
மன்னிய கருணை வாரிதி போற்றி
உள்ள நெக்குருக வுரோமஞ் சிலிர்ப்ப
வெள்ளநீர் கலுழ மெய்விதிர் விதிர்ப்ப
நாத்தழு தழுப்ப நயந்துநின் றுன்புகழ்

ஏத்துநர் நெஞ்சத் திருள்கெடுத் தருளித்
தேனினும் பாலினுந் தெவிட்டா தினிக்கும்
வானினுங் காணா மணியே போற்றி
கல்விசற் றில்லாக் கசடனே னெனையும்
வல்விதி னுண்ட மயிலே போற்றி
சிறுமையும் பிணியுந் தீவினை யிருளும்
வெறுமையும் சீய்த்த வெயிலே போற்றி
மேவிய பல்கலை விரிபொழி லிருந்து
கூவுறு மேழிசைக் குயிலே போற்றி
"கற்றவர் விழுங்குங் கனியே" போற்றி
மற்றவர் காணா மலையே போற்றி
சேணினு மறியாத் திருவே போற்றி
காணினு மினிக்குங் கரும்பே போற்றி
விண்ணகப் புலவர் வெட்கி வாயூற
மண்ணகத் தெழுந்த மருந்தே போற்றி
கண்ணே போற்றி கருத்தே போற்றி
எண்ணே போற்றி எழுத்தே போற்றி
சுடுபிணி மாற்றிய சுடர்க்கொடி போற்றி
கடுவிடந் தீர்த்த கனங்குழை போற்றி
கூடிய சமணர்கள் கூர்ங்கழு வேற
ஏடெதி ரேறிய வேந்திழை போற்றி
ஆருயிர் வௌவி யருளினை போற்றி
சீரிய ஞானச் செழுஞ்சுடர் போற்றி
செங்கலைப் பொன்னாச் செய்தனை போற்றி
அங்கமும் வேதமு மறைந்தனை போற்றி
என்பினைப் பெண்ணா யெடுத்தனை போற்றி
வன்பினை மாற்றும் அன்பினே போற்றி
அரும்பொரு ளின்ப மறங்கதி நான்குந்
தரும்பெருங் கற்பகத் தருவே போற்றி
அயனுடன் சேர்ந்துல களிப்பாய் போற்றி
புயலுடன் கலந்தவை புரப்பாய் போற்றி
அரனுடன் புணர்ந்தவை யழிப்பாய் போற்றி

உரனுடை நெஞ்சி லொளியே போற்றி
பூவொடு மணமும் போன்றாய் போற்றி
பாவொடு பழகிய பாவாய் போற்றி
ஆவியை யுருக்கு மன்பே போற்றி
பாவியைத் தூக்கும் பதத்தாய் போற்றி
மானே போற்றி மடப்பிடி போற்றி
தேனே போற்றி தெளிவே போற்றி
அழியா தூழியு மமர்ந்தாய் போற்றி
பழியாச் செழுநிதி படைத்தாய் போற்றி
நோக்கரு நுண்ணுணர் வானாய் போற்றி
வாக்கொடு மனமு மடங்காய் போற்றி
ஊமைக் குரைதரு முத்தமி போற்றி
சேமக் கலையின் செறிவே போற்றி
கல்லொடு வாரிதி கடந்தாய் போற்றி
சொல்லொடு செம்பொரு ளானாய் போற்றி
பொள்ளா முத்தின் பொலிவே போற்றி
உள்ளார் நெஞ்சத் தொளித்தாய் போற்றி
உள்ளுதொ றுள்ளுதொ றுள்ளக முருக்குக்
தெள்ளிய பாகின் திரளே போற்றி
கம்ப னருளிய கவிச்சுவை மாந்திச்
செம்பொற் சிலம்பருள் செய்தாய் போற்றி
இந்தணி செஞ்சடை யிறைவனை யிருளிற்
சுந்தரன் றூதாய்த் தூண்டினை போற்றி
கொழிதமிழ்க் கொங்கு தேரெனக் கூறிக்
கிழிதனை யறுத்த கிளியே போற்றி
உயிரே போற்றி யுணர்வே போற்றி
செயிர்தீ ரறிவின் செல்வி போற்றி
ஔவைக் கருந்தமி ழருளிய மதுரக்
கோவைக் கனிவாய்க் கொடியே போற்றி
ஆதியு மந்தமு மகன்றாய் போற்றி
சோதிமெய்ஞ் ஞானச் சுடரே போற்றி
முழுதுல காண்ட முதல்வி போற்றி
பழுதறு செஞ்சொற் பகர்ந்தாய் போற்றி

அன்னக் கொடியுடை யரசி போற்றி
வன்னக் கொடியிடை மடவாய் போற்றி
ஓரெழுத் தறியா வொருவ னென்னையுஞ்
சீரிய கல்விச் செழுநிதி யுதவித்
தெரிவன தெரிந்த செல்வர் கோட்டிக்
குரியவ னாக்கிய வொண்ணுதல் போற்றி
மறைபிணி கதவந் திறந்தாய் போற்றி
குறைதவிர் கோமளக் கொழுந்தே போற்றி
நிதியே போற்றி நிறைவே போற்றி
கதியே போற்றி கசிவே போற்றி
பொன்னே போற்றி புலனுணர் விறந்த
மின்னே போற்றி விளக்கே போற்றி
அன்னிய மொழிகளு மடிதொழு தேத்த
மன்னிய சிந்தா மணியே போற்றி
எழுதா நான்மறை யென்றுநின் றேங்கத்
தொழுதகு தமிழ்மறை சொன்னாய் போற்றி
பழமையும் புதுமையும் படைத்தாய் போற்றி
எழுமையும் தொடர்தரு மின்பே போற்றி
சினத்தொடு புத்தனைச் செறுத்தாய் போற்றி
மனத்துயர் நீக்கும் மாதே போற்றி
நாவலங் கோலாய் நடத்தினை போற்றி
பாவலங் காரப் பழம்பொருள் போற்றி
அரும்பொரு ளைந்து மானாய் போற்றி
விருப்புதல் வெறுத்தல் வேண்டாய் போற்றி
முதலையுண் டிறந்த முதிர்சுவைக் குதலை
மதலையைக் காட்டி மகிழ்ந்தாய் போற்றி
நாளும் கோளும் நலிமிடி பிணியும்
பாழும் வினையும் பறிப்பாய் போற்றி
பாமகள் போற்றி நாமகள் போற்றி
பூமகள் போற்றி புகழ்மகள் போற்றி
முத்தமிழ்க் கல்வியும் நாற்கவிப் புலமையும்
ஐம்புல னடக்கமும் மறுமுகற் கன்பும்
எழுவகை நிலையு மெய்ம்மைவிட் டகலா

தெண்வகைச் சித்தியு மெங்களுக் கருளி
இன்பினும் துன்பினு மிரவினும் பகலினும்
அன்புடன் காத்தரு ளன்னாய் போற்றி
எல்லா வுலகமு மானாய் போற்றி
யாவையு முடனா யறிவாய் போற்றி
அறிந்தருள் செய்யு மணங்கே போற்றி
அறிவினு ளருளா லமர்ந்திருந் தெனக்குக்
குறைவறு புலமை கொடுப்பாய் போற்றி
குறைவறு புலமை கொடுத்திடக் கூறும்
நறுந்தமிழ் மாலை நயந்து கொண்டருளி
எவருங் காணா தெங்கணு நிறைந்த
மூவா விளநலங் காட்டிமுன் னின்றே
அஞ்சலென் றருளிய வேண்டும்
பஞ்சணி நூபுரப் பாதபங் கயமே.

க. சோமசுந்தரம் பிள்ளை.

# III தமிழ்த்தாய்த் திருவுரு.

1. [அநாதிநந்தன்ன தமிழ்த்தாயை வாழ்த்தியும் வணங்கியும் வருவதின் பயனாக அவளது பண்டைத் தெய்வத்து இள நலத்தைக் கண்டு களித்தும் பேறு பெறக்கூடும். இம்மாசறு காட்சியடைந்த பல ஆசறு புலவர்கள் அவளது தோற்றப் பொலிவை ஏத்திப்பாடிய பல கவிகளை இப்பகுதியிற் காணலாம். அவற்றுள் மீப்[1] பழமை வாய்ந்ததும், இம்மாட்சிமித காட்சியாகிய வரத்தைத் தரவல்ல பெயர் பூண்டவரால் பாடப்பெற்றதும், அவளது தெய்விகப் பிறப்பு வளர்ப்பைக் கூறுவதுமாகிய பாடல் முதற்கண் விளங்குவதாகும்.]

அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

பொருப்பிலே பிறந்து தென்னன் புகழிலே கிடந்து சங்கத்
திருப்பிலே யிருந்து வைகை யேட்டிலே தவழ்ந்த பேதை
நெருப்பிலே நின்று கற்றோர் நினைவிலே நடந்தோ ரேன
மருப்பிலே பயின்ற பாவை மருங்கிலே வளரு கின்றாள்[2]

—வரந்தருவார்[3]

2. [அவளது அரிய பிறப்பு வளர்ப்புடன் அணிகலன், ஆடை, உணவு, இருப்பிடமும், அவள் தோழியொடு விளங்கும் வகையும் இப்பாடலில் இனிது இயம்பப் படுகின்றன.]

ஆசிரியப்பா.

செழுந்தமி ழென்னுங் கொழுந்தமிழ்க் குழவியை
மன்றினுட் குனிக்குங் கொன்றையஞ் சடையோன்
தெறுவே லேந்திய அறுமுகற் கருள
வாங்கவ னினிதெழுந் தேற்றுப் பாங்குறக்

---

[1] எல்லாவற்றிலும் மிகப்பழமை. [2] வராக அவதாரத்தில் கொம்பினால் தாங்கப்பட்ட புவிமாதின் இடையில் வளருகின்றாள்.

[3] இவர் 15ம் நூற்றாண்டில் பாரதம் பாடிய வில்லிபுத்தூர் ஆழ்வாரின் அரும் புதல்வராவர். தந்தையாரின் நூலுக்குத் தக்க சாற்றுக்கவி பாடியதே இவர் பெருமையை நன்கு விளக்குவதாகும்.

குறங்கினி லிரீஇ வெரிந் புறந் தைவந்
தியல்வகை யென்னும் பயில்பா லூட்டிச்
சின்னாள் வளர்த்த பின்னர் மன்னிய
வெள்ளியம் பலத்துட் டுள்ளிய பெருமான்
பீடுற வமர்ந்த கூடன்மா நகரின்
மெய்பெற விருந்த தெய்வப் புலமைப்
பெருமதிப் புலவோர்க் குரிமையி னுதவினன், அவரும்
உளந்துளும் புவகை வளம்பெற வேற்றே
அகம்புற மென்னுந் தொகுகலன் பூட்டி
நாலெனு மாடையும் வாலரைக் கொளீஇச்
சொற்சுவை பொருட்சுவை கனிந்த பற்பல்
பாவுணா நாடொறும் பல்வே றூட்டிச்
சங்க மென்னும் பொங்குபூந் தடத்தினும்
ஆலவா யென்னுங் கோலமார் காவினும்
வடமொழி யென்னு மடங்கெழு தோழியொடு
முடம்படுத் தொருங்கு விடுப்பக் குடம்புரை
கொங்கைப் பொறைகெழு கொழுந்தமிழ் மங்கை
யானா வேட்கையின் ஆடி மேனாள்
தென்னா டதனில் மன்னி யமர்ந்தனள்
கவின்மிகு திருமகள் நறும்பொதி யவிழ்க்குஞ்
செழுந்தா மரையின் மேவி
யெழுந்தினி தமர்ந்த வியல்பினு லெனவே.

—மறைமலைஅடிகள்[1]

---

[1] இவர் 1876-ல் நாகப்பட்டினத்தில் பிறந்தவர். பள்ளியிறுதி (மெட்ரிகுலேசன்) வரை ஆங்கிலம் பயின்று பின் நாகை வே. நாராயண சாமி பிள்ளையிடம் தமிழும், சித்தாந்த சரபம் சோமசுந்தர நாயகரிடம் சித்தாந்தமும் பயின்றார். 1897-ல் சித்தாந்த தீபிகையின் தமிழ்ப்பதிப் பாசிரியராயிருந்து 1898 முதல் 1911 வரை சென்னைக் கிறித்துவக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியராய் விளங்கினார். 1902-ல் ஞானசாகரம் எனும் மாசிகை தொடங்கப்பட்டு 19 ஆண்டு நடைபெற்றது. இவர் 1905-ல் சைவசித்தாந்த மா சமாசத்தை நிறுவி 4 ஆண்டு நடத்தினர். 1911 முதல் பல்லாவரம் பொதுநிலைக் கழகம் நிறுவி பலநூல்களை வெளி யிட்டும், பல மாநாடுகளுக்குத் தலைமைதாங்கியும், பலவிரிவுரை நிகழ்த்

3. [அவள் பூம் பொழிலிடைக் கலையிருக்கையில் விளங்கும் அற்புதக் காட்சி ஈண்டு பொற்புடன் இசைக்கப் படுகிறது.]

ஆசிரியப்பா.

எங்கும் பொன்மயம் எங்கும் பசுமை
கங்குலை விழுங்கிக் கனிமுகங் காட்டும்
அருணோ தயம்போல் அருங்கலை யரசி
கருணை பூத்த கவின்மலர் சூடித்
தாகந் தணிக்குந் தண்ணமு தென்ன
மோகனக் காந்த முறுவல் பளிச்சிட
மனத்தினை யள்ளும் வடிவழ குடனே
தனக்கிணை தானுந் தண்டமிழ்ச் சோலையில்
கண்கொளாக் காட்சியாய்க் கவின்பெற விளங்கினாள்!
எண்கொளாப் பாவலர் இசைத்தனர் வாழி!
குயில்கள் பாடின கொஞ்சிளந் தமிழ்ப்பண்;
மயில்க ளாடின மருதயாழ்க் கொத்தே
மானும் மழவும் மகிழ்ந்து துள்ளின
வானும் வந்து வணங்கிடப் புவியைத்
தெய்வப் பாவலர் திருமுறை முழக்கினர்
செய்ய நாவலர் சீர்த்திக ளோதினர்
கைத்திற வற்புதங் காட்டினர் ஓவியர்
மெய்த்திறல் வீரர் விடுதலை முரசம்
கொட்டி யெழுந்தனர் குவலையங் குலுங்க
கட்டுகள் பட்டென விட்டன; நாடு
தலைநி மிர்ந்தது; மலைபோல் சுதேசக்
கலைநி மிர்ந்தது; காட்சியென் சொல்வேன்!
வறண்ட நிலமும் வசந்த சோலையாய்த்
திரண்டது; பூவும் தீங்கனி வளமும்
தாதுகுங் கற்பகந் தழைகொம் பன்ன

---

தியும் வருகின்றனர். இவர் தம் சிறந்தநூல்களுட் சில:—மாணிக்கவாசகர் வரலாறுங் காலமும், முல்லைப்பாட்டு ஆராய்ச்சி, பட்டினப்பாலை ஆராய்ச்சி, சிந்தனைக்கட்டுரை, அறிவுரைக்கொத்து, மக்கள் நூறாண்டு உயிர் வாழ்வது எப்படி முதலியனவாகும்.

மாதரார் கூடி மங்கலம் பாடினர்
புதுநகை பூத்தது மதுமல ரியற்கை
வதுவைநா ளிசைத்தது; மணம்வளர் தென்றல்
மங்கலச் செங்கோல் மலர்க்கையி லோங்க
விலையிலா மணிகள் வியன்பெறச் சமைத்த
கலைச்சிங் காதனத் திலகினள் எந்தாய்!
திசைதிசை நாட்டினர் திருமுடி சூட்டினர்
இசைத்தனர் பல்லாண் டிமையவர் குழாங்கள்
''தேனினு மினிய தீந்தமிழ் வாழ்க!
வானுல கெங்கும் வளர்க தமிழ்மணம்
நுகர நுகர நூதனந் தோன்றும்
பகரப் பகரவாய் பாலூற் றூறும்
தமிழ்க்கலை யோங்கித் தழைக்க உலகெலாம்
அமரவாழ் வுறவே யருளுக தாயே!''

—சுத்தானந்த பாரதியார்.

4. [அருட்சுடராம் தமிழன்னையின் அரிய ஆற்றலும் அவளது திருவோலக்கக் காட்சியும் நினைந்து நினைந்து மகிழ்ந்திறத்தது என்பதனை இவ்வரிய பாடல் இனிதுரைக்கின்றது. தமிழ் நாட்டையே தமிழ்த் தாயாக உருவகப் படுத்தியிருப்பது இதன் இணையிலாச் சிறப்பாதும்].

### தேவியின் திருக்கொலு

குறவஞ்சி இசை

(எண் சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்)

வெற்றிமுரசொலித்திடுவோம் வீரர்களே வாரீர்!
விழித்தெழுந்தாள் சத்தியன்னை செழித்ததவச் சுடராய்;
அற்றதிருள் வறுமைதுயர் அச்சமினி யில்லை;
ஆற்றல்மிகத் தந்திடுவாள் கூற்றினையும் உதைப்பாள்! 1

கள்ளவிழும் பூந்துகளை அள்ளிவருந் தென்றல்,
கனிவிருந்துண் டிசையெடுக்குங் கட்டறியாப் புட்கள்,
ஒள்ளியகல் லோடைகளில் தெள்ளிய ஓங்காரம்
ஓதிடவே நாதமறை சோதிவரு கின்றாள்! 2

அருள்பழுத்த பழச்சுவையின் அரியகனி மொழியாள்!
அருவியெனக் கவிதருவாள், அன்புமலர் சொரிவாள்!
இருளரக்கர் நடுநடுங்க இடிமுரச மார்த்தாள்
இன்னியர்வாழ் வமுதுக்க புன்னகையை வார்த்தாள் 3

சாதிமத பேதமற நீதிபுரி யரசி
சமதர்மக் கொடியுயர்த்திச் சத்தியக்கோல் பிடித்தாள்;
ஆதிசிவ சத்தியவள் அறிவணையில் வீற்ருள்;
அருளனலுக் திருவிழியால் கருணைவளம் பொழிவாள்! 4

கண்ணன்குழல் கேட்டுருகக் கந்தன்மயி லாடக்
காவிரியாழ் மீட்டுகின்ருள் கலைகளெல்லாம் பணிய;
தண்கடல்பல் லாண்டிசைக்கத் தாங்குகின்ருள் உலகைத்
தளிரியற்கைப் பச்சழகி தமிழரசி எந்தாய்! 5

திருவைகை பரணியொளிர் சிலம்படியி னருகே,
திகழுகின்ற திலங்கையன்னந் தவழுகின்ற தின்பம்;
இருவரைகை லாகுதர, இளமணக்கால் வீச
எங்களன்னை விளங்குகின்ருள்; மங்களச்சங் கொலிப்போம்! 6

வரங்களெல்லாம் வழங்குகின்ருள்; கரங்களெல்லாம் [குவிப்போம்!
வாழிபரா சத்தியென்று மந்திரங்கள் செபிப்போம்!
சிரங்களெல்லாம் ஒற்றுமையாய்ச் சேர்ந்துவழி படுவோம்!
திக்கெல்லாம் எதிரொலிக்கச் சயகோஷம் புரிவோம்!! 7

எந்தாய் வாழ்க!

—சுத்தானந்த பாரதியார்.

## 5. இதுவுமது.

ஆனருட் புதல்வி அருங்கலைச் செல்வி
வரனருள் முதல்வி வாழிய தமிழ்த்தாய்
அறிவனல் விழியாள் அமுதக் கதிர்விரி
முழுமதி முகத்தாள் மோகனக் காந்தம்
வீசிடும் அழகி மின்னெனத் தெறிக்கும்

பொலிநகை முத்தம் பொழிந்திடு வாயாள்
தவச்சுடர் காந்துந் தணல்மணி முடியாள்
மணியினும் பொன்னினும் அணிபெறுங் கோடி
வாடா நறும்பா மாலைக ளணிந்தாள்
தென்னா டெல்லாந் தன்னா டாகப்
பாண்டிநா டென்னும் பளிங்கணை யமர்ந்தாள்
வைகையும் பரணியும் மலரடிச் சிலம்பாம்
இலங்கை யன்னம் இணையடி தாங்க
வீற்றிருக் கின்றாள் வீரர்க் கிறைவி,
எழுதா மறையாம் இன்னிசை பிழியும்
காவிரி யாழைக் கைத்தலம் பிடித்தாள்
அறமும் வாய்மையும் அருளும் விளக்கும்
வெற்றிக் கதிர்க்கொடி விண்ணுற உயர்த்தினள்
சிவனார் சூலந் திருக்கரங் கொண்டாள்
இயலிசை நாடக வியன்கலை அணிந்தாள்
முருகவேள் மயில், 'இது முகில்'எனத் தோகை
விரிநடம் புரியும் செறிகுழற் பாவை
ஐந்திணைச் செல்வம் அளித்திடும் அரசி
எட்டுத் திசையும் இசைபரந் தொலிக்க
வார்கடல் முரசம் வாழிய வென்னக்
கார்வரை யிருபுறம் கைலாகு கொடுக்கப்
பொன்னும் பச்சையும் பூவுங் கனியுங்
குலுங்குஞ் சோலைக் குளிர்நிழல் வீற்றாள்
தமிழீர் வணங்கிர் தரணியீர் வணங்கிர்
அறிவுத் தெய்வம் அருளொளித் தெய்வம்
அழகுத் தெய்வம் அருந்தமிழ்த் தெய்வம்
எந்தாய் வாழ்க ! எந்தாய் வாழ்கவே !!

—சுவாமி சுத்தானந்த பாரதியார்.

6. [ஓர் நல்லரசியின் கைக்கொடியும் நாற்படையும் தோழியர்களும் ஈண்டு விளக்கப் படுகின்றனர்].

(அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்)

மாமேவு தமிழகத்துப் பேரரசி சிலைபுலிமீன்
வயப்ப தாகைக்
காமேவு கரதலத்தாள்[1] பரிபாடற் களிற்றியானை
நிரையுங் காப்பப்[2]
பூமேவு நயம்பலதேர் நூலறிஞர் பெருந்தானை
புறத்தே துன்ன[3]
நாமேவு நறுந்தொடையந் தாதிகள் சூழ்கொலுவிருப்பை
நயக்கின் றேமே[4]

—வரதநஞ்சைய பிள்ளை.

7. [மணிமுடி முதல் சேவடிவரை அவளணிந்துள்ள அறிவுடையடான அருங்கலன்கள் ஈண்டு எடுத்தேத்தப் படுகின்றன.]

ஆசிரியப்பா.

சீர்மலிந் தோங்குதே வாரத்தீம் பாலே!
செப்புபு கழ்த்திரு வாசகத் தேனே!
மாமலி யுந்திரு வாய்மொழிக் கண்டே!
மற்றிவை போல்வநின் மாமுடி மணியே!
ஏர்மலிந் தோங்குதொல் காப்பிய நூலே!

---

[1] வில், புலி, மீன் ஆகிய (மூவேந்தரின்) கொடி ஏந்தியவள் [2] எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றாகிய பரிபாடலும், அகநானூற்றின் ஒரு பகுதியாகிய களிற்றியானை நிரையும் குதிரைப்படை (பரி) புகழ்பெற்ற (பாடல்) யானைப்படை போல அவளைக் காக்கின்றன. [3] புவியில் மேம்பட்டுப் பல நயமுணருகின்ற புலவராகிய பெருஞ்சேனை தேர்ப்படை, காலாட்படைபோல அவளை நெருங்குகின்றன. எனவே இரட்டுற மொழிந்து நால்வகைச் சேனைகளையும் இயம்புமாறு காண்க. [4] இனிய சுவை நிரம்பிய பலவகைத் தொடைகளாலியன்ற அந்தாதி நூற்களாம் மணமிக்க மாலைகளாகிய அழகிய தாதிகள் சூழத் தமிழரசி கொலு வீற்றிருப்பதைப் பாராட்டுகின்றோம் எனப் பொருள்படல் காண்க.

என்றும் மிளிர்க்கிடும் மங்கல நாணே!
சேர்திரு வள்ளுவன் செப்புநல் லமிழ்தே!
செம்முகச் சுட்டியாம் செந்தமிழ்த் தாயே!
தாவிய சீர்திகழ் சங்கநூல் வெள்ளம்!
தங்குக ழுத்தினிற் பொங்குபல் லாரம்!
காவியம் ஐந்தும்நின் மார்பினற் கலனே!
கம்பன் அருளுநூல் கையிற்கங் கணமே!
மேவுமற் றைத்தெய்வப் பாவலர் பணியே!
விண்ணுறு மீனினும் மண்ணினும் பலவே!
தேவிகரத் தையஞ் சங்கத்தின் தொண்டு!
சேவடி மோதிரம் செந்தமிழ்த் தாயே!

—அரங்க. வேங்கடாசலம் பிள்ளை.

8. [*அந்தமிழ்த்தாயின் அரும்பண்புகள் முழுமுதற் கடவுளையும் சைவநூற்பொருளையும் ஒத்திருக்கும் வகைகளை விளக்கிப் பலப்பல தமிழ்நூல்களாலாய அவளது அரும் பெறலுருவின் நலம் புனைந்துரைத்தலில் நறுந்தமிழ் மணங்கமழ்வது இவ்வினியபாடல்.*]

ஆசிரியப்பா.

மாயிரு ஞாலத்து மக்கட் கெல்லாம்
காணுங் காலைக் கல்வியே யுயிராச்
செல்வமே யுடலாய்த் திகழ்வ தாகலின்
உடம்பினு மேற்ற முயிர்க்கென மாற்றாற்
பெறும் பல்பொருளினு மரும் பொருளாகி
யெழும் பன்மொழிகளி னெந்தமக் குயிராய்
வாய்த்த வரும்பெறற் றாய்த்தமிழ்த் தேவியை
கால வெல்லை கருதருந் தொன்மையின்[1]

[1] வரி 8—15ல் தமிழும் முழுமுதற் கடவுளும் (அ) காலங்கடந்த பழமையுடையன (ஆ) என்றும் நின்று நிலவும் இளமையுடையன (இ) தனித்து நிற்கும்பொழுதும், பிறவற்றுடன் புணர்ந்து தோன்றும் பொழுதும், பலவாகப் பிரிக்கப்படும் பொழுதும் பலருக்கும் பலவாய்த் தோன்றி ஒருவருக்கொருவர் மாறுகொளச் செய்கின்றன. (ஈ) அன்பர்

என்று மழியா விளமைமீக் கூரலின்
ஒருசொற் பல்பொரு ளுதவப் புணர்ப்பினும்
பலபடப் பகுக்கப் படுநல முண்மையின்
இதுபொரு ளிதுபொரு ளென்றுரைப் போர்தமக்
கேற்றன கூறிக் கலாய்க்கநின் றமையின்[1]
தனைநா டுநர்க்கிரு மையுந்தரு தன்மையின்
முழுமுதற் கடவுளி னியல்பொடு சிவணி
நின்ற தெய்வத்தை நிகரில்சீ ராளை
உயிர்மெய் யூர்தல் பயனிலை கொளவரல்[2]
எச்சவினை தொடர்ந்து முற்றுவினை கூடல்
எழுவாய் வேற்றுமை யேலாமை யாதியாற்
சைவநூற் பொருளைத் தருகுறிப் பினளைத்
திருமந் திரமா மரண்மனை யாளைச்
சிவஞான போதத் திருமுடி யினளை
நீலகே சித்திரட் டேலக் குழலியை
உத்தியென் றுவைத்தமுப் பத்திரண் டுறுப்பும்[3]
பொருந்து மிலக்கணந் திருந்திய செல்வியை
எண்ணெழுத் தென்னு மிணைவிழி யாளை

---

களுக்கு இம்மை மறுமைப் பயன்தந்து உதவுகின்றனவாதலின் ஒற்றுமையுடையன என்பது விளக்கப்படுகிறது. [1] ஈண்டு பல பொருள் குறிக்கும் சொற்களும் கடவுளும் ஒத்தன என்பது குறிப்பிடப்படுகிறது. [2] வரி 17—19 சைவ சித்தாந்தத்திற்கும் தமிழிலக்கணத்திற்கும் உள்ள ஒற்றுமை நயங்கள் விளக்கப்பட்டுள்ளன. அவையாவன :– (அ) உயிரின்றி உடல் இயங்காததுபோல உயிரெழுத்தோடு கூடிய மெய்யெழுத்தே தன் பெயர் சொல்லவும் இயங்கவும் வல்லதாயிருக்கிறது. (ஆ) பிறவி ஓர் குறிக்கோளை உடையதுபோல எழுவாய் பயனிலையைக் கொண்டு முடிகிறது. (இ) எஞ்சிய வினைகளாகிய சஞ்சிதமும் பிராரத்தமும் வீடுபேற்று வினைகளால் முடிவடைதல் போல வினையெச்சங்கள் வினைமுற்றைக் கொண்டு முடிகின்றன. (ஈ) உயிர் எழுவகைப் பிறவியினும் மாறாது பல உறுப்புகளை அடைதலை ஒப்ப எழுவாய் எவ்வேற்றுமையிலும் மாறாது உருபேற்று வருகின்றது. [3] உறுப்பெழில் — சாமுத்திரிகா இலக்கணங்கள்.

மணிமிடை பவளத் தணிகலம் திகழச்
சிவனே வேட்குந் திருக்கோவை வாய்ச்சியை
பாடல்சால் சிறப்பின் நாவலர் கைபுனை
பாமாலை யேமணி நான்மாலை யாக
விளங்கும் பத்தழ குங்கொளு மெல்லியை
முகைமணம் போன்று முறுவல் காந்த
பெருந்தகை யாளைப் பிறங்கொலி சான்ற
மணிமே கலையிடைப் பொருளறி வரிதெனும்
மாட்சியி னாளை வகைவகைப் பல்கலை
உடையா டன்னைப் பெருமித நடைவாய்
சிலப்பதி காரச் சேவடி யாளைத்
திசைதொறு மேம்பட் டொளிமிக் கோங்கு
முப்பா னூலணி பூண்டமு தாட்டியை
இயற்றமிழ் கருத்தா யிசைத்தமிழ் வாக்காய்
நாடகத் தமிழே நலத்தகு முடலாய்
அறிவிச்சை செயலென் றாங்கியை புணர்ப்பிற்
கரணமூன் றுடைய கன்னியைப் போற்றி
யங்கை கூப்பி யகங்களி துளும்ப
மெய்ம்மயிர் பொடிப்ப விம்மிதம் பூப்ப
வாழிய தமிழ்த்தாய் வாழ்கவெம் மன்னை
வாழிய சயவென வணங்கு வோமாக!

—அ. வரதநஞ்சைய பிள்ளை.

9. [திருவடி தொட்டுத் திருமுடிவரை அவளணிந்துள்ள கலன்கள் பலவகை மணிகளைப் பாங்குறப் பதித்தாங்கு விளங்குவதும் அவளது அரசியல் அங்கங்கள் தன்னேரில்லாத் தகைமையுடனிருப் பதும் வேறெம்மொழிக்கும் வாய்க்காத வியத்தகு வனப்புடையன வாதும். அவற்றின் பொருத்தம் ஈண்டு விளக்கப்படுகின்றன.]

திருவளர் தெய்வத் தமிழ்மொழித் தாய்க்குச்
சீதமார் கமலத் திருவடி தானும்
அலைகட லுலகத் தனைவர் நெஞ்சமும்
கலைகடல் மூழ்கிக் கவின்பெறச் செய்தே
தமிழகந் தனக்கே தனிப்பெரும் பெருமை
இமிழ்திரை ஞால மேத்த வளித்த

வள்ளுவர் செய்திரு வள்ளுவர் ஆகும் ;
தெள்ளிய சிலப்பதி காரம் தமிழனை
உள்ளி யணிந்த உயர்பெறு சிலம்பே ;
மேகலை தானும் மணிமே கலையே
நாகரும் போற்றும் நந்தமிழ்ச் செல்வியின்
காஞ்சியோ முதுமொழிக் காஞ்சியும் மதுரைக்
காஞ்சியும் மார்க்கண் டேயனார் காஞ்சி
ஆமென வறைகுவ ரருந்தமிழ் அறிந்தோர்
சீரார் கோவை திருக்கோ வையாரே
ஏரார் பருமம் எழிலார் செய்யுட்
கோவையென் றுரைப்பர் கோதிலா அறிஞர்
விரிசிகை தானும் வியன்பெறக் கூறின்
தெரிதரு தொண்ணூற் றறுவகைச் சாத்திரக்
கோவையென் றுரைப்பர் கோதில் புலவர்
பாவைதன் கடிதடம் பகர்தரு புலவோர்
அரும்பைத் தொள்ளா யிரமென அறைகுவர்
விந்தையா மிடையோ வியன்துடி நூலே
உந்தியோ அழகார் திருவுந்தி யாரே
பலதமிழ் அறிஞர் பிறந்தநல் வயிறே
உலகெலாம் புகழ்யசோ தரகாப் பியம்மே
பெருகுறு மன்பு பிறங்கிடங் குருகும்
பெருங்குரு கும்மாம் பீடார் தனங்கள்
நார்மிகு தமிழ்த்தாய் நலமார் சிறப்பொடு
வார்கட் டியாதென வகுத்திடில் யாப்புக்
காரிகை தன்னொடு கவின்யாப் பருங்கலம்
பேரிசை கொள்மா மூலர் யாப்பும்
மகேச்சுரர் யாப்பும் மாண்புறப் பொருந்தும்
பாகே யனைய பைந்தமிழ் மொழியாட்
கொத்த தனவடம் நித்திலக் கோவையே
தோலா நாவின் மேலோர் மொழிகொள்
நூலாம் மங்கல நாணென அறிக
கண்டிகை வியாழ மாலையாங் கணிப்பீர்

வஞ்ச மில்லா நெஞ்சென மிளிர்வது
நெஞ்சு விடுதூ தெனுந்தமிழ் நூலே
அன்பி னைந்திணை யெனுமடி முதலும்
நன்பொருட் களவியல் நன்பெரு முயிரே
சங்கத் தலைவராஞ் சாற்றுநக் கிரர்சொல்
அங்கதப் பாட்டே அணிமிகு தோள்களாம்
விரும்பும் தமிழனை வியப்ப விளங்கும்
திவாகரம் கயாகரம் திகழ்தரு கரங்களாம்
அவாவுறு கைவளை அணிவளை யாபதி
மோதிரந் தானும் மோதிரப் பாட்டே
புறமுது கதுவே புறத்திரட் டாகும்
புறமுது கணிதான் புகலக் கேண்மோ
புறப்பொருட் பன்னிரு படலமுஞ் சிறந்த
புறப்பொருள் வெண்பா மாலையு மாகும்
மணிநிகர் சொற்கள் மாண்புற மொழியும்
அணிபெறு வாய்திரு வாய்மொழி அறிவீர்
பற்கடாம் நித்தில வரிசைகொள் முறுவல்
கற்பார் விழையும் கவின்திருப் பல்லாண்
டாமென மொழிவர் அருந்தமிழ்ப் புலவோர்
ஓசைசெய் தளையு மோரின் குறுங்கலி
காசில் கலி,பெருங் கலித்தொகை என்பர்
தேமொழி வாசகம் திருவா சகமே
இசையோ என்னில் இசைப்பன் கேண்மோ
நசையுறு சிற்றிசை, பேரிசை நவின்றேன்
ஈரெண் கரண கலைக ளியம்பிடில்
பாரெலாம் புகழிசைத் தமிழோடு பத்தும்
ஆறுங் கூட்டிய படலமாம் அறிவீர்
வீறுடைத் தமிழ்த்தாய் வியந்திடுந் தெய்வ
இசையின் நுட்பமோ இசைநுணுக் கமேயாம்
இசைப்பா வென்னெனில் எழில்திரு விசைப்பா
சால்புடைக் கண்கள் சச்ச புடமொடு
நாலாம் முத்தொள் ளாயிரம் பகர்ந்தேன்

ஆற்றெனி லன்னை த னணிதிரு முகத்தைத்
தெற்றெனக் கூறெனிற் றெரிப்பன் கேட்பீர்
பீடார் களிற்றுப் பிறங்குநன் முகம்போல்
ஈடிலா வேழ முகமென வியம்புவன்
குண்டல மாகுமால் குண்டல கேசியே
பெருமை தருசீர்த் தலையணி செப்பின்
சீரார் சித்தாந் தசிகா மணியொடு
பேரார் சூளா மணிசூ டாமணி ;
செந்தமிழ்ச் செல்வியின் செவ்விய கேசம்
முந்தையோர் போற்றும் முதுமைசால் நீல
கேசியு மதன்தெருட் டுரையுமாங் கிளப்பின்
வாசமார் கேசப் பாலுறுப் பைந்தும்
பஞ்சம ரபொடு பஞ்சபா ரதீயம்
என்றே புகல்வர் எழில்நூற் புலவர்
தண்டமி ழன்னையின் தலைத்தெய் வமாலை
விண்டிடக் கேட்பின் வியன்தே வாரமே
நாட்டுறு புகழ்கொள் நலமிகு மன்னை பூச்
சூட்டுதான் யாதெனில் சுட்டுவன் கேண்மோ
ஆத்தி சூடியு மணிபெருங் குறிஞ்சியும்
ஏத்திடு கொன்றை வேந்தனு மென்பரால்
அணியை நோக்கின் அணியிய லதனொடு
மணிநா லாகும் மாறன் அணிநூல்
தண்டியின் அணிநூல் ஆமெனச் சாற்றுவர்
அன்னைபே ரழகும் அறையக் கேண்மோ
முன்னிய பெருங்கலம் மாபுரா ணம்மே
ஒப்பனை தானும் ஓவிய நூலே
செப்பில் விரையும் களரியா விரையே
அரண்மனை திருமந் திரமாம் அனைக்கே
முரண்பகை முருக்கும் மலையரண் கூறின்
கூடற் குழகனைக் கூறுகல் லாடமும்
காடுறு நாக காப்பியம் மேரு
மந்தர புராணம் ஆமென மொழிவர்

அந்தமார் கீரன் அனிபெரு நாரையே
குடியிருப் பதனைக் கூறிடுங் காலை
படிபுகழ் தொல்காப் பியமெனப் பகர்வர்
ஆணை அகத்தியர் ஆணையென் றறிக
மாண்புறு கொடியே மணியார் கொடிக்கவி
பரதம் பகரின் பரதம் செந்தமிழ்ப்
பரத சேனா பதீயம் சுந்தா
நந்தப் பிரகா சமாமென நவில்வர்
எந்தாய்க் ககப்பொருள் இசைப்பன் கேண்மோ
அந்தமில் சிறப்பார் அகநா னூறே
புறப்பொரு டானும் புறநா னூறே
இறப்பில் புகழ்பெறு மிசைத்தமி ழனைக்குக்
கைத்தண் டதுவாய்க் கலைக்கோட் டுத்தண்
டித்தரை போற்று மெழிற்பெருங் கதையெனப்
புகலுவர் ; மணிசிந் தாமணி புகன்றேன்
இகல்மிகு சக்கர மிசைத்திடின் நேமி
நாதம் என்ப ; நவிலைங் குழுவும்
ஓதுறும் ஐங்குறு நூறும் ஓர்ந்திடின்
அமிழ்தினு மினிய தமிழ்மொழி யனைக்குத்
தமிழ்விடு தூதே தகைசான் றிலங்கும்
எண்வகை ஆயம் எட்டுத் தொகையே
பண்பார் தசாங்கம் பத்துப் பாட்டே
அறுமூன் றடக்கிய ஆயம் அறைந்திடில்
சிறுபெரு நூற்களாய்ச் சிறந்திடும் பதினெண்
கீழ்க்கணக் கென்ப ; கிளரைந் திணையும்
தாழ்ச்சியில் ஐந்திணைத் திறன்தெரி குறிஞ்சி
முல்லை பாலை மருதம் நெய்தலே
சொல்லிய நூற்களும் செப்புதற் குரித்தே
பட்டப் புரவியே பரிபா டலாமே
பட்டிற் சுற்றிப் பரவிடுஞ் சைவ
சித்தாந் தசாத்திரம் செப்பும் உண்மைகொள்
கொத்தார் நூலிற் குலவுறு களிற்றுப்

படியே அரசுவா பகர்ந்திடி லணைக்காம்
துடியே ரிடைகொள் தூய்தமிழ் அன்னையின்
மேலாங் கூத்தோ கூத்தும் கூத்த
நூலொடு சிறந்த நுண்மதி வாணன்
நாடகத் தமிழும் நவிலுவர் புலவர்
பிடார்த் தமிழ்த்தாய் பிறங்க வாளம்
தாள சமுத்திரம் தாளவோத் தாகும்
இன்னன கொண்ட வெமதனை யாகும்
பொன்னிகர் செந்தமிழ்ச் செல்வியாம் பைந்தொடி
குணகடற் குடகடற் குடகம் வேங்கடம்
எனுந்தமிழ் நாட்டி னெழிலர சேற்றுத்
தவமார் மதுரைத் தலைநகர் அமர்ந்து
புவனம் போற்றப் புரந்து பொலிவாள்
நலமிகு நான்மணி திரைகொண்
டுலகோர் பரவ உவகையிற் சிறந்தே.

—இரா. சாம்பசிவ சர்மா.[1]

10. [தமிழ்த்தாயின் திருக்கொலுவைக் காணச் செல்வான் ஓரன்பனுக்கு அவ்வரசிளங் தமிழ் வீற்றிருக்குங் கோட்டைக்குள் புகு முன் காணப்படும் புறமதில், அகமதில், ஏழ்பொழில், ஆடிடம், செய்குன்று இவண் இனிது விளக்கப்படுகின்றன.]

"பலவகைய சொன்மலர்கள் பாரித்த பொருண் மணத்தால்
நலமிகுந்து சுவைபழுத்து நல்லறிவுத் தேன்துளும்பும்
அலகில்புகழ்த் தமிழன்னை யருமைப்பா டுளங்கொள்ள
நிலைகொள்ளா னவளடியை நேர்கண்டு வணங்குவல்யான்" 1

---

[1] இவர் 1901-ல் அரசர் மடத்தில் பிறந்தவர். ஆங்கிலம் இடை வகுப்பு (இன்டர்மீடியட்) வரை பயின்று சென்னைப் பல்கலைக்கழக வித்துவான் பட்டம் பெற்றவர். பல தனிப் பாடல்களும், இராசராச சோழன், திருமாவளவன், இராசேந்திர சோழன் முதலிய சரித நூல்களும் இயற்றியவர்.

வீரஞ் செறிந்த மறவர்தொழில் வீற்று வீற்றுத் தனித்தோன்ற
வாரம் படைத்த காட்சியவாய் வயங்கும் புறமா மதிலேழும் [1]
நாரின் மலிந்த தலைவனுடன் தலைவி நயக்கும் நற்றுறைகள்
நேரொன்றில்லா தமைந்தவக மதிலோ ரேழும் நினைப்பரிதால் [2]

கண்ணுக் கடங்காக் கருதுநெஞ்சம் தமதாய்க்கொண்டு களிப் [பேற்றி
எண்ணற் கறிவு தலைசிமிரா நிர்த்தே யுவகைக் கடலமுத்தும்
வண்ணத் தனதல் லிசைப்புலவர் மலர்வாய்த் தோன்றி [மணமாறாச்
சுண்ணப் பொழில்க ளேயோவித் தூயசங்கத் தமிழ் நாலே 3

வயிறுநொந்து பெறாது பெற்று மடிமேல் வைத்து முகநோக்கி
உயவு திரத் தன்முலைப்பால் விரலா லதுக்கி யுணவூட்டிச்
செயிர்தீர் மழலை பயிற்றி எனைத் தினமும் சீராட்டிவளர்க்கும்
அயர்வு நீங்கப் பண்ணையாயத் தாடுமிடமோ காப்பியங்கள் 4

அழிந்து மண்ணும் பொன்மணிகளவற்றாற் புனைந்த வலஅம்மா
சுழிந்த வடிவி னுருக்காட்டு மெழுத்தாற் றொடருஞ்சொற் [குறிப்பப்
பொழிந்தபொருட்கள் பரவமிளிர்ந்தற்வை யின்பப் புணரியிற் [றோய்த்
தெழுந்தன் மையபல் காப்பியமும் என்தாய்க்கினிய [செய்குன்றே. 5

—அ. வரதநஞ்சைய பிள்ளை.

11. [திருவுடை மன்னர்களுக்கெல்லாம் பத்து அங்கங்கள் இன்றியமையாதனவாகக் கருதினர் பழந்தமிழர். அப்புறவுறுப்புகளைப் புகழ்ந்து பாடுவது தமிழ்ப்புலவர்கள் கொண்ட தனிவழக்காம். அதற்கேற்பத் தமிழ்த்தாயின் தங்கீகாரற்ற செல்வங்கள் ஈண்டு ஏத்தப் படுகின்றன.]

---

[1] புறப்பொருள் திணை எழு. [2] அகப்பொருள் திணை எழு (அன்பினைந்திணை, பெருந்திணை, கைக்கிளை.)

## திருத்தசாங்கம்

### வெண்பா

### 1 பேர்.

தாரணியி லென்றென்றுந் தங்கிவிளை யாடுகின்ற
பூரணியின் 'பேர்'உரையாய் பூவாய்நீ—ஆரணியும்
அன்பர் பணிந்தேத்தும் ஆநந்த வல்லியுமாம்
இன்பத் 'தமிழ்த்தாயே' என்று 1

### 2 நாடு.

இயம்பு வனவியம்பி இன்பளிக்குங் கிள்ளாய்!
நயம்பெறவள் 'நாடு' நவில்வாய்—வயங்குமிளிர்
'வேங்கடமா வெற்புமுதல் மேவுகன்னி யாகுமரி
தாங்கிடுமா நாடாகுந் தான். 2

### 3 நகர்.

பொற்றொடியார் போற்றுகின்ற பொற்கிளியே! பைந்தமிழாம்
நற்றாய் 'நகர்'நீ நயந்துரைப்பாய்—வெற்றிக்
குதிரைப் படைகொணர்ந்த கொற்றவன்றன் கூடல்
'மதுரை'ப் பதியாம் மதி. 3

### 4 ஆறு.

அன்பூட்டும் நற்றமிழ்த்தாய் 'ஆறு' தனை ஐயமற
இன்பூட்டுங் கிள்ளாய் இயம்புவாய்—என்பும்
கரைந்துருகப் பாடும் கவுணியர்கோன் ஏடு
விரைந்தெதிர்செல் 'வையை' விளம்பு. 4

### 5 மலை.

தலைவன் தலைவி தமக்கிடையே தூது
செலுங்கிளிநற் றாய்'வெற்பு'ச் செப்பாய்—கலைத்தமிழும்
சாந்துகமழ் மாருதமும் சார்ந்துமனம் உந்துமுயர்
சந்தப் 'பொதியம்' எனத் தான் 5

### 6 ஊர்தி.

உலகுபுகழ் தண்டமிழ்த்தாய் 'ஊர்தி' யிது என்ன
இலகுமொழிக் கிள்ளாய் இயம்பாய்—நலமிகுந்த
சொற்றிறனால் கோதிலாத் தூயநடை யாலான்ற
"கற்றறிந்தோர் நா"வதுவே காண். 6

### 7 படை.

பகைவர்தமை வென்றவப் பண்புடையாள் கொள்ளுந்
தகு'படை'யா தோதுகநீ தத்தாய்—புகழால்
'சிறந்தாசு வித்தார சித்ர மதுரம்
'நிறைத்தகவி' ஆகும் நினை. 7

### 8 முரசு.

ஆனந்தம் யார்க்கும் அளிக்கும்தா யின்'முரசம்'
கானமொழிக் கிள்ளாய் கழறுவாய்—தேனேர்
'இயலும் இசையும் எழில்நா டகமும்'
வயங்கொள் முரசாகும் மற்று. 8

### 9 தார்.

மங்கையர்கள் கையில் மகிழ்ந்திருக்கும் வண்கிளியே!
கொங்கவிழும் அன்னையின்'தார்' கூறுதிநீ—பொங்கியொளிர்
பூவாரத் தும்பொலியும் பூணாரத் துஞ்சிறந்த
'தேவாரப் பாவாரம்' தேர். 9

### 10 கொடி.

அன்னைபுகழ் நாட்டும் அணி'கொடி'தான் ஓதுவாய்
இன்னமுத நேர்சொல் இளங்கிளியே—தன்னிகரில்
நற்றகைய முத்தமிழின் நாற்கவியும் நாட்டுபுகழ்க்
கொற்றப் 'புலமை'க் கொடி. 10

12. [இத்தகைய புறப்பொருள் வாய்த்துள்ள நம்செல்வி அகச் செல்வத்துட் செல்வமும் மிகுதியாகப் பெற்று விளங்குவதைச் சிறந்த ஒப்புவமைகளுடன் உணர்ந்து போற்றுவது இவ்வினியபாடல்].

சிந்தைநிறை செல்வமாய்த் தோன்றாத துணையாய்த்
தெவிட்டாத தெள்ளமுதமாய்த்
தேயாத மதியமாய்க் குவியாத பதுமமாய்ச்
செய்யாமணித் தீபமாய்
வந்தபிணி தீர்க்கின்ற வமுத சஞ்சீவியாய்
வறுமைதவிர் பொன்வாரியாய்
வாக்கில்வரு தெய்வமாய் தாக்கினொடு பொருளான
வன்னமக் திரவடிவியாய்
அந்தமாதி கணின்று மறியாத கன்னியாய்
அன்பில்வரு செந்தேறலாய்
அறிவினுக் கறிவாய் என்னுயிரினுக் குயிராகி
அப்பாலுமாகி நிற்கும்
ஆனந்த வல்லியே அன்பருள மகலாத
அரியசெந் தமிழன்னையே
திங்கள் வளருங்குவடு தங்கு தண்டலைகொண்ட
தென்பொதிய மலையரசியே!

க. வடிவேலு பிள்ளை [1]

13. [மாந்தர் தம்மக்களால் எய்தும் இன்பம் சிறந்ததொன்றாகும். இதில் ஈடுபட்ட தமிழ்ப் புலவர்கள் பிள்ளைத் தமிழ் எனும் ஓர் ஒள்ளிய நூலினத்தை வேறெம்மொழியிலுமிலா விரிவுடன் முறைப் படுத்தி வைத்திருப்பதில் தமிழர்கள் தனிப் பெருமை யடைய இட முண்டு. ஈண்டு தமிழ்த் தெய்வக் குழவி பல செல்லப் பெயர்

---

[1] இவர் 1891-ல் யாழ்ப்பாணத்திலுள்ள சுன்னாகத்தைச் சார்ந்த உடுவில் என்னும் ஊரில் பிறந்து நவாலியூர் சோமசுந்தரப் புலவர்பால் தமிழும், யோகர் சுவாமி என்னும் மெய்ஞ்ஞானியின் அருளும் பெற்றவர். பெரிய புராணத்தில் சிறந்த பயிற்சியுடையவர். கலைமகள், முருகவேள் மேற்பல பாடல்கள் இயற்றியுள்ளார். இயற்கைப் புலவர். இலங்கைத் தோட்டக் கணக்கர் சங்க அமைச்சர்.

களால் அழைக்கப் படுவது உள்ள முறைத்தும் உவகை தரத்தக்க தாகும். இதைப் பாடி யழைப்பின் தமிழினங் தமிழியின் பேரருளைப் பெறுவது திண்ணமாகும்].

## தமிழ்த்தாய் வருகை.

பன்னிரு சீர் ஆசிரிய விருத்தம்.

சாந்த மல்குதென் பொதியச்சைலத் தமரும் பூங்கோதாய்!
தாங்கும் புகழ்ச்சீர் நீண்மதுரைச் சங்கத்தோங்கும் கனிரச
வேந்தர்மூவர் மடியிருந்த வியனுர் மழலைத் தீங்குயிலே! [மே!
விண்ணோ ரமுது மொல்குசுவை மிக்கநூல்கொள் பெட்டகமே!
மாந்த ருள்ளத் திருளகற்ற மாண்புற்றிலங்குஞ் செங்கதிரே!
வந்து வந்து வேற்றவரும் வந்தித்திடுமின் கரும்பனையாய்!
சாந்த குணமு முள்ளூறிச் சாந்தமளிப்போய் வருகவே!
தக்கோர் போற்றுந் தமிழேயென், தாயே வருக வருகவே.!

G. K. இராமசாமி, கோவைமாநகர்:

14. [வெண்பாவும் கட்டளைக் கலித்துறையுமாகிய இருவகை மணிகளையும் மாற்றி மாற்றிக் கட்டிய இவ்வந்தாதித் தொடையல் தமிழ்த்தாயின் திருவுருவத்தை அழகுபடுத்துவதாகும்].

## செந்தமிழ்ச் செல்வி இரட்டைமணி மாலை.

காப்பு.

அணிமாலை பாவா லணிவாட் கிரட்டை
மணிமாலை நாவால் வழங்கப்—பிணிமாலை
ஓட்டுமிரு கோட்டம்[1] பிறைமிதழி யோங்குசடை
காட்டுமொரு கோட்டனடி காப்பு.

---

1 இரு கொம்புகளையுடைய அழகிய (பிறை).

நூல்

வெண்டா மரைமேல் விளையுந் தமிழ்ச்செழுந்தேன்
கண்டா லினிக்குமிரு கட்கரும்பு—கொண்டார்க்கு
வஞ்சத்[1] திருக்கு மறுத் தொழியா வாழ்வுதவி
நெஞ்சத் திருக்கு நிறைந்து. 1

நிறைவாண் மலர்முக மும்பணைத் தோளு நிலவினொளி
குறைவா ணகையு மிருட்குழற் காடுங் கொடியிடையும்
அறைவா னமுத மொழியு மரவிந்தத் தாள்களுமாய்
உறைவா ளுரைமகள் வெண்கம லத்துமென் னுள்ளத்துமே 2

உள்ளத்தா னுள்ள வமுதூறித் தித்தித்தென்
கள்ளத்தை நீக்கியின்பங் காட்டுமே—வெள்ளைக்
கலையு மணியுமணி காமரன மென்போற்
றலையு மணியு மணித்தாள்[2] 3

தாடலை வைத்த[3] வெண்டாமரை மேவித் தனதருட்சித்
தாடலை வைத்[4]தம் புவியா ளரசி அளிகள் சுவைத்
தாடலை வைத்த குழலா[5]ளென் னன்னைதன் னம்புயப்பொற்
றூடலை வைத்[6]தெனை யாண்டா ளழிந்தன சஞ்சலமே 4

சஞ்சலம்போ மின்பந் தழைக்குந் தருமனையும்[7]
அஞ்சலம்போய் வரவென் றதட்டலாம்—வஞ்சகர்செய்
தந்திரமோ தாதுகலை வாணிதமிழ் மூன்றெழுத்து
மந்திர[8] மோதி வரின் 5

---

1 வஞ்சமாகிய கோணலை நீக்கி. 2வெள்ளை உடையையும் ஆபாணங் களையும் அணிந்துள்ள அழகிய அன்னம் போன்ற தமிழ்த்தாயின் என் போற்றுதலையும் அணிகின்ற அழகிய திருவடிகள் இன்பங்காட்டுவன வாகும். 3 (தாள் தலைவைத்த) தண்டின் உச்சியிலுள்ள 4 தனது அறி வுருவமான விளையாடலைச் செய்து 5 வண்டுகள் (தேனை) உண்டு பறந் தாடுகின்ற கூந்தலையுடையாள் 6 தன் தாமரை போன்ற பொற்பாதங் களை என் தலை மீது வைத்து 7 இயமன் 8 தமிழ் எனும் மூன் றெழுத்தாலாகிய மந்திரத்தை.

வரிக்கோல வாள்விழி பானலம் போது[1] மதன்கரத்த
வரிக்கோல வாரிதி யீயும்மருந்து மதுரமொழி[2]
வரிக்கோல மாமுலை வாரணக்கோடு[3] மலர்க்கரத்து
வரிக்கோ லமரிசை யாழுடைச் செந்தமிழ் மாமயிற்கே[4] 6

மயிலே மடவனமே வண்டமிழ்பூங் காவிற்
குயிலே மலயமலைக் கொம்பே—மயலேதந்
தீர்க்கும் பழைய வினையிரண்டு மின்னினியே
தீர்க்குந் திருவருளைச் செய் 7

செல்லாத செல்வியைத்[5] தாமரை யாட்டியைத் தியவர்பால்
நில்லா தமர்ந்தெங்கு நின்றுளை நித்யகல் யாணியை நூல்
கல்லா தவர்மனம் போலிருட் கூந்தற் கனங்குழையை
அல்லா தருளுடைத் தெய்வந் தமிழகத் தார்க்கில்லையே 8

தாய்போ லுணவருளித் தந்தைபோற் கல்விகொடுத்
தாய்வலை போலின்ப மகத்துதவிச்—சேய்போல்
இளங்குதலைத் தீஞ்சொல் செவிக்கிவா ளென்றும்
வழங்குதலை யுற்றதமிழ் மாது[6] 9

மா[7]வாழ் பொதிய மலையிற் பிறந்து வாமுனிவன்
பூவாழ் கரமெனும் பொற்றொட்டி லாடிப் புலவர்சங்கப்
பாவாழ் பலகை யிருந்தேட்டி லேதவழ் பாவையென்றன்
நாவாழ் வுகந்தமை நான்முன்பு செய்திட்ட நற்றவமே 10

தவந்தரு மோங்குந் தனந்தரு மின்புஞ்
சிவந்தரும் பேரின்புஞ் சேர்க்கும்—நலந்தருமிப்
பூவா மெழுபிறப்பும் நற்றுணையாய்ப் புல்லுமே
பாவாழ் கலைமான் பதம். 11

---

[1] செவ்வரி படர்ந்த வாள்போல் வடிவுடைய விழி நீலோற்பலம் போன்றதாகும். [2] தித்திக்குமொழி மன்மதன் கையிலுள்ள வரிகளையுடைய கோலாகிய கரும்பையும், அது பாற்கடல் கொடுத்த அமிழ்தத்தையும் ஒத்தது [3] தேமலும் தொய்யிலுமுடைய பெரியமுலை யானைக் கொம்பை ஒத்தது. [4] மலர்போன்ற கையில் நீட்சியாகிய நரம்பு பொருந்திய இசைக்குரிய யாழையுடைய செந்தமிழாகிய அழகிய மயில்போன்றவளுக்கு [5] நம்மை விட்டு நீங்காத செல்வமானவளை [6] எப்பொழுதும் உலக வழக்கிலேயே இருக்கின்ற தமிழ்த்தாய் [7] இலக்குமி.

பண்டங்கு தீஞ்சொற் பனுவற் பிராட்டி பவளவிதழ்
விண்டங் கெழுந்த செழுந்தமிழ்க் கங்கை வியனதியும்
மண்டங்கி முட்டி நிவந்துவிண் ணோரும் மனமறுகக்
கண்டன் கறுத்த பெருமா னிருசெவிக் கட்டுண்டதே[1] 12

கடையமுதிற்[2] றென்பொதியக் கல்லிற் பிறந்த
நடையமுத நல்ல வமுதம்—கடையமுதம்
உண்டா லினிக்கு முணர்ந்தாலுங் கேட்டாலுங்
கண்டா லினிக்குமிது காண். 13

காவர சங்க மயலும் பிணியுங் கடிந்து[3] கமழ்
பூவர சங்கமர் பொன்னன மே[4] புக லும்பிடிக்கை
மாவர சங்கனுங் கும்நடை யாய்[5] மணிக் கூடலிலும்
தாவர சங்கம[6] மெங்கு நிறைந்த தமிழ்த் தெய்வமே 14

தெய்வமுனைப் போல்வேறு தெய்வமில்லை நீயுரைக்குஞ்
சைவசம யம்போற் சமயமில்லைப்—பொய்யன்று
மாமறையு மாறில் மறையு மறையுமென்றால்[7]
நாமறையு மாறு நகை[8] 15

கையது புத்தகம் யாழக்க மாலை கவரிதழ்[9] ந
கையது முத்தமு முல்லை யரும்புங்[10] கமழுமைவ

---

[1] ஆகாய கங்கை புவியில் விழாது சிவபெருமான் சடையில் ஒளித்த தற்கு மாறாக கலைவாணியின் வாயிலிருந்து விழும் தமிழாகிய கங்கை இப் புவியில் தங்கி நாற்றிசையும் பரந்து, நிமிர்ந்து தேவர்களும் (வியப்பால்) மனக் கலங்கும்படி சிவபெருமான் செவிகளிலடங்கியதாகும். [2] (பாற் கடலிற்) கடையப்பட்ட அமுதத்தினும். [3] அரசாங்கத்திலுள்ள மயக்கமும், நோயும் நீக்கிக் காப்பாற்றுக (தமிழ்த் தெய்வமே) என முடிக்க. [4] வாசனையுடைய பூவினுக்கு அரசாகிய (தாமரைப் பூவில்) வீற்றிருக்கின்ற அழகிய அன்னமே. [5] ஒப்புமை கூறப்படுகின்ற விலங் கரசாகிய யானையையும் வருத்தக் கூடிய நடை யுடையவளே. [6] நிலை யியல், இயங்கியற் பொருள்கள். [7] வேத ஆகமங்கள் சொல்லுமெனில். [8] நாம் கூறுவது நகைக்கத் தக்கதாகும். [9] இதழ் (கவர்) முருக்கம் பூவை யொக்கும். [10] பற்களானவை முத்துக்களையும் முல்லை யரும்பை யும் ஒக்கும்.

கையது பூங்குழல்[1] காலொன் றிரண்டு கமலநன்மு
கையது கொங்கை[2] கருத்ததென் மேற்கொண்ட[3] காரிகைக்கே

காரியமன்[4] மேதிக் கடாவினெதிர்ந் தாலுமது
காரியமன் றன்று கடத்தெலும்பைச்—சீரியசம்
பந்தனுயர் பூம்பாவை யாக்கவருள் பாமகள்முன்
தந்ததமி ழின்றுமுண்டு தான் 17

தாதுறை தாமரை யோபுன லோதரை யோவிரைசேர்
போதுரை சோலைப் பொதியங்கொ லோபுல வோருலகோ
சூதுரை[5] கொங்கைத் துடிபிடைச் சுந்தர வல்லியன்ன
மாதுறை கின்ற விடந்தா னறியும் வழியில்லையே 18

வண்ணப் புனலும் வளியும் நெடுவிசும்பும்
மண்ணுமன லும்மறைந்து நின்றாலும்—எண்ணுமிரு
கண்ணும்மன மும்முருகக் காட்டி வெளியாக
நண்ணும் தமிழரசி நன்று 19

நங்கைக் கிடந்தரு நாண்மல ரேமுக நாகிளவேய்
அங்கைக் கிடந்தரு தோளா மடியில வந்தளிரே
கொங்கைக் கிடைந்தொல்கு நுண்ணிடைக் கொப்புமை
[கூறினது
சங்கைக் கிடமிட மேதட மேவுவெண் டாமரையே 20

—நவாலியூர் க. சோமசுந்தரப் புலவர்.

---

[1] அழகிய கூந்தல் மணம் வீசும் ஐம்பகுப்புடையது. [2] கொங்கைகள் ஒரு தாள் ஈன்ற இரு தாமரை மொட்டுக்களை ஒத்தன. [3] என் மீது அருள் உடைய [4] கறுப்பான யமன் [5] சூதாடு கருவி போன்ற.

15. [திருக்கோவையார், சாச்சுவதி யந்தாதி, கந்தரலங்காரம் முதலிய முன்னோர் மொழி பொருள்களின் நறுமணங் கமழ்ந்து படிப்போர் உள்ளத்தையுங் கவர்ந்து தமிழ்த்தாயின் திருவுருவத்தில் பெரிதும் ஈடுபடுத்துவது இவ்வினிய பாடல்.]

## தமிழ்ப் பாமாலை.

### காப்பு

கட்டளைக் கலித்துறை.

பூமகள் கேள்வன் மணியுந்தித் தாமரை பூத்தவயன்
மாமறை நாவினும் வெண்டா மரையிலும் வாழுமெங்கள்
பாமகள் சேவடி போற்றிப் பசுந்தமிழ்ப் பாப்பகர
ஓமரு வாதி[1] விநாயகன் பொன்னடி யுச்சியவே (க)

அஞ்சு தலையுடைத் தாறு தலையடைந் தன்பருய[2]
அஞ்சு தலையுடை யாறு தலையடைத் தாரருளும்
அஞ்சு தலையுடை யாறு தலையுடை யாற்றொழுதே[3]
அஞ்சு தலையுடை யாறு தலைப்பா வறைகுவனே[4] (உ)

வாடும் பயிர்க்கு மாமழை போலலென் மலக்கொடுமை
ஓடும் படிக்கும் கருணை சுரந்த வுயர்குருவின்
தேடும் திருவடி சிந்தையிற் கொண்டு செழுந்தமிழாற்
பாடும் பணிதந்த பாரதி[5] பாதங்கள் பாடுவனே (ந)

### நூல்.

திருவளர் தாமரை போலும் முகமுஞ் செழுங்குவளை
மருவளர் நோக்கமும் செந்துவர் வாயும் மதிநுதலும்
தருவளர் செங்கரம் நான்குஞ் சிலம்பணி தாள்களுமாய்
உருவளர் பூங்கொடி போன்றென் விழிக்குளொளிர்கின்றதே 1

---

[1] பிரணவவடிவுடைய ஆதிக்கடவுளாகிய. [2] பயப்படுதலை நீக்கி ஆறுதல் அடைந்து உய்வதற்காக (அறைகுவேன்) [3] ஐந்து முகங்களையுடையவரும் ஆற்றை (கங்கையைத்) தலையில் தரித்தவரும் (ஆகிய சிவபெருமான்) பெற்ற, (அசுரர்) அஞ்சத்தக்க ஆறுமுகங்களையுடையவரை (முருகவேளைத்) தொழுது. [4] ஐந்து தலைப்பையுடைய ஆறு (முப்பது) பாடல்களைச் சொல்லுவேன். [5] கலைமகள்.

தாமரை போலும் கரத்தா லெடுத்துத் தழுவியிரு
தாமரை போலும் விழியாற் குறித்துச்[1] சலங்களழித்
தாமரை நாழிகை யும்[2]மற வாவர மங்கமலத்
தாமரை நாவிற் பசுங்கொடியே[3] யென்றுந் தந்தருளே 2

பழகிய பைந்தமிழ்ப் பாவாணர் கூறும் பனுவலினும்
வளவிய நான்முகன் நாவினும் நான்கு மறையகத்தும்
இளகிய வன்பர்கள் நெஞ்சினும் பூத்தென் சிரத்தொளிரும்
அழகிய "செந்தமிழ்ச் செல்வியின்" நூபுரத் தம்புயமே 3

தூண்டா விளக்கம் பிறவாத முத்தஞ் சுடரரவந்
தீண்டா மதியம் கடையாது தோற்றிய தெள்ளமுதம்
மாண்டாலுங் கூடத் தொடரும் வழித்துணை வஞ்சனெனை
ஆண்டா தரித்தவெண் டாமரைத் தண்டமி ழாரணங்கே 4

குணந்தரும் மெய்யன்பர் கூட்டந் தருங்கொடுக் கக்குறையாப்
பணந்தரும் பைந்தமிழ்ப் பாவொரு நான்கும் பகரத்தரும்
கணந்தரும் கல்வி தருஞ்சிவ மான கதியுந்தரும்
மணந்தரும் வெண்டா மரைவாழு மன்னை மலர்ப்பதமே 5

சுணங்கும் வடமுஞ் சுமந்திறு மாந்த துணைமுலையும்
இணங்கும் துடியிடை யும்பணைத் தோளு மெழிலமுதும்
பிணங்கும் மொழியு மடித்தா மரையும் பெரிதுமன்பால்
வணங்கும் வரமருள் வாய்த்தென் பொதிய வரைமயிலே 6

விற்காட்டி வேறிரு வேல்காட்டிப் பொல்லா வினைவிடிய
எற்[4]காட்டும் வாணி முகமதிப் பேடகத் தின்மதுரச்
சொற்காட்டும் துப்பிதழ்ச் செப்பிலுன் முத்தந் தொகுத்
[திருக்கப்
பற்காட்டிச் செல்வர்கள் பாற்போ யிரத்தல் பழவினையே 7

---

[1]தாவுகின்ற மான்களையொத்த இருவிழியால் கருணைசெய்து [2]வஞ்சங்களை நீக்கி அரை நாழிகைநேரமும் (ஆம்-அசை.) [3]அழகிய கமலமாகிய தாமரை போன்ற (சிவந்த) நாவையுடைய பசிய கொடி போன்றவளே. [4]சூரியன்,

குடையுந் தனுவும் புரவியும் மன்மதன் குஞ்சரமும்
படையுந் திருமுக மும்நுத லும்சுவைப் பான்மொழியும்
மிடையும் குழலும் மெனவுடை யாண்[1]மழை மின்னலஞ்சி
இடையு[2] மிடையுடை யாள்கலை வாணி இளமயிலே 8

மயிலே மடப்பிடி யேதமி ழூறும் மழலைமொழிக்
குயிலே குலக்கொடி யேவினை வேலை[3] குடித்தெழுந்த
வெயிலே நிலவுமிழ் மேனிமின் னேயென் மிடிகெடுக்கும்
அயிலே[4] யுனதிரு தாளன்றி யில்லை யடைக்கலமே 9

காரே நறுங்குழல் வில்லே திருநுதல் காமரயிற்
கூரே கயல்விழி கொம்பே துடியிடை கோங்கரும்பின்
சீரே வனமுலை பாகே சுவைமொழி தீங்ககற்றிப்
பாரே மதிக்க வெனையாண்ட வெள்ளைப் பசுங்கிளிக்கே 10

வார்க்குங் குமக் கொங்கை யும்பணைத்தோளும் வலியமிடி
தீர்க்குங் கருணை விழியுஞ்செவ் வாயுந் திருமுகமும்
ஆர்க்குந் தமிழ்மறைக் கிண்கிணிக் கால்களு மாகவியான்
பார்க்குந்திசைதொறுநிற்பாள் சொற்பாவை பயங்கெடுத்தே 11

பூமகள் கூறும் புகழ்மக ளின்பம் புரியுமகள்
பாமகள் யாரும் பணியும் மகள்பனி போனிறத்து
நாமகள் நல்லுயிர் நாவினி னன்கு நடனமிடும்
மாமகள் தாமரைக் கண்ணனுக் கென்றும் மருமகளே 12

தூக்குந்[5] தமிழ்த்துறை யேறிய தொண்டர்க டுன்பமெலாம்
போக்கு மலர்மிசைப் புத்தமு தேபுன்மைப் பொங்கிருளை
நீக்குஞ் செழுஞ்சுட ரேயென்று நாவினி னின்றுரையை
ஆக்கு முயிர்த்துணை யேயடி யேனுன் னடைக்கலமே 13

---

[1]தமிழணங்குதன் திருமுகம், நெற்றி, சுவையுடைய பால்போன்ற மொழி, நெருங்கிய கூந்தல் ஆகிய நான்கும் மன்மதனது குடை (மதியம்), வில் (கரும்பு), குதிரை (கிளி) யானை (மேகம்) இவற்றை நிரலே ஒப்பாகக் கொண்டவள், [2]பின் வாங்கும் [3]வினையாகிய கடல் [4]வேலாயுதம் [5] ஆராயப்படுகிற

நாவா லெடுத்துச் செவியா லருந்தநன் னெஞ்சகமே
மேவா வினிப்ப துயிர்ப்பிணி தீர்ப்பது விண்ணவர்க்கும்
ஆவா கிடைத்தற் கரியது பாற்கட லன்றுபெறு[1]
மூவா மருந்தது வெண்டா மரைமேன் முளைத்ததுவே 14

வாசப்பட் டாடை யுடையுக் திருமுக மண்டலமும்
பூசப்பட் டேயொளிர் பூங்குழற் காடும் புதுநகையும்
ஓசைப்பட் டோதிம மென்ன மிழற்றுஞ் சிலம்படியும்
ஆசைப்பட் டேனன்னை யேயினிக் காட்டி யருளுதியே 15

காமன் கரத்தது செந்துவர் வாயது காட்டுவது[2]
பூமன்னு திங்கள் முகத்திற் பொலியும்[3] புயல்நிறத்து
மாமன் கரத்தது கண்ட[4]மிருக் கையும் மாமதலைத்
தாமன் குனித்ததும் மார்பின[5] செந்தமிழ்த் தையலுக்கே 16

திருவுறை செங்கரம் நான்கி னொருகை செகமுணர
அருமுறைப் புத்தக மேந்திய தன்ப ரகம்விளங்க
உருவுறை மாலை யிணைக்கரங் கொண்டது கையிரண்டும்
வருமுறை யாழின் நரம்பு தெரித்து வருடியவே 17

எப்போதும் போகாக் கலைவாணி பாதமிரண்டு மென்றும்
முப்போதும் போதுகொண் டேத்துவிரேல்முடிமன்னரெலாங்
கைப்போதும் கூப்புவர் செல்வங் கதிக்குமிக் காசினியில்
எப்போதுஞ் சிருண் டிறந்தால் மறுமையி லின்பமுண்டே 18

---

[1] பாற்கடல் பெறுவமுதம் தமிழணங்கேயாகும். [2] தமிழணங்கின் சிவந்த வாயில் உண்டாகிய சொற்கள் காமன் கையிலுள்ள கரும்பைப் போன்றது. [3] அழகு நிறைந்த மதியம் அவளது முகத்தைப்போல விளங்கும். [4] நீலமேக நிறமுடைய அவளது மாமன் கையிலுள்ள சங்குபோன்றது அவளது கழுத்து. [5] பெரிய கொன்றை (மாலையணிந்த) சிவபெருமானின் (மாமதலைத்தாமன்) இருப்பிடமாகிய (கைலை) மலையும், அவன் வளைத்ததாகிய (மேரு) மலையும் அவளது மார்பிலுள்ளன (கொங்கைகள்).

திருமுத்த மாலையுஞ் சந்தனச்சேறுந் திளைக்குங் கொங்கை
உருமுத்த வெண்ணகைச் சூடகச் செங்கை யுயர்கருணை
தருமுத் தமகுணத் தாயே யெனையெடுத் துத்தழுவி
ஒருமுத்தந் தாவறி யாமையும் நோயு மொழிந்திடவே 19

ஒப்பிதழ்த் தாமரைப் பூவென் றுரைக்கு மொளிமுகத்துத்
துப்பிதழ்ச் செப்புத் திறந்து சுடர்முத்தங் காட்டிமுன்செய்
தப்பித மெல்லாம் பொறுத்துன் மடிமிசைத் தந்துவினை
வெப்பித மாக வளரமு தீகலை மெல்லியலே 20

வானும் புவியும் புனலுங் கனலும் வளியுமிய
மானு மிருசுட ருங்கலந்[1] தென்விழி மன்னிநின்றாள்
தேனுங் கரும்பு மமுதும் புறங்கண்ட தெய்வமொழி
மானுஞ் சுரும்பும் விரும்பும் விழிக்கலை வாணுதலே 21

ஆவிக் கருந்துணை யாந்தமிழ்ச் செல்வி யருள்வடிவிற்
காவிக் கருங்கணும் வள்ளைக் குழையுங் கதிர்முகமும்
தாவிக் குலமயிற் சாயலும் பாதத் துணையுநெஞ்சிற்
பாவிக் குந்தோறு மமுதூறி யின்பம் பயந்திடுமே 22

ஊனா ருடம்பிற் பிணிக்கொரு கோடி மருந்துரைத்தார்
ஆனா உயிர்ப்பிணிக் கேற்ற மருந்தொன் றறிந்துரைப்பேன்
மானார் விழியுங் குயிலார் மொழியு மருவிவெள்ளைத்
தேனார் கமலத் திருக்கும் பிராட்டி திருவடியே 23

வஞ்சந் திருத்திப் பொறாமையுங் கோபமும் மாற்றியென்றன்
நெஞ்சந் திருத்தி யொளிவிளக் கேற்றி நினதுபதக்
கஞ்சம் பொருத்திக் கதிதரு வாய்கம லத்துறையும்
அஞ்சந் திருத்து நடையாய்[2] பலகலை யாய்மயிலே 24

ஒருகணப் போதுந் தரியாத வின்பத் துழலு மென்னை
அருகணைத் தென்று மழியாத வின்பத் தழுத்தி வைப்பாய்
இருகணு ணின்ற வொளியே யினமென வெண்ணி யனக்
குருகணை[3] கோல நடையாய் நறுந் தமிழ்க் கோமளமே 25

---

[1] ஐம்பூதங்கள், உயிர்கள், பரிதி, மதி (ஆகிய எட்டுப் பொருள் களிலும்) கலந்து. [2] அன்னப்பறவை (பார்த்துத்) திருத்திக் கொள்ளு கிற. [3] அன்னப்பறவை நெருங்குகின்ற.

மாதங்க மேனி வடிதங்கு வேலிரு மைவிழிகள்
சூதங் கெழுந்த புணர்முலை மின்னல் துடியிடையாம்
ஏதங் கெடுத்தெனை யாண்ட பனுவற் பிராட்டியிரு
பாதங்கள் நீரினிற் பூவா தலர்த்திடும் பங்கயமே 26

தண்டே னொழுக்கி யரியுறல்[1] போற்றண் ணளிபிலிற்றக்
கொண்டாடு மன்பினர் கூடுதலாற் குலத்தா மரையும்
வெண்டா மரையாள் பதமுமொப் பென்னிலும் மென்மலருக்
குண்டே விரிந்து குவிகின்ற தாகுமொரு குறையே 27

பண்டே குறைகொண் டுடம்பிற் கறைகொண்டு பாம்[2]பொரு
உண்டே யுமிழ்கின்ற வெச்சிலை யோ[3]வுயர் பாவலர்கள் [நாள்
கண்டே கனிந்து பவளம் விரித்து கதிரரும்புக்
தண்டா மரையாள் முகத்தா மரைக்கொப்பு சாற்றியதே 28

அவியாச் செழுஞ்சுட ராய்நெஞ் சகத்தே யமர்ந்தெனது
கவியா தரிக்குங் கலைப்பெரு மாட்டி கதிர்முகத்தே
குவியாக் குவளையுங் கோவாத முத்துங் குரைகடலுற்
பவியா வமுதும்[4] பவளமுங் கூடிப் பயில்கின்றவே 29

போகாத செல்வம் புரிவாளைப் புத்தமு துக்குவமை
ஆகாத செஞ்சொ லருள்வாளை யன்றழன் மீதமர்ந்து
வேவாது நின்று விளையாடி ஞளை விரும்பினல்லாற்
ரேகாதி வஞ்சக் துறக்கரி தென்பர் செந்நாவலரே 30

தனியன்

தவந்தரும் மேலாந் தனந்தரும் இன்பந் தருந்தணியா
நவந்தரு சீர்தரும் நட்புத் தரும்நல்ல வாழ்வுதரும்
பவந்தரு தீவினை வேரும் மரமும் பறித்தழியாச்
சிவந்தருஞ் ‘‘செந்தமிழ்ச் செல்வியின்’’ ஞானத் திருவடியே

—நவாலியூர். க. சோமசுந்தரப் புலவர்.

---

1 வண்டை நெருங்கச் செய்தல் 2 இராகு கேதுக்கள் 3 மதியையோ 4 (அமுதம்போன்ற) நீர்.

# IV. தமிழ்க் கொடி.

1. [எக்கொள்கையினையும் விடாது பின்பற்ற விரும்புவோருக்கு எளிதாய அறிகுறி கொடியேயாகும். அது உயரப் பறந்து, அதன் கருத்தைப் பலருக்கும் ஒரே பொழுதில் விளக்கி, யாவருள்ளத்தையுங் கவர்ந்து, நல்லுணர்வைத் தட்டியெழுப்பி, அருஞ்செயல் புரிவிக்கிறது. போரிலும் அது இன்றியமையா உறுப்பாயமைந்து கிளர்ச்சி தந்து வெற்றிக்கு அடிகோலி யிருக்கிறது. இதனாலன்றே பண்டைக் காலந்தொட்டு மக்களும் மன்னர்களும் தமது குறிக்கோளுக் கேற்றதொரு கொடி யமைத்துக் கொள்வாராயினர். தெய்வ வழிபாட்டிற்கும் அதன் தேவை பெரிதேயாகும். கோவில்களிலெல்லாம் கொடிமரம் ஓர் சிறந்த உறுப்பாயமைந்து உள்ளே ஒடுங்கியுள்ள பொருளை வாயிலிலேயே வெளிப்படத் தோற்றுவிக்கிறது. இந்நூலில் இதுவரை வாழ்த்தி வணங்கப்பெற்று வியத்தகு திருவுருவத்துடன் விளங்கி வந்துள்ள தமிழ்த் தெய்வமும் தக்கதொரு கொடியுடன் பொலிவது இன்றியமையாததாகும். இத்துடன் வெளிவந்துள்ள இப்புதுக்கொடியாகிய நூல், யாழை உள்ளிடையாய்க் கொண்டுள்ள **அரங்குக் கொடி** இயல், இசை, நாடகம் எனும் முப்பகுதியுடன் முழுமை எய்தி விளங்கும் முத்தமிழுக்கேற்றதாய் அமைந்திருப்பதும், வேறெம்மொழியும் எவ்வகைக் கொடியையும் இன்னும் பெறாதிருப்பத் தமிழ்மொழி ஒன்றே இவ்வரிய கொடியைப் பெற்றிருப்பதும் குறிக்கொளத் தக்கதாகும். இத்தகைக் கொத்து முத்தமிழ்க் கொடி நின்று நிலவ வாழ்த்தும் பாடல் ஈண்டு முதலிடம் பெறுகிறது.]

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

சொல்லும் பொருளு மியைந்தெண்சுவை தரு நூலொரு பாலும்
கல்லு முருக முரலும் கவின்பெரு யாழொரு பாலும்
அல்லில் மகிழ்ந்து நடிக்கும் அரங்கொரு பாலுமன் கமைந்த
செல்வச் செந்தமி ழன்னை திருக்கொடி நிலவுக சிறந்தே

—புலவர். பெ. கோவிந்தன்.

2. [இத்தகையதோரு கொடியை எண் (அட்ட) மங்கலப் பொருள்களுள் ஒன்றாகக் கருதியதாலும், ஆட்சிபுரி தலைவர்க்கு மாட்சி யுண்டாக்கவல்ல உறுப்புகள் பத்தினுள் (தசாங்கம்) அதனை ஈற்றில் வைத்துப் புலவர்கள் பாடியிருப்பதாலும் அதனை எப்பொழுதும் பொது நிலையங்களிலும், சிறுப்படி நாட்களில் நாடெங்கும், உயர்த்து வாராயினர்; திருக்கோவில்களிலுந் திருவிழாத் தொடங்குமுன் கொடி யேற்றம் நிகழவேண்டியதாயிருக்கிறது. இவ்வாறு கொடி வணக்கம் சிறந்து விளங்கும் இக்காலத்தில் தமிழ் மக்களெல்லாம் தம் வீடுகளில் அதனை உயர்த்திக் கட்டும் கடமை பெரிதாகின்றது. அதைச் செலுத்த அறை கூவி அழைப்பது இவ்வரிய பாடல்.]

கொடி யுயர்த்திடு வோம்-தமிழ்க்-கொடி யுயர்த்திடு வோம்
கடமை காத்திடு வோம்-ஆன்மக்-கன லு டனுழைப் போம்

சூரிய சந்திரர்க் கும்-நமதிசை-சொல்லிப் பறக்குது பார்
பார் முழுதும் வணங்க-இதைநாம்-பார்த்து மகிழ்வோ மே ()
போர்ப் புயல் வரினும்-கொடிய-புரட்சி கள்வரினும்
கார்ப் புயல் வரினும்-நிலை-கலங்கி நிற்ப துண்டோ (கொடி)
இந்த வுடலி னிலே-ஒருதுளி-இரத்த முள்ள மட்டும்
எந்தாய் வாழ்க வென்றே-இதை-ஏத்திப் பணிந்திடு வோம் ()
ஒற்றுமை யாய்வாழ் வோம்-நலம்-ஓங்கப் பணிபுரி வோம்
வெற்றிகள் கூறிடு வோம்-சுற்றி-வீர முரசடிப் போம் (கொடி)

—சுவாமி. சுத்தானந்த பாரதியார்.

3. [இவ்வாறு ஏற்றப்பட்டு விளங்குங் கொடியினைப் பார்த்துத் தமிழின் தனிச் சிறப்புக்களை நவின்றுகொண்டே வணங்க அழைப் பது இப்பாடல்.]

இன்பக் (ஆனந்தக்) களிப்பு.

இன்பத் தமிழ்க்கொடி பாரீர்—நாம்
எல்லோரும் ஏற்றிவ ணங்குவோம் வாரீர் (இன்பத்)

1. மன்பதை மாநில மீதே—தாய்
வயிற்றிலிருந்து வெளிப்படும் போதே

அன்பு கனியக் கனிய—வாயால்
அம்மாவம் மாவென் றழைக்கும் இயற்கை (இன்பத்)

2. இயற்கை யொலியின் அமைப்பும்—நல்
இயலிசை நாடக மென்னுஞ் சிறப்பும்
உயிர்க்கரண் செய்யும் ஒலிப்பும் வாய்ந்து
உள்ளங் கவர்ந்திடுந் தெள்ளமு தாகிய (இன்பத்)

3. புத்தகம் யாழும் அரங்கும்—ஞாலம்
போற்றும் இயலிசை நாடக மூன்றின்
முத்திரை யாக விளங்கும்—உயர்
முத்தமிழ்த் தாயின் சிறப்போ டிலங்கும் (இன்பத்)

4. பேச்சில் உரத்தும் கனைத்தும்—பேசிப்
பெருமூச்சு வாங்கும் பிறபாடை யைப்போல்
மூச்சுத் திணருத லின்றி—தூய
முத்து முத்தாய்ப் பேசும் முத்தமிழ்த் தாயின் ()

5. குமரியங் கோட்டிற் பிறந்து—தமிழ்க்
கூடலிற் சங்கத் தவிசி லமர்ந்து
இமயம் வரை செங்கோ லோச்சி—யுல
கெங்கும் புகழ்பெற் றிலங்கிடுங் காட்சி (இன்பத்)

6. மறையின் கதவைத் திறக்கும்—உயிர்
மாய்ந்த பெண்என்பையும் மங்கைய ராக்கும்
இறைவனைத் தூதாய் விடுக்கும்—முதலைக்
கிறையான சேயையும் உயிரோ டழைக்கும் (இன்ப)

7. தீயில் கடித்ததைப் புல்லும்—பாய்ந்து
செல்லும்வெள் ளத்தினும் எதிரேறி வெல்லும்
ஆயின் புலவர்தம் நாவில்—நின்று
ஆக்க லழித்தலுங் காத்தலுஞ் செய்யும் (இன்பத்)

8. வல்லிரும் பொத்த மனத்தர்—சற்றும்
வஞ்சமி லாத்தமிழ்ச் செஞ்சொல்நா வேந்தைக்
கல்லிற் பிணைத்துக் கடலிற்—றள்ளுங்
காலத்துங் கன்மிதப் பாய்க்கரை சேர்த்த (இன்பத்)

9. புற்றிற்கை வைத்தரா கக்கும்—மணி
புகழ்கின்றைக் காளத்தி புலவருக் கீந்தார்
செத்துப் புதைத்த குழியுந்—தமிழ்ச்
சிதக் காதிக்கைக் கணையாழி யீயும் (இன்பத்)

10. குன்றுதோ றாடும் முருகும்—தென்
கூடலில் மேவிய மாலுஞ் சிவமும்
கன்றின்பின் செல்லும் ஆவைப்போல்—இன்பக்
கன்னித் தமிழ்ச்சுவை காதல்கொண் டோடும் (இன்)

11. அன்பை யடக்குந் தாழுண்டோ—தமிழ்
ஆர்வ மிக்காரைத் தடுப்பவ ருண்டோ
பொன் பொருள் என்புயி ரெல்லாம்—தமிழ்ப்
பொற்கொடி ஏற்ற மதற்கேயாம் ஈவோம் (இன்பத்)

12. உள்ளமெனுந் தூய வீட்டில்—தமிழர்
ஓங்க உணர்வுக் கொடிமரம் நாட்டி
தெள்ளு தமிழ்க்கொடி ஏற்றி—நாளும்
செந்தமிழ் வாழிவா ழியெனப் போற்றீர். (இன்பத்)

—சுவாமி. அருணகிரிநாதர்.[1]

---

[1] இவர் செங்கைக்கு அருகில் பிறந்தவர். தமிழர் சமயம்பற்றிய தமிழ்த் துறவற நிலையில், திருவொற்றியூர் பெரியசாலையில் சாது நாராயண தேசிகர் மடாலயத்தில் ஞானானந்த மணவாள சுவாமிகளிடம் மெய்யறிவு விளக்கப் பெற்றவராவர். இவர் மலேயா நாட்டு முருகர்மீது பாடல்கள் பல இயற்றியுள்ளார். துறவோர் கழக அமைச்சராய்த் திகழ்கின்றனர். இவரியற்றிய நூல்களுட் சில:—தமிழ்த்தாய்ப் புலம்பல், தமிழ்ப் போற்றி, தமிழர் உரிமை வேட்கைப் பாடல்கள், (மலேயா) பேரா முருகன் சதமணிமாலை, (கோலாலம்பூர்) வத்துமலைவடிவேலர் பதிற்றந்தாதி, காளி மாரி கோயில்களில் கலியில் நடக்கும் பலிக்கொடுமை முதலியனவாகும்.

4. [இவ்வாறு ஏற்றி முழக்கிய பின் அக்கொடியைப் பார்த்துப் பார்த்து வணங்கித் தரும் உணர்ச்சியும் நன்மைகளும் அடைய அழைப்பது இப்பாடல்.]

இன்பக் களிப்பு

தாயின் தமிழ்கொடி பாரீர்—அதைத்
தண்டமிழ் மக்காள் வணங்குவோம் வாரீர் (தாயின்)

மாயிரு ஞால முழுதும்—தோற்றும்
வச்சிரக் கம்பத்தின் உச்சியின் மீதே
தூய தமிழ் வாழ்க வென்றே—தீட்டித்
தொன்மைத் தமிழர் சிறப்பை விளக்கும் (தாயின்)
வெண்டுகி லென்றிட லாமோ—பாய்ந்து
வீறிட்டு வீசும் பெரும்புயற் காற்றுந்
தண்டமிழ்த் தென்றலாய் மாறி—வீசுந்
தன்மையி னற்றமிழ் நன்மையைக் காட்டும் (தா)
விண்கொண்ட மட்டு மளாவுந்—தமிழ்
வெற்றிக் கொடிக் கம்பஞ் சுற்றியே நிற்கும்
திண் கொண்ட வீரப்பு யத்துத்—தமிழ்த்
தேயநன் மக்கட்குள் நேயத்தை யூட்டும் (தா)
ஆடவர் யாவரு மோர்பால்—அவர்க்
காண்மையை யூட்டும் அரிவைய ரோர்பால்
வீடு பெறுதற்கே யாவும்—விட்ட
வீரத் துறவியுமோர் பால்நின்று காக்கும் (தா)
ஞாயிறுந் திங்கள்திக் கெட்டும்—இந்த
ஞாலமும் ஞாலத் துயிருள்ள மட்டும்
வேயுறு தோளியர் கற்பும்—தமிழ்
மேன்மக்க ளாண்மையும் மேல்நின்று காக்கும் (தா)
மேதினி வாழ்க்கைக்கு வேண்டும்—பல
வேறு தொழில்கள் வியப்புறச் செய்வோம்
சாதி மதப்பூசல் வேண்டாம்—ஒரு
தாய்பெற்ற செந்தமிழ்ச் சேய்நாமெல் லோரும் (தா)

எத்திசை யோர்களும் போற்றத்—தேச
மெங்குந் தமிழ்க்கொடி யேற்றுவோம் வாரீர்
எத்துணை யின்னல்வந் தாலும்—காலால்
எற்றிடு வோம்வெற்றி பெற்றிடுவோ முண்மை (தா)

வாழி தமிழ்நாடு மக்கள்—கோடி
வாழிமண் கீர்த்திகால் வானுள்ள மட்டும்
ஆழி சூழ் பூதல—மெங்கும்
அண்டமுந் தண்டமிழ் வென்றுவா ழியவே. (தா)

—சுவாமி. அருணகிரிநாதர்.

5. [இத்தகைய இன்றமிழ்க் கொடியின் வெற்றி வேண்டி வரங்கிடப்பதிப்பாடல்.]

என்றுமுள தென்தமிழே எங்களுயிர் இறையே
எங்களுயிர் காத்தருளும் எம்மரிய தாயே
ஒன்றுமிலை தமிழர்களுக் குன்னிலும் மிகுத்த
உயர்பொருளாய் இலகுவதே எங்கெங்குந் தாயே
என்றுமுன்றன் திருவடிக்கே ஏதும்புகழ் கூறுர்
என்னவர்கள் எவரனினும் எங்கட்கு வேண்டாம்
வென்றுதமிழ்க் கொடியினையே உயர்த்திடவே தமிழன்
விறுகொள வீரமருள் வீரத்தமிழ்த் தாயே.

ம. ரா. போ. குருசாமி[1]

---

[1] இவர் மழுசாபுரம் தமிழ்ப் பேரன்பர் இராக்கப் பிள்ளை மகனவர். இப்பாடல் ஆனந்த போதினியில் வெளிவந்ததாகும்.

# V. தீந்தமிழின் தெய்வத்தன்மை.



1. [தண் தமிழுக்கே ஏற்பட்டுள்ள தனிச் சிறப்புக்கள் பலவற்றுள்ளும் தலையாயது அதன் தெய்வத் தன்மையே யாகும். அப் பண்புதானும் அதன் (அ) பிறப்பு, வளர்ப்பு (ஆ) ஆற்றல், செயல் (இ) அதனைப் பிற தெய்வங்கள் போற்றியுள்ள வகைகளினால் நன்கு விளங்கும். தெய்வத்தன்மைக்குப் பிறப்பும் சிறிதேனும் உதவியளிக்க வல்லதே என்பதை மறுக்க வியலாது. அதற்கேற்பப் பல புலவர்கள் அதன் குலமுறை இளத்திய வகையைக் கீழே காணலாம். அவற்றுள் அதை முழுமுதற் கடவுளின் உணர்விலிருந்தே எழுந்ததெனவும், அது அநாதியாய்ப் பிறப்பற்றிருக்கிற தெனவும் கூறும் பகுதி முதலாவதாகும்.]

## (அ) தெய்வப் பிறப்பு வளர்ப்பு

மொழியுளத் தாலறி யாச்சிவ வுணர்வாற்
றனியியன் முறைமுன் சாவாக் கல்வியாய்[1]
ஐந்தக் கரத்தி[2] லமையுந் தமிழ் மொழி
ஒலிவடி வாகி யுலவு மநாதியில்

—பேரகத்தியம்.[3]

---

[1] எக்காலத்தும் மாயுந்தன்மை யில்லாததாய். [2] எ, ஒ, ற, ன, ழ என்னும் சிறப்பெழுத்துக்கள். [3] இச் சிறு நூல் அகத்தியர் இயற்றியதாகக் கூறப்படும் நூலிலிருந்து மேற்கோளாகக் கூறப்பட்டவற்றைத் திரட்டி பேரகத்தியத் திரட்டு அல்லது பேரிசைச் சூத்திரம் என்னும் பெயருடன் பவானந்தம் பிள்ளையால் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

2. [தமிழின் தெய்வப் பிறப்பைப்பற்றி கல்வியிற் பெரிய கம்பர் கூறும் வரலாறவது]:—

உழக்குமறை[1] நாலினு முயர்ந்துலக மோதும்
வழக்கினு மதிக்கவி னிலும்மரபி னடி[2]
நழற்பொலி கணிச்சி[3]யணி நெற்றியுமிழ் செங்கட்
டழற்புரை சுடர்க்கடவுள் தந்ததமிழ் தந்தான்[4]

—கம்பர்[5]

3. [வடநாற் கடலும் தென்னூற் பெருக்கும் வாரியுண்டு இலக்கண இலக்கிய உரைநூ லியற்றியுள்ள ஒரு பெரும்புலவர் கூறுவதாவது:— ]

வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி யதற்கு இணையாத்
தொடர்புடைய தென்மொழியை யுலகமெலாந்
[தொழுதேத்தும்
குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகரெனிற்
கடல்வரைப்பி லிதன்பெருமை யாவரே கணித்தறிவார்.

இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவ ரியல்வாய்ப்ப
இருமொழியும் வழிப்படுத்தார் முனிவேந்த ரிசைபரப்பு

---

[1]ஒலிக்கப்படுகிற வேதம். [2]உலக வழக்கிலும், செய்யுள் வழக்கிலும் முறைமையாக ஆராய்ந்து. [3]மழுப்படை. [4]சிவபெருமான் தந்த தமிழை அகத்தியர் மீண்டும் தந்தவராவர். [5] இவர் 12ம் நூற்றாண்டில் திகழ்ந்த பெரும் புலவர். கலைமகள் அருள்பெற்று, சடையப்ப வள்ளலாலும், அக்காலத்து அரசராலும் பெரிதும் போற்றப்பட்டவராவர். கம்பசித்திரமெனப் பெயர் பெற்றுள்ள பெருங்காப்பியமாகிய இராமாயண மியற்றிக் கம்பநாட்டாழ்வார் என வழங்கப்படுகிறார். இவரது இராமன் தெய்வத் தன்மை வாய்ந்து விளங்குவதுடன் ஏனைய பாட்டுடையோரும் (கதா பாத்திரங்களும்) வேறு காவியங்களிலில்லாச் சிறப்படைகின்றனர். இவர் சரச்சுவதியந்தாதி, சடகோபரந்தாதி, ஏரெழுபது முதலிய நூல்களும் இயற்றியுள்ளார்.

மிருமொழியு மான்றவரே தழீஇயினு ரென்றாலிவ்
விருமொழியு நிகரென்னு மிதற்கைய முளதேயோ

—சிவஞானமுனிவர்[1]

(ஆ) தெய்வ ஆற்றல் செயல்

1. [இவ்வாறு தூய்பிறப்பு, சூழ்நிலையால் பெருமைபெற்றுள்ள தமிழ்த்தாயின் தெய்வத்தன்மை கைக்கு மெய்யாகப் பயன்கொடுக்கும் ஆற்றலிலும், கொடுத்துள்ளவகையிலும், எல்லாவற்றிலு மேலாக அமைந்திருக்கிறதெனலாம். வேறெம் மொழியாலும் அருளிக் கூறி னும், வெகுண்டு கூறினும், உடன் பலிக்கும் இயல்பு இத்துணை இல்லை என்பது திண்ணம். இதனை விளக்கப் பல புலவர்கள் பாராட்டி யுள்ள பாடல்கள் இப் பகுதியில் தொகுக்கப்பட்டுள்ளன. அவற் றுள் மிகப் பழமைவாய்ந்தன முதற்கண் வைக்கப்பட்டிருக்கின்றன.]

தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்தது முதலை
யுண்ட பாலனை யழைத்தது மெலும்பு பெண்ணுருவாக்

[1] இவர் 18ம் நூற்றாண்டில் வாழ்ந்த பெரும்புலவர். மாதவச் சிவஞான யோகிகளெனவும் அழைக்கப்பட்டுச் சிறந்த கவிகளும், சைவ சித்தாந்த, இலக்கண நூல்களும் இயற்றி அழியாப் புகழெய்தியுளர். இவ ரது சிவஞான போதப் பேருரை தமிழில் இணையற்றதாய் வட மொழி யில் நீலகண்டர், சங்கார், இராமாநுசர், மாத்துவ ரியற்றிய பிரம சூத்தி ரப் பேருரைகளினுஞ் சிறந்ததாய் மாபாடிய மெனப்படுகிறது. இவர் பொதியமலைக் கருகிலுள்ள விக்கிரமசிங்கபுரம் எனும் ஊரில் ஆனந்தக் கூத்தர், மயிலம்மையார் என்பாருக்குத் தவப் புதல்வராய்ப் பிறந்து இளமையிற் றுறந்தவர். முக்களாலிங்கர் எனப் பெயர்பெற்று திருவா வடுதுறை ஆதினத்து வேலப்பதேசிகர்பால் ஞானவிளக்கம் பெற்றுத் தமிழ் மொழியின் பிறவாத் தன்மையை முதலில் நிறுவியாரவர். இவ ரியற்றிய வேறு நூல்களாவன :—சிவஞானபோதச் சிற்றுரை, சிவஞான சித்தியாருரை, தருக்க சங்கிரகம், அன்னம்பட்டியம், தொல்காப்பிய சூத்திர விருத்தி, வயிரக்குப்பாயம், அமுதாம்பிகைப் பிள்ளைத்தமிழ், செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ், திருவேகம்பரந்தாதி, சோமேசர் முதுமொழி வெண்பா, காஞ்சிப்புராணம், அரதத்த சிவாச்சாரியார் சுலோக பஞ்சக மொழிபெயர்ப்பு முதலியன.

கண்டதும் மறைக்கத வினைத் திறந்ததுங் கன்னித்
தண்டமிழ்ச் சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்?

—பரஞ்சோதியார்[1]

2. [மேற்கண்ட பாடலையொட்டி எழுந்தன கீழுள்ளவை.]

கன்ம ரக்கலஞ் செய்தது மேடொரு கனலின்
மன்னி நின்றதுஞ் சூலைமாற்றியது மோர் மதமா
முன்னஞ் சுற்றிவிழ் வித்தது நீற்றறை மூளியா[2]
துன்னச் செய்ததுந் தமிழ் மொழியன்றி வேறுளதோ?

இறந்த பாலனை யெழுப்பின தெழில்வழு திவெப்புப்
பறந்து முன்னர்ப் போனின்றது பனைமறு பனையாச்
சிறந்தி லங்கிட வைத்தது வூமைப்பெண் டிருவாய்
திறந்த தித்தமிழ் மொழியலா தெம்மொழி செயுமே?

---

[1] இவர் 11ம் நூற்றாண்டில் சைவ வேளாண் மரபில் உதித்தவர். இளமையில் துறந்த ஞானாசிரியரிடம் அறிவுரைபெற்று, மூர்த்தி, தலம், தீர்த்தம், முறையாய்த் தொடங்கி மதுரை வந்தகாலை அங்கயற்கண்ணம்மை கனவிற்றோன்றி திருவிளையாடற் புராணத்தை இயற்றச் சொன்னதால் "சத்தியாய்ச் சிவமாகி......" எனத் தொடங்கி இந் நூலையும், திருவிளையாடற் போற்றிக் கலிவெண்பாவையும், மதுரைப் பதிற்றுப்பத்தந்தாதியையும், இயற்றி அரங்கேற்றினார். இவரது திருவிளையாடற்புராணம் ஏனைய இரு திருவிளையாடற் புராணங்களின் முன்னின்று, பெரியபுராணத்திற்கு அடுத்தபடியாகச் சொற்சுவை பொருட்சுவை தோய்ந்து விளங்குவதாகும். இது அப்புராணம் திருநாட்டுப்படலம் 58-வது பாடலாகும்.

[2] வேகச் செய்யாது.

3. [தமிழின் தெய்வத்தன்மையை நன்குணர மதுரை மூதூர் நீர்,நெருப்பிற்று வாய்த்ததுபோல் நமக்கும் சிவனருள் வாய்க்கவேண்டு மென்பதை அறிவிப்பதிப்பாடல்.]

பாரறியு மறிவினுமிப் பார்மே னின்ற
பசுஞானத் தாலுமெட்டிப் பார்க்கொ ணாத
பேரறிவே சிற்றறிவேற் கிருளை நீக்கும்
பேரொளியே யங்கயற்கண் பிரியா தானே
யாரறிவார் தமிழருமை யென்கின் றேனென்
னறிவீன மன்றோஉன் மதுரை மூதூர்
நீரறியு நெருப்பறியு மறிவுண் டாக்கி
நீயறிவித் தாலறியு நிலமுந் தானே[1]

—பரஞ்சோதியார்.

4. [கீழ்க்கண்ட நான்கு பாடல்களும் நால்வரோதும் தமிழின் நற் செயல்களை நவில்வனவாதும். இவை தத்திப்பாயும் ஓசையுடன் கேட்போர் உள்ளத்தை ஊடுருவுவனவாதும்.]

புனலி லேலெதிர் போகெனப் போகுமே
புத்த ஞர்தலை தத்தெனத் தத்துமே
கனலி லேடிடப் பச்சென் றிருக்குமே
கதவு மாமறைக் காட்டி லடைக்குமே
பனையி லாண்பனை பெண்பனை யாக்குமே
பழைய வென்புபொற் பாவைய தாக்குமே
சினவ ராவிடந் தீர்கெனத் தீர்க்குமே
செய்ய சம்பந்தர் செந்தமிழ்ப் பாடலே

தலைகொ ணஞ்சமு தாக விளையுமே
தழல்கொள் வீடுத டாகம தாகுமே
கொலைசெ யானை குனிந்து பணியுமே
கோள ராவின் கொடுவிடந் தீருமே

---

[1] இது மதுரைப் பதிற்றுப்பத்தந்தாதியின் 45வது பாடல்,

கலைகொள் வேத வனப்பதி தன்னுளே
　　கதவு தானுங் கடுகத்தி றக்குமே
அலைகொள் வாரியிற் கல்லுமி தக்குமே
　　அப்பர் செப்பு மருந்தமிழ்ப் பாடலே.

வெங்கரா வுண்ட பிள்ளையை நல்குமே
　　வெள்ளை வாரண மீதிலி ருத்துமே
மங்கை பாகனைத் தூதுந டத்துமே
　　மருவியாறு வழிவிட்டு நிற்குமே
செங்க லானது தங்கம தாகுமே
　　திகழு மாற்றிட்டுச் செம்பொனெ டுக்குமே
துங்க வான்பரி சேரற்கு நல்குமே
　　துய்ய நாவலூர்ச் சுந்தரர் பாடலே

பெருகும் வையை தனையழைப் பிக்குமே
　　பிரம்படிக்குப் பிரான்மேனி கன்றுமே
நரியெ லாம்பரி யாகந டத்துமே
　　நாடி மூகை தனைப்பேசு விக்குமே
பரிவிற் பிட்டுக்கு மண்சுமப் பிக்குமே
　　பரம னேடெழு தக்கோவை பாடுமே
வருகும் புத்தரை வாதினில் வெல்லுமே
　　வாதவூரர் வழங்கிய பாடலே.

5. [நம்பி ஆரூரர் தமிழ்க்கலையின் உயர்வு அதன் தெய்வீக சத்தியா லாயதென்பதை விளக்கி வடமொழியினும் மேம்பாடு கூறுவது இப்பாடல்.]

இலக்குள நி ரலைத் ததனுள்
　　இடங்கர் வர வழைத்ததன் வாய்த்
தலைக்குதலை மதலைவய
　　துடனழைப்பச் சாற்றியநின்

கலைக்குமறை மொழிகொள் வட
கலைக்குமுறு கணக்கு உயர்பொன்
மலைக்கும் அணு நிலைக்கும்உரு
வன்றொண்டப் பெருந்தகையே

—இராமலிங்கசுவாமிகள்[1]

6. [கீழ்க்கண்ட பாடலின் வஞ்சப் புகழ்ச்சியணி மிகவும் இனியதாகும்.]

தருக்காலு[2] மலர்ப்பொழில்சூ ழாரூரர்
தமைப்புலமைத் தருக்குத் தன்னால்
பெருக்காலு[3] மிவரருமைப் பெம்மானென்
றெண்ணாமற் பெண்பித் தேறி
முருக்காலும் வெலற்கரிய விதழ்ப்[4] பரவை
யிணங்கும்வகை மொழிந்துவா வென்
றிருக்காலு நடத்தினா னொருக்காலுந்
தமிழ்க்கிரங்கி யிருக்கொணாதே.

---

[1] இவர் காருணீக குல விளக்காய் 1823ல் மருதூரில் இராமையா பிள்ளையின் இளைய மகனாகப் பிறந்தார். தந்தையை இளமையில் இழந்து, தமையனார் சபாபதிப் பிள்ளையின் விருப்பப்படி கற்காததால் புறக்கணிக்கப்பட்டார். அண்ணியாரின் அன்பினால் திருந்தி தணிகை வேளருளால் தாமாகவே அருங்கலைச் செல்வமுற்றுத் தமையனாரினும் பேர்பெற்ற பெரியபுராண விரிவுரையாளரானார். பின் திருவொற்றியூர் இறைவனை நாளும் வணங்கி மனுமுறைகண்ட வாசகம் எனும் உரை நூலும், நெஞ்சறிவுறுத்தல் முதலிய பாடல்களும் இயற்றினர். பின் திருமணமாகியும் துறவியாய்த் தில்லைசென்று வழிபட்டு வடலூரில் ஞானக்கூடம் கட்டி, பல பாடல்களியற்றினார். இவர் பாடிய திருவருட்பா மிக உருக்கமும் எளிமையும் நிறைந்து யாவராலும் பெரிதும் போற்றப்படுவதாகும். இப் பாடல் இவர் பாடிய ஆளுடையநம்பியா ரருண்மாலையிலுள்ளது. [2] மரங்கள் உதிர்க்கிற. [3] பெருமை மிகும். [4] முருக்கம்பூவாலும் வெல்லுதற்குரிய (சிவந்த) உதடுகளையுடைய.

7. [தமிழின் சீரை அஃறிணைப் பொருளும் அறியும் அருமை இதில் வெளிப்படுத்தப் படுகிறது.]

நீரும் நெருப்பும் நெடுமலைய முத்தமிழின்
சீரு மருத்திறனுஞ் செப்புமால்—தேருங்கால்
என்பும்பெண் ணாக விலையோ புளிநிழற்க
ணின்பத் தமிழ் பழுத்த தென்[1] ?

—N. V. சுந்தரராசையர், B.A.L.T.[2]

(இ) தெய்வப் போற்றல்கள்

1. [இவ்வாறு பிறப்பு வளர்ப்பு, ஆற்றல் செயல்களால் கடவுட் டன்மையுடன் விளங்குந் தமிழணங்கு பல தெய்வங்களாலும் போற்றப்பட்டு வருதலும் இயற்கையே யாகும். இதனை விளக்கும் பாடல்களுள் கற்பனை மிக்க, பிற மொழிகளினும் மேம்பட்ட வகையை விளக்குகிற, பழம் பாடல்கள் முதற்கண்ணவாகும்.]

கடுக்க வின்பெறு கண்டனுந் தென்றிசை நோக்கி
யடுக்க வந்துவந் தாடுவா னடலி னிளைப்பு
விடுக்க வாரமென் கால்[3] திரு முகத்திடை வீசி
மடுக்கவுந்[4] தமிழ்த் திருச்செவி மாந்தவு மன்றோ?

---

[1] நம்மாழ்வார் புளிய மரத்தின் நிழலிலிருந்து பாடியது அம்மரமும் தமிழ்ப் பழம் ஈன்ற வியப்புக்குரியதாகிறது. இவ்வாறு தமிழ்த்தாய் தாழ்ந்த பொருள்களையும் அடிமைகொண்ட வகையைக் குற்றாலக் குறவஞ்சி ஆசிரியராகிய திரிகூட ராசப்பக் கவிராயர் கூறுவதாவது:—

வேலையில் வீழ்த்தகல்லு மென்குடம் புகுந்த வென்புஞ்
சாலையிற் கொளுவுந் தீயுந்தாங்குநீர் வைகையாறுஞ்
சோலையாண் பனையும்வேதக் கதவமுந் தொழும்புகொண்ட
வாலையாந் தமிழ்ப்பூஞ் செல்வி.

[2] இவர் மதுரைத் தமிழ்ச் சங்கத்து உதவி அமைச்சராய்த் திகழ்ந்தவராவர். [3] சந்தன மணத்துடன் வீசும் தென்றல். [4] இன்புறவும்.

கண் ணு தற்பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து
பண் ணு றத்தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமி ழேனை
மண்ணி டைச்சில விலக்கண வரம்பிலா மொழி[1] போல்
எண்ணி டைப்படக்[2] கிடந்ததா வெண்ணவும் படுமோ?

—பரஞ்சோதியார்.

2. [தமிழின் தன்மை இறையனாரை இளகச் செய்த வகைகளுட் சில ஈண்டு வியப்புடன் கூறப்படுகின்றன.]

அறுசீர் ஆசிரிய விருத்தம்.

பித்தனென இகழ்ந்ததுமெண் ணுதுபா
டுகளனவும் பெண்பால் தூது
சித்தமகிழ்ந் ததுவேட்டுச் செலவுமினுஞ்
செயற்கரிய செயவுந்[3] தானே
ஒத்தமுதற் புலவனென வுறவும்[4] எழு
திடுவானு வுறவும்[5] ஓங்கு
வித்தகவண் கயிலையகம் வருவித்துக்
கேட்டிடவு[6] மேய தம்மா

—மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை[7]

---

[1] பொருளிலக்கண மில்லாத சமக்கிருதம் முதலிய மொழிகள். [2] எண்ணிக்கைக்கு உட்பட்டு (ஒன்றாகக் கருதப்பட்டு). [3] என்பைப் பெண்ணாக்கியது முதலியன. [4] தலைச் சங்கத் தலைமைப் புலவராகத் தோன்றவும். [5] திருக்கோவையாரை எழுதவாவும். [6] சேரமான் பெருமான் நாயனாரைக் கயிலை வருவித்து ஞானவுலாவைக் கேட்டிடவும் மேவியது (தமிழ்) [7] இவர் 1815 முதல் 1876 வரை திகழ்ந்த பெரும் புலவர். மதுரையில் வழிவழிவாழ்ந்த சிதம்பரம் பிள்ளை புதல்வர்; திருச்சிராப்பள்ளியில் குடியேறியதால் திரிசிரபுரம் பிள்ளை என அழைக்கப்பட்டார். தமிழ் வழங்கு நல்லுலகத்து யாவரானும் போற்றப்பட்டு மகாவித்துவான் எனும் பட்டஞ் சூட்டப்பெற்றார். இவர் பலப்பல புலவர்பால் பாடங் கேட்டுத் தமிழ்ச்சுவை மாந்தியும், தம்மையண்டி வருபவர்க்கெல்லாம் கற்பித்துந் தமிழறிவைப் பெரிதும் பரப்பியும் காலங்கழித்து வந்தார். அத்துடன் இவரியற்றிய அத்துணைப் பாடல்கள், பிரபந்தங்கள், தல புராணங்கள் வேறு யாரும் இயற்றிலர். இவரது சேக்கிழார் பிள்ளைத் தமிழ் எக்காலத்தும் மறக்கவொண்ணுத அருநூலாகும்.

3. [இறையனர் முதலாக ஏனைய பல தெய்வங்களும் தமிழைப் போற்றும் பேறு வாய்க்கத் தங்களைத் தாழ்த்திக்கொண்டு செய்த தனிச் செயல்களை இன்னேசை பொருந்த எடுத்துரைப்பன இவ் வரிய பாடல்கள்.]

நன்னயஞ்சேர் செந்தமிழி னற்சுவையுந் துய்க்கவெனு
அன்னை தடாதகையா ளன்றளித்த—சொன்ன[1]
முடியுங்கொண் டான்வழுதி மோதும் பிரம்பா
லடியுங்கொண் டானு லரன்.

செஞ்சுருட்டி இசை.] கண்ணிகள் [ஆதி தாளம்.

அந்தமு மாதியு மில்லா வொருமுத
லானப ரம்பொருளே—உனை
முந்தவி ரும்பித் தலைவனென் றேத
முதற்சங்க மேறினனே!

எழுதரு நான்மறை தேடரு நாயக
னென்பதை யும்மறந்தே—முன்னம்
பழுதறத் தன்னைப் படவெழுதியின்னைப்
பார்த்து மகிழ்ந்தனனே!

பித்தனென் றேதினும் நற்றமி ழூற்றுதி
பேசுகவென்று கெஞ்சி—அன்று
வித்தகராம் நம்பி யாரூரர்பாட்டு
விருப்புறக் கேட்டனனே!

நூலாசிரியனு மாக மிகுங்காதல்
நாக்கவி னன்புவைத்தே—பொருட்
பாலா மகத்தினைத் தன் பெயராலே
படைத்து திறுவினனே!

---

[1] சுவர்ணம் (தங்கம்) என்பதன் மரூஉ.

பாவுக் கரசெனுந் தாண்டகங்கேட்டுப்
        பரிந்துமிக மகிழ்ந்தே—திரு
நாவுக் கரசெனப் பட்டமப் பர்க்குமுன்
        நல்கியருளினனே !

தருமிக்கு மோர்பாண பத்திரனர்க்குந்
        தனிக்கவி தானுரைத்தே—மனம்
ஒருமித்துத் தானுந் தமிழ்க்கவிவாண
        ருடனட்பு வேண்டினனே !

ஏதஞ்சொல் கின்றநக் கீரன்முன்வாதி
        யெனநின்று வாதஞ்செய்தே—கையில்
பாதிகா ளத்தியும்பாதி யெனுந் தமிழ்ப்
        பாக்கொண்டு வந்தனனே[1]

செந்திருமாலுந் தனைவட நான்மறை
        சேர்ந்து புறந்தொடர—உன்றன்
விந்தைமிகும்பின் னழகினைக் காண்பது
        வேண்டித் தொடர்ந்தனனே

பிள்ளைத் தமிழ்தன்மேற் பாடும் புலவர்
        பிரானுக்கு முத்துவடம்—கூடல்
வள்ளைக் குழைக்கயற் கண்ணி வழங்கி[2]நின்
        மாட்சி தெரித்தனளே

முட்டையெனப் பாடுகென்று செவ்வேளுன்
        முழுச்சுவை வேட்டனனே—ஔவை
யிட்டவகவல் புனைந்து கரிமுகத்
        தேந்தலு மோங்கினனே

இன்னபெருமை யளப்பில நிற்கல்லா
        தெம்மொழி கட்குமின்றே[3]—எங்க

---

[1]பாடலை (ஏற்றுக்) கொண்டு மகிழ்ந்தனன். [2]குமரகுருபரருக்கு அங்கயற்கண் அம்மை முத்துமாலை சூட்டியது குறிப்பிடப்படுகிறது. [3]அளவில்லாத இத்தகைய பெருமை உனக்கு (தமிழுக்கு) அல்லாமல் வேறெம் மொழிக்கு மில்லை.

என்னைநின் மக்களே னப்பெறும் பேறு
மடைந்தனம் யாங்கள் நன்றே

உன்மொழி யின்சுவை நன்னயஞ் சொல்லியல்
போசையணிபலவும்—நடை
மென்மையும் பூப்பவி ளமைகாணும்
மிகுகென வாழ்த்துதுமே.

—அ. வரதநஞ்சைய பிள்ளை.

4. [இப் பாடலும் தமிழ் மொழியை இறைவன் பயன்படுத்திப் பெருமையுற்ற பல செயல்களைக் குறிப்பதாகும்.]

தந்திமு கக்கடவுள் தம்பிகு கக்கடவுள்
முந்திடும் மந்திரத்தை—சிவன்பால்
மொழிந்தசொல் பசுந்தமி ழே.

பலன்பெற் றவர்சரிதம் பாடிடுஞ் சேக்கிழார்க்கு
உலகெலா மெனவெடுத்துச்—சிவனார்
உதவிய சொல்தமி ழே.

கற்பு கடனமிடுங் காரைக்கா லம்மையாரின்
அற்புதப் பாடலெல்லாம்—சிவனார்
அணியும்பூந் தமிழ்மொழி யே.

வருடத்துக் கோர்கவி வழுத்திய திருமூலர்
திருமந்திரம் மூவாயிரம்—அதுவும்
தீஞ்சுவைத் தமிழ்மொழி யே.

தொழுதிடுஞ் சேரனுக்குத் தொண்ட னிடங்கொடுத்த
வழுவிலாத் திருமுகமும்—சிவனார்
வரைந்ததுந் தமிழ்மொழி யே.

நாடிய பொருள்பெற நல்லத ருமியிடம்
பாடியே தானீந்த—சிவனார்
பாசுரம் பசுந்தமி ழே.

சுகப்படும் அறுபது சூத்திர மாகவே
அகப்பொரு ளிலக்கணத்தை—சிவனார்
அருளின மொழிதமி ழே.

வளம்பெறும் வாதவூர் மாணிக்க வாசகர்
விளம்பினர் தமிழ்க்கோவை—சிவனர்
விரும்பினர் தானெழு த.

அவனிபுகழ் தென்னாட்டுக் காதரவாய் மெய்கண்டார்
சிவஞான போதமெனும்—ஒரு நூல்
செய்ததுந் தமிழ்மொழி யே.

மடத்தினுமா பதியார் மதித்திடப் பெற்றானிடங்
கொடுத்தமெய்ச் சீட்டுக்கவி—சிவனர்
குறித்ததுந் தமிழ்மொழி யே.

—அடுக்குமொழி ஆவுடையப்பர்[1]

5. [ "தெய்வ மொழி" என்றழைக்கப்படும் சமஸ்கிருதத்தினும் மேலாகத் தெய்வங்களாலேயே தமிழ் பல் வகைகளில் போற்றப் பெற்றிருப்பதை விளக்கி அதன் ஆண்மை உயர்வில் ஈடுபடுத்துவது வெண்பாவும் கலித்துறையும் மாறி மாறி வரும் இச் செந்தமிழ் இரட்டை மணிமாலை. ]

தேனர் பொழிற்கைலைச் சீர்சிகர மேவுமொரு
வானர் பவள வரைமுகத்தே[2] —தானாகத்

[1] இவர் 1888ல் பிறந்தவர். காருகுறிச்சி பிரமநாயகம் செட்டியார் புதல்வராவர். பள்ளி ஆசிரியராயிருந்து தமிழ் பயின்று சொற்பொழிவு ஆற்றிவருகிறார். அடுக்குமொழி எனும் முன் பட்டமும், இயலிசைப் பிரகாசர் எனும் பின்பட்டமும் பெற்று 30 கதைவரை இசையுடன் விளக்க வல்லவர். மூத்தபிள்ளையாருக்கு விடாது தொண்டாற்றும் பேறு பெற்று விளங்குகிறார். [2] சிவபெருமான் முகத்தில் (வாயில்).

தோன்றிவே ளீராறு தூச் செவிவாய்ப் பாய்ந்[1] திரண்டு
மூன்றில் வருந்[2] தமிழே முன்.

முன்னு மிறைவன் முகத்தே யிருந்து முதற்பிறந்து
பன்னு மொழிகள் பலவினு மேம்படும் பான்மையதாய்த்
துன்னுந்[3] தமிழை யணங்காகக் கூறித் துதிப்பர்சில்லோர்
கொன்னு[4] முலகினி லான்மொழி யென்றிவன் கூறுதுமே.

கூறுந் தமிழ்தெய்வங் கோநகர மாமுத்திக்
கேறும் புணை[5] யென்றே யேத்துதுமால்—தேறு
மகத்தியருஞ் செவ்வேளு மாயுள் மிகவென்று[6]
நகந்திருந்து[7] போற்றுதலி னால்.

போற்றும் வடமொழி தாயாகி வந்து புணரவதைத்
தேற்று மணமுடன்[8] றந்தையிற் கூடிச் செகதலத்தி
லாற்றும் பலமொழி யாமக வீன்றவை யாடல்செய
ஆற்றுங் கருணைத் தமிழே யெவர்க்கு முயிர்த்துணையே.

துணையா யிருந்திறைவன் றாய்ப்பதத்தி லென்று
மணையா விருந்தின்ப மாரப்—புணையாகத்
தந்தளிக்குஞ் செந்தமிழே சங்கரன்முச் சங்கத்தும்
வந்தளிக்குந் தேனெனவே வாழ்த்து.

வாழு மியலிசை நாடக மென்ன வளர்தமிழைத்
தாழுஞ் சிரமுடன் வாயுட லாகத் தரித்துலகைப்

---

[1]முருகவேளின் பன்னிரு செவிகளால் கேட்கப்பட்டு. [2]ஐந்திலக்கணமுடன் தோன்றிய. [3]நெருங்கும் (நம் உயிருடன்). [4]பெருமை மிகும். [5]தமிழே முதன்மையான முத்தி நகரத்திற்குச் செலுத்தத்தக்க தோணி. [6]பல்லாண்டு வாழ்கவென்று. [7]மலைமேலிருந்து (அகத்தியர் பொதியைமேலும் செவ்வேள் குன்றுதோறும்). [8]தெளியச் செய்யும் திருமணத்துடன்.

போழுங் கடவுள்[1] வழிபாடு ஞானம் புகழளித்துச்
சூழுந் தமிழ்கதி மெய்ஞ்ஞான வாழ்க்கைச் சுகந்தருமே[2]

மேலாந் தமிழ்மூன்று மேவுமுக் கண்ணுக
வேலா[3] வுலகதனை யீன்றளித்தோன்—மாலாக[4]
முச்சங்கத் தும்மிருந்து முன்காத்தா னத்தமிழை
யிச்சங்கத் தும்[5] காப்பா னின்று.

இன்றுந் தமிழின் இசைநா டகத்தினை யேய்ந்[6] தரனார்
மன்றும்[7] புகழ நடித்துயிர் யாவும் வரவழைத்துத்
துன்றும் படிமுத்தி கூட்டுகின்றா னிதைச் சூழ்ந்துலகிர்
சென்றும்பர் போற்றுநந் தில்லையிற் கண்டின்பஞ்
[சேர்மின்களே.

சேர்மின்கள் சங்கமதைத் தேர்மின்கள் செந்தமிழ்நூல்
பார்மின்க ளின்பதனைப் பாருலகில்—வார்மின்கள்
போனாக்கும் வேணிபுனை[8] பூந்தில்லை யிற்றமிழ்த்தென்
பானோக்கி[9] யாடுதலைப் பார்த்து.

பார்த்துத் தெளிந்த[10] புலவோர் தமிழினைப் பாருலகிற்
கூர்த்தமெய் ஞானங் கொடுத்தழி யாப்பதங் கூட்டியருள்
சேர்த்திட வந்தநந் தேசிக னேயெனத் தேர்ந்தகத்தை
யீர்த்திடு மன்பினில் போற்றிமெய்ஞ் ஞானங்க ளெய்துவரே.

எய்திக்[11] கதியளிக்கு மேழ்பவத்தை மாற்றுவிக்கும்
பெய்திக் கனைய[12] சுவைப் பேறருளும்—நொய்திற்

---

[1]உலகைப் பிளக்கின்ற (அழிக்கும்) கடவுள் (சிவபெருமான்). [2]கடவுள் தமிழைத் தரித்து அளித்துத் தருமே எனக் கூட்டுக. [3]ஏலா (ஏற்று). [4]விருப்புடன். [5]இப்பொழுதுள்ள சங்கத்திலு (மிருந்து). [6]பொருந்தி. [7]தில்லை மன்றிலுமுள்ள அடியவர்கள். [8]கட்டப்பட்ட மின்னல்களைப் போன்று காணப்படும் சடையை அணிந்த (இறைவன்). [9]தமிழையுடைய தென்திசையை நோக்கி. [10](தென்பால் நோக்கி ஆடுதலைப்) பார்த்துத் தெளிவடைந்த (அறிவுற்ற). [11]வந்தடைந்து. [12]பெய்யப்பட்ட கருப்பஞ் சாற்றினை ஒத்த.

சகநோக்க[1] வந்தாண்டு சன்மார்க்க மீனா
மிகநோக்கு மன்ணாறமி[2] ழீண்டு.

ஈண்டு பொதுவி னியைந்தாடி யின்றமி ழேந்தியலை
யாண்டு[3] பரன்றிரு வாயினிற் கூறி யணியறமும்
தூண்டு வருமிசை கண்டத்திற் பாடித் துணிபொருளும்
நீண்ட வருட்பத நாடகஞ் செய்தின்பு தேற்றிடுமே[4]

தோற்ற முயிருடலே செந்தமிழு மாரியமும்
போற்றுஞ் சிவஞ்சத்தி போலுமே—ஆற்று
மொழிபலவு மங்கமதே மூள்பிரமன் முன்னா
மொழிசுரர்கள்[5] போலவே முன்.

முன்னாள் முதலிது காறும் மிறைவன் முதுதமிழைப்
பன்னாள் பயின்று நசைதீர்ந் திடாது[6] பலமுறைய
மன்னாய்க் குருவாய் மகவாய்ச் சுராராய் வளர்குறியாய்த்
துன்னா யெழுந்து வதிவா[7] னெனிற்றமிழ் சொல்லுமதே[8]

சொல்லு மாசும் சுடர்காழிப் பிள்ளையுமால்
வெல்லுந் திருநாவன் மேதகையும்—புல்லும்
புறச்சமயக் கோளரியும்[9] போற்றியது தெய்வத்
திறத்தமிழோ வேளையவோ செப்பு.

---

[1] எளிதாக உலகோர் அறிய. [2] பெருமை மிக்க தமிழ். [3] இனிய தமிழ் தந்து நிற்கிற இயலாகிய பகுதியை. [4] அறம், பொருள், இன்பம் இம் மூன்றையும் முறையே இயல், இசை, நாடக வாயிலாக (சிவபெருமான் தன்) வாய், கண்டம், திருவடியால் அடையச் செய்கின்றமை இயம்பப்படுகிறது. [5] பிரமனை முதன்மையாகக் கொண்டு கூறப்படும் மற்ற தேவர்களைப் போன்றன மற்ற மொழிகள். [6] ஆசை யொழியாமல். [7] முறையே சோமசுந்தர பாண்டியர், மாணிக்கவாசகரின் குரு, உக்கிரகுமார பாண்டியர், முருகன், மூத்த பிள்ளையார் முதலிய தேவர்கள், (பாடல் பெற்ற தலங்களில் உள்ள) இலிங்கங்களாய் வந்தமை குறிப்பிடப்படுகிறது. [8] தமிழின் பெருமை கூறுமளவினதோ. [9] ஈண்டு மாணிக்கவாசகர்.

செப்புங் கலைமகள் மாலயன் கந்தன் றிருவுமையுஞ்
செப்புஞ் சுரரு நராரய்த்[1] தமிழைத் தெளிந்தறிவு
செப்பும் பலகவி நூல்களும் பாடிச் செகதலத்திற்
செப்புஞ் சிவனருள் சேர்ந்தின்ப மாதைத் திளைத்தனரே.

திளைக்கும் தமிழே சிவமா[2] முமையாள்
திளைக்கும் வடமொழியே தேரில்[3] —திளைக்குமரன்[4]
வீடளிக் கவம்மை விருப்பளித்தல் போலி[5]வையும்
வீடளிக்கு மாடளிக்கும் வித்து[6]

வித்தாந் தமிழிற்கும் வடமொழி மாநிற்கு மேதினியிற்
சத்தா[7]முவமை யுயிருடல் சூரியன் சந்திரனே
டித்தா ரணிதந்தை தாய்[8]சிவஞ் சத்தி யெழில்வலக்கண்
முத்தா ரிடக்கண் சிரமுட லாக மொழிந்தனரே.

மொழிந்தாற் பயனென்ன மூதறிவோய் முன்ன
மிழிந்தார் மதப்போருக் கெய்த்து—ளழிந்து
மறைந்த மறையோ[9]மலைந்தவரை மாய்ந்துள்
நிறைந்த தமிழ்க்கு நிகர்[10]

---

[1]புகழ்ந்து சொல்லப்பட்ட கலைமகள் ஔவையாகவும், மால் நம்மாழ்வாராகவும், அயன் திருவள்ளுவராகவும், முருகன் சம்பந்தராகவும், உமை அங்கயற்கண்ணியாகவும், ஆலாலசுந்தரர் போன்ற தேவர் மனிதராகவும், பிறந்து பாடித் தமிழில் திளைத்தமை கூறப்படுகிறது. [2]மிதமிஞ்சுகின்ற தமிழே சிவமாகும். [3]ஆராய்ந்து பார்க்கின் பொருந்துகின்ற வடமொழியே உமையாகும். [4]பேரின்பத்தில் திளைக்கும் சிவபெருமான். [5](விரும்பப்படுகின்ற இம்மை) இன்பங்களைக் கொடுத்தல்போல. [6]வீடுபேற்றினையும் செல்வங்களையும் கொடுக்கும் (இரு) விதைகள். [7]பொருட் செறிவுடைய. [8]இவ்வுலகிலுள்ள தந்தைதாய். [9]முன்ன மிழிவடைந்து மன்மதனது போரில் (அகப்பொருட் சுவையில்) இளைத்து உள்ளமுடைந்து மறைந்த வேதமுடைய சமக்கிருதமோ. [10]எதிர்த்தவரைக் கொன்று உள்ளம் நிறைகின்ற தமிழுக்கு நிகராகும்.

நிகரி லுயிருக் குடலோ நிகர்க்கு நிகழ்கதிர்க்குப்
பகரு மதிநிக ராமோ சிவற்குப் பரைநிகரோ
பகரில் புருடர்க் கெதிரோ மகளிரிப் பூமொழிக[1]
டிகழுந் தமிழுக் கெதிரோ புகலுமின் தேர்ந்துணர்ந்தே.

புவிவாழ்க வந்தணர் பொன்மறை வாழ்க புகழ்பசுவி
னவிவாழ்க வாவுறு மைந்திவன் வாழ்க வருந்தமிழ்கேள்
செவிவாழ்க வித்தகச் செந்தமிழ்வாழ்க சிதம்பரம்வாழ்
கவிவாழ் மணிமொழி வாசகன் சங்கமுங் காமுறவே.

—தருமை சண்முகத்தம்பிரான் சுவாமிகள்[2]

6. [பாரொடு விண்ணாய்ப் பரந்த எம்பரன் பன்முறை பயன் படுத்தியது பைந்தமிழே என்பதைப் பெரிய புராணம், திருவிளையாடற் புராண நடைமுறைகளிலிருந்து வரிசைப்பட விளக்கி வழுத்துரைத்து தேவ தேவராலேயே போற்றப்பட்டுள்ள தெய்வத் தன்மையைத் தேர்ந்துய்ய உதவுவது இவ்வரியபாடல்]

சிவபெருமானும் செந்தமிழும்

ஊரும் பேரும் உருவுமில் லாதவன்
ஊரும் பேரும் உருவமுந் தாங்கி
ஆதி சைவ அந்தண விருத்தனாய்
நாவலூ ராளியின் நறுமணந் தடுத்த
ஆவண மெழுத்தும் அந்தணர் முன்னர்ப்
பேசிய பேச்சும் பெருந்தமிழ்ப் பாடையே
பித்த னென்றே பீடுறப் பாடென
அத்தன்மெய் யருளுட னுரைத்தது தமிழே
சித்தவடமெனுந் திருமடா லயத்தில்
விரட் டானொரு விருத்தவே தியனாய்

[1] இப்பூவுலகின் மொழிகள். [2] இவர் தருமை ஆதீனத்து அண்மைக் கலைப் புலவர்களுள் ஒருவர்; தொண்டை மண்டல முதலியார் மரபினர்; திருத்தருப்பூண்டி அருகாமையிற் பிறந்தவர்; தில்லையில் நீண்டகாலம் வசித்தவர் ஆவர்.

மலர்ப் பதஞ்சூட்டி மலர்ந்ததுந் தமிழே
அம்பலத் தாடு மண்ணலெம் பெருமான்
ஆரூர் வாவென் றழைத்ததுந் தமிழே
சுந்தரா நினது தோழன் யானென்று
வன்மீக நாதர் மலர்ந்ததுந் தமிழே
பரவையர் விவாகப் பண்பும் பின்னர்த்
தூது நடந்துபோய்ச் சொற்றதுந் தமிழே
திருமுது குன்றம் செல்வழி ஏதெனக்
கூடலை யாற்றூர் கொணர்வழி கூறி
மறையவர் கோலம் மறைத்ததுந் தமிழே
திருக்குரு காவூர் செல்லும் வழியில்
பிராமண வடிவம் பீடுறத் தாங்கி
நீரும் சோறும் நிழலு மமைத்துப்
பசிதணி வித்த பாடையுந் தமிழே
திருக்கச் சூரிலே திருவமு தருத்த
ஐய ருருவொடு மந்தணரிலந் தொறும்
ஓட்டில்யா சித்தங் குரைத்ததுந் தமிழே
சங்கிலி யார்பாற் றழைத்ததுந் தமிழே
ஐயா றுடைய வடிகளோ வென்னக்
கன்றொன் றழைக்கக் கதறிய பசுப்போல்
ஓல மென்றிவ் வுலகெலாங் கேட்ப
உரைத்த மொழியு மொண்டமிழ் மொழியே
தில்லையில் வாழ்ந்த திருநீல கண்டர்
ஓட்டினை ஒளித்தங் குரைத்ததுந் தமிழே
இயற்பகை மனையி லிசைத்ததுந் தமிழே
அமர்நீதி பாலங் கறைந்ததுந் தமிழே
மாறன் விருந்து வார்த்தையுந் தமிழே
கண்ணிடந் தப்பிய திண்ண னாரை
நில்லு கண்ணப்ப நில்லுகண் ணப்பஎன்
னன்புடைத் தோன்றல் நில்லுகண் ணப்பஎன்
றடுக்குத் தொடரா யழைத்ததுந் தமிழே
தூசினை யொலிக்கும் நேசர்பாற் சென்று
ஆடை யருளியங் கறைந்ததுந் தமிழே

தாதை தாளெறிந்த சண்டே சுரர்க்குத்
தாதைநா மென்று சாற்றலுந் தமிழே
திருப்பைஞ் ஞீலியிற் செல்லும் வழியிற்
காவுங் குன்றும் கடிதி னமைத்தே
ஆற்றுணா வருத்தி யப்ப மூர்த்தியின்
இளைப்பை யகற்றியங் கிசைத்ததுந் தமிழே
வடகயி லாய மாட்சியைக் காண
வழிகடை கொண்ட வாக்கின் செல்வர்
உடல் குறைந்தாலு முளங் குறையாமல்
முந்துறுங் காலை முனிவர் போற் றோன்றி
இன்னும்பா மாலை யேற்கவே யுன்னி
ஐயா றதனி லத்தகைக் கோலங்
காட்டுவே மென்ற கருணையுந் தமிழே
அம்மையு மத்தனு மல்லா வொருவன்
புனிதவதி யெனும் புண்ணிய வதியை
அம்மே வாவென் றழைத்ததுந் தமிழே
திருச்செங் காட்டிற் றிருவடி தோய்வுற
வைரவக் கோலம் வளம்பெறக் கொண்டே
பிள்ளைக் கறியுணும் பேச்செலாந் தமிழே
திருவெண் காடர் செய்தவப் பேறாய்
மருத வாணர் மகனென வளர்ந்தே
பதினா றாண்டு பயின்றதுந் தமிழே
தாயுந் தந்தையுந் தனயரு மாகிய
மூவரும் மதுரையில் முறைபுரி நாளில்
வழங்கிய மொழியெலாம் வண்டமிழ் மொழியே ‡
தென்னன் குமரன் திருமுடி தனக்கு
நன்மணி வணிகனாய் நவின்றதுந் தமிழே
எல்லாம் வல்ல சித்தராய் மதுரையில்
வல்லமை காட்டி மலர்ந்ததுந் தமிழே

---

‡ "வெள்ளிமால் வரைச் சிவனவன் மனையொடும் வேற்கைப், பிள்ளை தன்னொடு மானிடவுருக் கொடுபேணிக், கொள்ளவல்ல செந்தமிழ் வளராடு," எனத் தண்டபாணி சுவாமிகள் கூறுவதும் இதுவே,

ஆசான் மனைமே லாசையோ னங்கம்
வீசி யெறிந்த மேன்மையுந் தமிழே
மீனவன் முன்பு மெய்க்காட் டிட்டே
யூனமில் பரியிவர்ந் துரைத்ததுந் தமிழே
மைவிழி யாராம் வணிகப் பெண்கள் பாற்
கைவளை விற்றுக் கரைந்ததுந் தமிழே
மதுரையின் வடக்கு வாயிலாற் சோழனைக்
கதிபெறக் காட்டிய கருணையுந் தமிழே
தண்ணீர்ப் பந்தர் சயம்பெற வைத்தே
யுண்ணீ ரருத்தியங் குரைத்ததுந் தமிழே
பொன்னனை யாள்தம் புகழ்மனை புகுந்தே
தன்னிகர் வாதஞ் சமைத்ததுந் தமிழே
மாம னாகவே வழக்குரை யாடித்
தேமெனப் பேசிச் செயித்ததுந் தமிழே
விறகு சுமந்து விற்றதுந் தமிழே
பாணர் தனக்கும் பகர் தருமிக்குந்
திருவாய் மலராச் செழித்ததுந் தமிழே
மண்ணைச் சுமந்து மாற னடித்த
புண்ணைச் சுமந்து புகன்றதுந் தமிழே
ஐயா றதனிற் சைவனா யெழுந்தே
வழக்குரை யாடி மலர்ந்ததுந் தமிழே
இன்னுமெம் பெருமா னிவ்வுல கத்தினில்
ஆற்றிய ஆடல் அனைத்தையும் ஓரின்
செந்தமிழ்ப் பெருமை செப்பவும் போமோ!
இவ்வாறாய தெய்வ நன் மொழியைச்
சின்னாட் பல்பிணிச் சிற்றறி வுடையரிற்
கலியெனக் கூறுங் காலக் கொடுமையால்
கற்கவுங் கேட்கவுங் கருதா தந்தோ
சோறது கொண்டு பிற லடைக்கும்
இம்மைச் சுகமே மெய்ம்மைச் சுகமென
வேற்றுப் பாடையை விரும்பிக் கற்றே
அந்நிய நாட்டினில் அவதரித் தவர்போல்
இன்றுதான் கப்பலில் இறங்கினாற் போலப்

பேசவும் எழுதவும் பிரசங்கம் புரியவும்
பழக்க மில்லையெனப் பெருமிதம் பகர்வர்
தாயை மறந்தவர் தானுறுங் கேடெலாம்
இவர்களு மடைவரென் றியம்பவும் வேண்டுமோ
ஆதலா லினிமே லாகிலுந் தமிழாம்
பெற்ற தாயைப் பேணுவோ ராகி
உய்யுமின் உய்யுமின் உய்யுமின் னீரே

—ஸ்ரீ. சதாசிவம் பிள்ளை[1]

7. [பெயர்பெற்ற கந்தரலங்காரம் எனுந் தமிழ் நூலை ஒட்டித் தமிழின் அணி நலங்களை விளக்குவதும், தமிழில் நடைபெற்றுள்ள பலப்பல தெய்வச் செயல்களை வேறெங்குங் காணக் கூடாவகையில் குறிப்பிடுவதும் இவ்வரிய தமிழலங்காரம் ஆகும். கண்ணைமூடிக் கொண்டு ஆரியமே மேம்பட்ட மொழியெனக் கதறிக்கொண்டே யிருக்கும் கைதவர்களுக்கும் நாம் கடமைப்பட்டுள்ளோம் என்பதற்கு ஐயமில்லை; ஏனெனில் அவர்களாற்றான் இவ்வினிய நூல் நமக்குக் கிடைத்துள்ளதாகும்; இன்னும் அவர்களே தமிழ்ப்பற்றைவளர்க்கத் தூண்டுகோலாகவும் விளங்கி வருவதும் கண் கூடு].

இமிழலங் கார[2] மதநி ரருவிக ளெப்பொழுது
முமிழலங் காரத் தலைக்கண நாதனை[3] யுன்னுகின்றேன்

---

[1]இவர் தஞ்சையை அடுத்த பூண்டியிற் பிறந்து திருவாவடுதுறையில் கல்வி பயின்று புலிக்கண்ணி, மறலிவிடுதூது முதலியன பாடியவராவர். நாகப்பட்டினத்தில் வாழ்ந்து தமிழாசிரியராயிருந்து கொண்டே நீலலோசனி எனுஞ் செந்தமிழ் வாரத்தாள் பல ஆண்டுகள் நடத்திவந்தனர். இராமநாதபுரத்தரசர் பாஸ்கர சேதுபதி, திருவாவடுதுறை ஆதீனத்து அம்பலவாண பண்டார சந்நிதி முதலியோரால் பாராட்டப்பெற்றவர். சொற்பொழிவு ஆற்றுந்திறல் மிக்கவர். சேற்றூர் அவைக்களப் புலவர், மு. ரா. கந்தசாமிக் கவிராயர், பதிப்பித்துள்ள தனிச் செய்யுட் சிந்தாமணியில் இவரது தனிப் பாடல்களுட் சிலவற்றைக் காணலாம். திருவாவடுதுறை மடத்தாரால் துறவு நிலை அடைந்து 1934ல் காலஞ்சென்றார். [2]ஒலிக்கின்ற (அழகுடைய). [3]கணநாதர்களுக்கு எல்லாம் தலைமைவாய்ந்த மூத்த பிள்ளையாரை.

சிமிழலங் கார முலையார் மொழியினுக் தித்திப்பதாங்
தமிழலங் காரக் கவிநாறு நன்கு தருவதற்கே.

நூல்.

செந்தமி ழேயுயர் வென்று முன்னுளொரு சிட்டெனக்குத்
தந்தனன் கந்தன் தவளமின் சாட்சி சரதங்கண்டீர்[1]

[1]வெள்ளை (க்கலையுடுத்த) மின்னற் (கொடிபோன்ற இடையுடைய கலைமகள் (போன்ற பெண் அதற்குச்) சான்று, இது உண்மையாகும். இவ்வாறு முருகவேள் சீட்டுக்கொடுத்த வரலாற்றை இப் புலவர் பாடியிருப்பதாவது :—(அ) ஊரூர் தோறும் பலவடியா ருடன்போய்ப் பூசித் தமுதுண்டு..., காரூர் பொழில்வே லூரினிற்போய் வசித்துச் சிலநாள் களிப்புற்றேன். (ஆ) அவ்வூர்ப் பதிகந் திருப்புகழ்ப்பாட் டமுதச் சித்தர் துதிமுதலாத், தெவ்வூ ரொழியு நிமித்தமிகச் செப்பியுறக்கேட் டிருபுலவர், செவ்வூழ்ப் பனவன்I வேளாள னென்னுங் குலத்தார் தேடிவந்து, வெளவூ கத்தால் வடமொழியே வலிதென் றென்பால் வாதித்தார். (இ) வேதம் பிறந்த தநிலென்றார் மேட மருந்தத் தமிழ்வேதத், தோத விலையென் றுரைத்தேனக் கரவோ பத்த தனதென்றாII, ராத லெகர வொகரந்தா னதனி னிலையோ வெனக்கேட்டேன்III, வாதமுடிந்த நிலையிரவு மாறிப் பகலும் வந்ததுவே. (ஈ) முருகப் பெருமான் முழுதுணர்ந்த புலவனெ னுஞ்சொன் மூன்னியதா, விருகட்சியுமொத் தவன்புனைவே விடத்திற் கேட்போ மெனத்துணிந்தாங், கொருபக் கஞ்சொ லிரண்டுமொத்த தொன்றுங் காலங் குலநாடுமருவு மானம் பகர்நான்கு மாமேழ் சீட்டுIV வரைந்ததன்முன். (உ) போட்டா ருடனங் கொருவனைவிட் டெடுக்கச் சொன்னார் பொருகணைவேல், வாட்டா னெனுங்கட் சிறுமடப்பெண்*

Iநல்விதியுடைய பார்ப்பான். IIஎழுத்துக் குறைவுடையது தமிழ் என்றார்—க வர்க்கம், ச வர்க்கம் முதலியன இல்லாததால். IIIஎ, ஒ என்னும் ஈரெழுத்தும் சமக்கிருதத்தில் இல்லாதது குறிப்பிடப்படுகிறது. IVஎழு சீட்டுக்கள் எழுதப் பட்டதாவன :—தமிழே உயர்வுடையது, சமக்கிருதமே உயர்வுடையது, இரண்டு மொத்தது, காலம், குலம், நாடு, மானம் ஆகிய நான்கு வகைக்கு ஏற்ப மேம்பாடு குறிப்பது; பெரும்பாலும் முற்காலத்தினாலும், அந்தண குலத்தினாலும், வடநாட்டாராலும், தென்னாட்டில் சிலர் அபிமானத்தாலும் சமக்கிருதம் உயர்வாகக் கருதப்படுவதை விளக்கவே இவ்வாறு எழு சீட்டுகள் போடப்பட்டன. * இதன் தொடர்ச்சி அடுத்த பக்கத்தில் உள்ளது.

சந்தனக் குன்றின் முனிக்கோன்மற் றொன்றைச் சரி
[சொலினு[1]
முந்தறி வற்றன னென்றே துணிந்து மொழிகுவனே. (1)

தென்பாக மேவல மென்று வடமொழிச் சீருணர்ந்தோர்
அன்பா றுரைத்திடக் கேட்டுந் தமிழ்ச்சுவை யாய்ந்தவர்நேர்
வன்பார் மடமை மலிவா லதனை வலத்தினதாம்
மென்பாரிம் மாற்றமென் கொல்லோவென் டாமரையேந்
[திழையே[2] (2)

---

வந்தேயெடுக்க வேண்டுமென்றேன், மாட்டாரோடி யழைத்துவந்தார் மணிப்பொற் பணியுங் கலையுமணிந், தேட்டார் தவளக் கமலமிசை யிருப்பா ளிவளே யெனுமாறே. (௬) உற்றுத் தமிழே யுயர்ச்சியெனு மொருசீட் டெடுத்தா னுடனவர்கின், பற்றுக் குரிய மூர்த்திநின்பாற் பகர்ந்த தென்னூர் பயிலுத, மற்றுக் கிடந்த பொருளெனக்கே சொந்த மான தருமை[1]யெனச், சொற்றுச் சீட்டைக் கண்ணிலொற்றித் தலை மேற்றரித்துத் துய்த்தப்பால். (௭) சீட்டுளிருந்த மொழியீற்றிற் றிகழு மருமைத் திருப்புகழோர், பாட்டும் வரைந்து தமிழலங்கா ரமும்பின் பகர்ந் தேன்". இத்திருப்புகழின் முடிவு:—தனிவாச முற்றதென்ற லாற்றற் படைத்த, பொதியாச் சலத்திலன்று தோற்றிப் பழுத்த, தமிழே யுயர்ச்சி யென்று சீட்டுக் கொடுத்த—பெருமாளே.

[1]அகத்தியரே சமக்கிருதம் மேலானதெனக் கூறினும். [2]வெண்தா மரை மீது வீற்றிருக்கின்ற கலைமகளே! உனது தென்பாக (மாகிய தமிழ்) வலக்(கண் எனச்) சமக்கிருதப் புலவோரே (உன்னைக் கிழக்கு நோக்கி வீற்றிருக்குந் தெய்வமாகக் கருதி) அன்புடன் கூறுவதைக் கேட்டிருப் பினும் தமிழறிஞர் சிலர் வலிமை மிக்க அறிவின்மைப் பெருக்கால் சமக் கிருதத்தை வலமெனக் கூற முற்படுகின்றனரே! இதன் உண்மை எவ் வாறு? நீயே சொல்வாயாக! இதுவே முன் பக்கம் 2ல் வடமொழி... மதியுடையார்" எனக் கூறப்பட்டிருக்கின்றது.

[1]நாதத்திற்கு அப்பாலான பொருள் எனக்கே சொந்தமானது அரியதா கும். (தமிழே உயர்ச்சி எனுஞ் சீட்டை எடுத்துக் கொடுத்ததால்)

வடகலை தென்கலை யென்னும் வழக்கு வயிணவத்தின்
இடமல தில்லை யிரண்டு கலையு மியற்றிருவர்
தொடர்பொழு தேத்தலம் மூர்த்தியை யேயொன்று சூழ் [கருமம்
படர்தரும் பத்தியொன் றுமித னாற்றரம் பார்த்துய்ம்மினே[1]

நான்முகன் தக்கன் முதலோ ரனேகர் நவின்றவட
நூன்முழு துங்கொலை வேள்வியைப் போற்று நுடங்கரிய
வேன்முனைக் கண்ணௌவை[2] வள்ளுவ னாதியர் விண்ட [தென்னூல்
ஊன்முழுப் பாவ மெனவே யடிக்கடி யோதிடுமே (4)

வாணிமின் னாள்வலக் கொங்கையொப் பாந்தமிழ் மற்று [மொரு
மாணிளங் கொங்கையொப் பாமா ரியமென்ன வாய்வந்திடார்
கோணிய வெண்பிறைச் சென்னியி னான்மணக் கோலந்தன் [னைப்
பாணினி தான்புரந் தானோவென் பார்முற் பதைப் பவரே[3] (5)

---

[1]வடகலை, தென்கலை எனக்கூறப்படுவது திருமாலியத்தில்(வயிணவத்தில்) அன்றிவேறில்லை; இவ்விரு கலைகளையும் பின்பற்றுபவர்களும் வடகலை வாணர் (சமக்கிருதத்தால்) திருத்தலங்களில் (யாகாதி) கருமங்களையும், தென்கலைவாணர் (தமிழால்) மூர்த்தி (தெய்வ உரு) இடத்து அன்பையும் (பத்தியையும்) பெருக்குகின்றனர்; இதனால் இவ்விரு கலைகளின் (மொழிகளின்) உயர்வு தாழ்வு கண்டு வீடுபேறு அடையுங்கள். [2]வளையாவேலின் முனைபோன்ற கண்ணுடைய ஔவை. [3]மின்போன்ற இடையையுடைய கலைமகளது வலக்கொங்கையைத் தமிழும் இடக்கொங்கையைச் சமக்கிருதமும் ஒக்குமெனக்கூற முன்வராததைக்கண்டு பதைப்படைபவர் (தமிழன்பர்) கூனற்றிங்களைச் சூடியவரின் (சிவபெருமானின்) திருமணத்தினை (எல்லாத் தேவர்களுந் திரண்டு வந்ததாலான பழுவால் உலகம் சாய்ந்து அழியாமல், காப்பாற்றியது (வடமொழி இலக்கண ஆசிரியராய) பாணினியா என்று கேட்பர். அவரன்றித் தமிழ் முனியாகிய அகத்தியரே அவ்வாறு காப்பாற்றியதை அடுத்தபாடல் விளக்குகிறது.

எவ்வகைத் தேவரு மாதவர் தாமு மிமயமென்னும்
அவ்வரைப் பாலுற்ற நாளவ ராழியி லாழ்ந் தொழியாது
ஒவ்வருஞ்[1] செந்தமிழ்த் தாயா முனிவ னுயர்பொதியைச்
செவ்வரை மேல்வந்த வாறெந்த நூல்களுஞ் செப்பிடுமே. (6)

விந்தமென் றுள்ள மலைமீ தெழுந்து விபுதராழச்[2]
செந்தகைச் சூரியன் தேரோ டிடாவிதஞ் செய்தவங்காள்
பைந்தமிழ்த் தேசிக னேவட நூற்றுணைப் பாணினியோ
வந்தடங் கப்புரிந் தான்வேத மாமுனி வாய்[3]சொல்லுமே. (7)

இந்திரன் றன்னொடு வானவர் தாமுநல் லின்பமெய்த
வெந்திறற் றானவன் றன்றவம் பாழ்பட வேலையுண்டு[4]
பிந்தியவ் வாறு நிறைவாகவிட்ட பிரான்றமிழ்ச்சீர்
செந்திருக் கேள்வனு மீசனுக்[5]தேர்ந்துபின் சென்றனரே[6]

கணிவண்ண னென்றொரு மன்னவன் சிந்தை கலங்கக்கச்சி
மணிவண்ணன் றன்றிருக் கோவில்விட் டேகிவரச்
[செய்ததும்[7]
பணிவண்ணச் செஞ்சடைச் சொக்கர்முன் போய்வரப்
[பண்ணியதும்[8]
அணிவண்ண மெட்டோடு[9]தென்றல்வெற் பின்ற அருந்
[தமிழே (9)

---

[1] இணையில்லாத [2] தேவர் வருந்த [3] வியாசர் திருவாக்கு [4] விருத்திராசுரன் இந்திரனது வச்சிராயுதத்திற்கு ஆற்றாது ஒடிக்கடலின் அடியில் ஒளிந்து கொள்ள அவனைக் கொல்வதற்காக இந்திரன் அகத்தியரை வேண்டினன் அவர் இறைவனது ஊழிச் செந்தீ வடிவினை மனத்துட்கொண்டு அக் கடலை உளுந்துபோல் சிறியதாக்கி உட்கொண்டார் [5] திருமாலும் சிவ பெருமானும் [6] இதன் விரிவை அடுத்த பாடல் விளக்குவதாகும். [7] திருமழிசை ஆழ்வார் வேண்டுகோளுக்கிணங்கித் திருமால் பாம்புப் படுக்கையைச் சுருட்டிக்கொண்டு சென்றது குறிப்பிடப்படுகிறது. [8] இடைக்காடன் பிணக்குத் தீர்த்த திருவிளையாடல் [9] எண்வகை சந்தம்:- தத்த, தாத்த, தந்த, தாந்த, தன, தான, தன்ன, தய்ய.

தண்டமிழ் வாசங் கலந்து குலாவுந் தனித்தென்றலும்
ஒண்டகை யாரியச் சீர்தோயும் வாடையு மூனிலொன்றி
மண்டலத் தோர்க்குத் தரும் பயன்றன்னை மதித்தறிந்து
கண்டவ யித்தியர் வாய்மேன்மை தாழ்மையைக் காட்டிடுமே[1] (10)

பல்கோடி மங்கையர் கண்டுகண் டேங்கும் படியொருக்காற்
புல்கோலத்[2] தீசன்முன் னூரிற் போற்றும் புலவனுள்ள
மல்கோகை[3] வேண்டி யொருவிலை மாதெதிர் வாய்திறப்ப
வெல்கோ மளச்சுவை நீங்காத தாகும் வியன்றமிழே.[4] (11)

மந்தரக்[5] கொங்கைப் பாவைதன் கேள்வனு மற்றை யராம்
வந்தனக் காரரு[6] மின்புறு மாறு மறைபயினு
மந்தணச் சேயை யவிநாசி யூரி லழைத்ததெண்ணிற்
சந்தனக் குன்றின் றலைமேற் பிறந்த தமிழ்த்தெய்வமே[7] (12)

எள்ளாத வாதிசை வக்குலத் தோர்மனை யிற்பிறந்தும்
வள்ளாரும் வேன்மன்[8] மகவாயி னானை வயங்குதமிழ்
கொள்ளா வளவி லடங்காத வின்பங் கொடுத்துப் பின்பு
வெள்ளானை யேற்றிக் கயிலாய மீதுற விட்டதுவே. (13)

அலரோன் புதல்வ ரொருநால்வர்க்[9] காகக்கல் லாலடியிற்
பலநாட் டலங்கண்டு வந்துற்ற மூர்த்தியைப் பன்னுதமிழ்
குலவேந்தர் போற்றும் வழுதியமைச்சன்[10] குறிப்பறிந்து
மலர் பூங்குருந்தை நிழலூடு தோற்ற வருவித்ததே. (14)

---

[1] மருத்துவரின் சான்றும் தமிழுக்கு வாய்த்திருப்பது தக்க அடிப் படையுடன் கூடியதாகவே இருக்கவேண்டும். [2] தாருகாவனத்து முனிவ ரின் மனைவியர் கண்டு மயங்கும்படி சென்ற பிச்சைக்கோலம் [3] பெருகும் மகிழ்ச்சி. [4] பரவையாரிடம் தூது சென்று பேசும்படி இறைவனை வென்ற அழகுடன் கூடிய சுவை, மேன்மை பொருந்திய தமிழைவிட்டு நீங்காததாகும். [5] மந்தரமலையையொத்த. [6] அந்தணர். [7] பொதியை என்னும் மலையில் பிறந்த தமிழ்த் தெய்வமே அதற்குக் காரணமாகும். [8] (நரசிங்க முனையர் என்னும்) வள்ளன்மை மிகுந்த வேலாயுதத்தை யுடைய மன்னர். [9] பிரமதேவரின் புதல்வராகிய (சனகாதி) நால்வர். [10] (அரிமர்த்தன) பாண்டியரின் மந்திரி (மாணிக்கவாசகர்).

அன்போங்கப் போற்றுநர் வேட்கை யெளிதி லடைவதெண்ணி
முன்போர் முனிச்சுரன் [1] தந்துள தாக்தமிழ் மூரிவின்ணே
ரென்போடு சென்னியும் பூண்டிமத் தாடி யிரப்பவனைப்
பொன்போலு மேனிப் பரிமீது மேறப் புரிந்ததன்றே[2]. (15)

எவ்வுயி ருக்குமுயிரா நிறையு மிறைவன் றன்னை
வெளவும் மொருவன் றமிழ்த்துதிக் காக்கிழ வந்தியினுள்
ஒவ்வும் வடிவு மெடுத்துமண் கூடையு டன்சுமந்து
வெவ்வர கம்பொரு வேத்திரத் தாக்கு மிலேந்தனனே.[3] (16)

வண்மைப் பராசன் மகன்சொலேத் தாமறை வாசகத்தை[4]
யண்மைப் புதல்வன் கரத்தால் வரைவித்த வண்ணலரு[5]
ளுண்மைத் தமிழ்த்திரு வாசகப் பாட லொருங்கெழுதிப்
பெண்மைக் குவகை தருமரங் கூடுறப் பேணினனே.[6] (17)

---

[1]அகத்தியர். [2]வலிமை பொருந்திய வானவர்களின் (உடல்) எலும்பு களையும், தலை (எலும்புகளையும் மாலையாக) அணிந்து சுடுகாட்டிலாடி பிச்சை யெடுக்கின்ற (இழிசெயலுடைய சிவபெருமானைத் தமிழானது) அழகிய உடலமைப்புடைய குதிரைகளின் மீது ஏறக்கூடிய (பெருமை மிக்க செயலைப்) புரியச் செய்திருக்கிறதல்லவா? (நரி பரி யாக்கிய திருவிளையாடல்). [3]எல்லா உயிர்களுக்கும் உயிராக (இரண்டறக்) கலந்து நிற்கும் (பெருமையுடைய) இறைவனை அடைந்த (மாணிக்க வாசகரின்) தமிழ்ப் போற்றல்களுக்காகத் (தாழ்ந்த நிலையிலிருந்த) வந்தி யென்னும் ஓர் கிழவி ஒப்பக்கூடிய (கூலி)யாள் உருவமுங்கொண்டு, மண் கூடையையும் சுமந்து, வெம்மையான பாம்பை ஒத்த பிரம்படியை யும் ருடிக்கொள்ளும் (தாழ்மையடையும்படி) சேர்ந்ததல்லவா? [4](தவ) வளமுடைய பராசன் மகனாகிய (வியாசன்) சொன்ன ஐந்தாம் வேதமாகிய மாபாரதம் [5]அருகிலுள்ள மகனாகிய மூத்த பிள்ளையார் கையால் எழுது வித்த (சிவ)பெருமான் [6]பெண்மைத் (தன்மைக் கிருப்பிடமாகிய சிவ காமசுந்தரி) மகிழும் தில்லைச் சபையில் ஏறும்படி செய்தனர்.

மன்னுந் தமிழிற் றுதிசெய்த மாணிக்க வாசகரும்
பன்னும் பெருமை யுணர்ந்தேத்துங் கிர்த்தனைப் பாவலனுங்[1]
துன்னும் கதிமற்றை யோரடைந் தாரெனச் சொல்லுங்கொ
[லோ
வுன்னுந் திரைக்கடற் பைந்தானை சூழ்தரு மொண்புவியே.(18)

சீகாழி யூர்த்தடம் பொய்கைக் கரையிற் சிறிதழுத
வாகாருஞ் சேய்க்குமை நல்கிய பாலின் மதுரமன்பர்
சோகாந்த காரங் கெடத்[2]தமி ழோடு துலங்கிற்றன்றி
யேகாரத் தின்குறி லில்லாக் கலையோ டிலங்கிற்றின்றே.[3] (19)

வேத வியாசனைக் கைதூக்கி யிங்கு விடப்பகர்மெய்ப்
போத முடைச்சங்க ராசா ரியனும்[4] பொருவிலருண்
மாதரி பாலுண்ட செவ்வாய்க் கவுணியன் வண்டமிழ்ச்சீ
ரோதலுற் றுன்வட சொல்லா லென்றுனன் குணர்ந்துய்ம்
[மினே.[4] (20)

அரக்க னமைத்துள்ள வரந்தரத் தோர்க ளதைப்புகழ்ந்தேத்
திரக்கலைக் குந்தல்லி தானு ரியமென்பர்[5] செப்பு சொல்லின்

---

[1]முத்துத்தாண்டவர். [2](ஞானம் பாலோடு குழைத்து ஊட்டப் பெற்றதாதலின் (அதன்) சுவை அன்பர்களின் துயரமாகிய இருளை நீக்க [3](தனது அரிச்சுவடியில்) எகரத்தைப் பெறாத மொழியோடு (சமக்கிருதத்துடன்) விளங்கவில்லை. [4]வேத வியாசர் (திருமாலே பரம்பொருள் எனக் கூறி வலியுறுத்தத் தூக்கிய கையை நந்தியெம்பெருமான் தணிக்க முடியாது தவிக்கச் செய்ததால் நல்லறிவு பெற்று சிவபெருமானே பரம்பொருளெனக் கூறிய பின்) தணியச்செய்த உண்மையை உணர்ந்த ஆதி சங்கரர். [5]சமக்கிருதத்தில் (தமிழ்க் குழந்தையும் மிகச் சிறு வயதில் பாடியதைப் புகழ்ந்து) கூறியிருப்பதைக்கொண்டு (தமிழின் பெருமையை) உணர்ந்து நல்வழிக்கு வாருங்கள்,

மரக்கவி னார்பொதி யைத்தமிழ்ச் சாடை மலியுமதா
லராக்கரு ணைத்தந்தை தானிதென் றோர்ந்திட் டுரைக்கை
[நன்றே.[1] (21)

புகலெனுஞ் சொல்லினைப் போலெனச் சொல்வது போற்பல
[சொல்
லிகலிந்துத் தானியுஞ் செந்தமி ழிற்கொண் டியம்புகின்றா
னகனிலத் துள்ள கலையாவுந் தென்சொல் லதுவுமெதிர்
திகழ்வட சொல்லுங் கலந்தே விளங்குந் தெரிந்திடினே.[2] (22)

கும்பன் குதத்திற் றமிழ்தோன் றிற் றென்னக் குளறுகின்ற
வம்பருங் கொன்றன்றி வாழா மிலேச்சர்தம் வாயுமிழ்ந்
தம்பல மேயொக்கு மாரிய மென்னுஞ் சழக்கர்களும்
வெம்பகை யாலிகழ் சண்டாளர் தாமென்கை மெய்ம்
மொழியே.[3] (23)

எக்கலை யாது மிறைவனைப் போற்றின ரெண்ணிலர் தா
மெய்க்கவி னார்தமி ழாற்றுதி பாடொரு மென்குருந்திற்[4]

---

[1] இராக்கதனால் (இராவணனால்) இயற்றப்பட்டதாகக் கூறப்படும் மொழி பேசும் தெலுங்கர் (தெலுக்கு உள்பட) எல்லாக் கலைக்கும் தல்லி(தாய்) சமக்கிருதம் என்பர்; அத்தல்லி எனுஞ் சொல்லில் மரங்களால் அழகுறும் பொதியையிற் பிறந்த தமிழின் போக்கு மலிந்திருப்பதால் இத் தமிழே (தெலுங்கிற்கும்) பொருளோடு கூடிய தந்தையாம் என்பதை அறிந்து கூறல் நன்மைதரும். [2]சொல் என்னும் பொருளையுடைய "போல்" எனும் இந்தத் தானிச் சொல் "புகல்" என்னும் தமிழ்ச் சொல்லின் அடியாகவே பிறந்து வழங்கப்படுகிறது; இதுபோல ஆராயப் புகின் இப் பரந்த உலகிலுள்ள எல்லாக் கலைகளும் தமிழும் சமக்கிருதமுங் கலந்தே விளங்குவதை அறியலாம். [3] அகத்தியர் எருவாயில் (ஆசனவாயில்) தமிழ் தோன்றிற்று எனவும் கொல்லாது வாழா (புலாலுண்டே வாழும்) மிலேச்சர், வாயிலிருந்து துப்பப்பட்ட வெற்றிலைப்பாக்கை சமக்கிருதம் ஒக்குமெனவும் கூறுவதெல்லாம் பகைவர் கூற்றாம்; அன்னார் சண்டாளர் என்பது உண்மையே. [4]மெல்லிய குழவிப்பருவத்தே.

கைக்கணி[1] தாளமும் வெண்முத்துப் பந்தருங் காகளமு[2]
மைக்கக ன[3]ந்தரப் பெற்றார்மற் றில்லையிவ் வையகத்தே. (24)

சுட்டவெள் ளென்பின் குடத்தா டிருக்தொரு தோகைகல்
[லாள்
கட்டமு கோடு மயிலைத் தடாகக் கரையில்வர
விட்டது செந்தமி ழேயல்ல வோவன்றி வேறுகலை
நட்டவண் செய்த[4]துண் டேற்சொல்லு வீரிங்கு நன்
[குணர்ந்தே. (25)

கதிர்பூத்துக் காய்த்துதி ரும்பனை காய்த்துக் கனியுடனங்
கெதிர்தோன்றச் செய்ததுந் தீயைவென் றிட்டது மேடெ
[திர்த்தோர்
நதிநீந்தக் காட்டலுங் கூன்பாண் டியனன் னலம்பொருந்த[5]
வதிகோரச் சாரண ரைக்கழு வேற்று மருந்தமிழே. (26)

எத்திசை யிற்கலை யாதாலும் பற்பல ரீசனுண்மைப்
பத்திசெய் தேத்திப் பணிந்தாலுங் காழிப் பனவர்பிரான்[6]
சித்திபல் கோடி விளையாடி நன்மணஞ் செய்தவன்றே
முத்தியைத் தானமிடச் செய்த வான்கலை முத்தமிழே. (27)

வேதங்களி யாவுமொன் றாக்கூடி யீசன் விரைமலர்ப்பொற்
பாதங்கட் கான பலபூசை செய்து பழுதிலருள்
நீதந் துலங்கப்[7] பொருந்துங் கபாடத்தை நீக்கியமைத்
தேதங் களைந்துல கெல்லாம் புரந்துற்ற தின்றமிழே. (28)

---

[1]கைக்கு அணிகலனாக விளங்குகிற [2]எக்காளமும் [3]நீலநிறமுடைய விண் [4]வேற்றுமொழிகளை நேசித்து அங்கே (மயிலையில் இச்செயல்) புரிந்ததுண்டோ? [5]கூன்நிமிரவும். [6]அந்தணர் தலைவன் (திருஞான சம்பந்தர்) [7]அருளோடு கூடிய நீதிவிளங்க (ஆரிய வேதம் அடைத்ததைத் தமிழ்மறை திறந்து வெளிப்படுத்தும் ஞாயம் விளங்க).

கடனீரிற் கன்மிதக் கும்படி செய்து களிறிறுக்கு
மடலியரவுங் குன்ற[1] வடக்கிவெந் நீற்றரை யம்புயப்பூந்
தடமாகக் காட்டி யரவா லிறந்த தனையனையு
முடலோ டெழச்செய்த தன்றோ வொருவன்சொ லொண்
டமிழே. (29)

காணரி தாய கயிலாயக் காட்சியைக் காட்டியெழிற்
சேணகத் துள்ள மடவாரைப் பொன்னைச் செழுமணிதோய்
பூணனந் தத்தைப் புறநீக்கு மார்வம் பொருத்திமுத்தி
மாணடையச் செய்த தன்றோ வொருவற்கு வண்டமிழே. (30)

வருமிக்கு மன்னர்[2] புறங்காட்டத் தாக்கும் வழுதிமன
மொருமிக்கு மின்ப முறக்கிர னெஞ்சக மொல்கவம்பி
லுருமிக்கு தர்க்க மிடுவா ரிலக்கண மூறுபடத்
தருமிக்கு நன்மணஞ் செய்த தொருசெந் தமிழ்க்கவியே.[3] (31)

ஆணவ மாதி மலமூன்றுந் தீர்க்கு மருட்பெருமான்
மாணவிர் வீணை யிசைகேட் டுருகி மதுரைநகர்
காண விறகுஞ் சுமந்தா ளெனவுங் கழறப்பெற்ற
பாணன் கலியறச் செய்ததுஞ் செந்தமிழ்ப் பாசுரமே.[4] (32)

பெத்தானை யென்றும் பிறவாத வீட்டினிற் பேணவருள்
வைத்தாண்ட சிற்றம் பலத்தான் கைச் சீட்டு வரைந்துபெருஞ்

---

[1](இது முதல் 3 பாடல் அப்பர் அருந்தமிழின் ஆற்றலை விளக்குவன) யானையின் சினத்தால் உண்டாகிய வலிமைகெட [2]எதிர்த்து வரும் பல மன்னர் [3]சண்பக மாறனது மனம் பேரின்ப முறவும் நக்கீரரது உள்ளம் நிலைகெடவும், வீண் வழக்கு உரக்கப்பேசுவோர் இலக்கணம் குறைவடையவும், தருமி எனும் ஆதி சைவன் திருமணம் புரிந்து கொள்ளவும் "கொங்குதேர் வாழ்க்கை........" எனுங்கவி செய்தது. [4]விறகு சுமந்து வந்து வேலை ஆள் எனக் கூறப்பெற்ற பாணபத்திரனது மிடிதீர்த்தது "மதிமலி புரிசை..." எனுந்தமிழ்ப் பாடலே.

சித்தாடுங் கொற்றங் குடியாற் கனுப்புந் தினந்தமிழே
யித்தா ரணிக்கலை யெல்லாமு நாணவெதிர் நின்றதே.[1] (33)

எள்ளிற் றயில மெனநிறைந் தான்றன் னிடத்திருந்து
கள்ளிற் சிறந்த மொழிபேசு மங்கை கனசபையிற்
றுள்ளித் தவிப்பவன் வாழ்வடைவான் வந்து தோற்றச்செய்த
துள்ளிற் கருதும் பொருள்காட்டுஞ்செந்தமி ழொண்கவியே[2]

ஆசிப் பசுந்தமிழ்ப் பாமாலை சூட்டுமோ ரந்தணன்றான்
காசிக்குப் போம்பொழு தன்னேன் மகளெனக் காட்சிநல்கி

---

[1]சீட்டு அனுப்பிய நாளில் தமிழ் இவ்வுலகினிலுள்ள எல்லாக் கலைகளும் வெட்கும்படி ஓங்கிற்று. [2]அங்கயற்கண் அம்மை பாண்டியனது அவையில் வந்து விளங்கும்படி செய்தது உள்ளத்துள்ளே கருதிய பொருளை வெளிப்படச் செய்த தமிழ்க் கவியே யாகும். இவ் வரலாறுவது:—ஓர் பாண்டிய மன்னன் நகர் சோதனைக்கு வரும்பொழுது ஓர் பச்சிளங்குழவி அழுது கொண்டே கைகளை வீசித் தன்னைக் கொத்த வரும் காக்கைகளை ஒட்டுவதைக் கண்டு வியந்தான். அதனிடம் இரக்கங்கொண்டு ஆங்குசென்ற ஓர் முதியாளிடம் பொருள் கொடுத்து அதனை வளர்க்கவும் இது பற்றி ஒருவரிடமும் ஒன்றுந் தெரிவிக்காதபடி இருக்கவும் கட்டளையிட்டான்; தன் உள்ளத்திருந்த இவ் உண்மையைத் தெரிவிப்பவற்குப் பரிசளிப்பதாகப் பறைசாற்றினன். வறுமையால் வாடிய தமிழ்ப் புலவர் ஒருவர் அங்கையற்கண்மையை வேண்ட "கண்டாயோ மீனவா கானகத்துக் கள்ளியின் கீழ், வெண்டாழை பூத்து விளக்கெரிய—ஒண்டொடியாள், வாழ்க்கைப் படுமுன்னே மைந்தனையும் பெற்றெடுத்தாள், காக்கைகளை ஓட்டுகின்றகை" எனுங்கவியைக் கூறினள். புலவர் இதனை வரைந்து முடிவில் என்றாள் எனச்சேர்த்துக்கொடுத்தனர். இதனால் அவையினர் முதியாளே இவ்வுண்மை கூறியிருக்கவேண்டுமெனப் பரிசில் மறுத்தனர். புலவர் உண்மை கூறியும் ஒருவரும் நம்பாது இவரை அடிக்கப் புகும்பொழுது புலவர்வேண்ட அங்கயற்கண் அம்மைதோன்றி ஐயம் நீக்கினள். இதனை இந்நூலாசிரியரே புலவர் புராணம், புலமை மரபில் "காம் நிகர் செடியமைக்கட் கவுரி பாண்டியன் முற்செல்லும்—இரவலனிமித்தம் பாடியியம்புமப் பரிசு எய்ந்திட்டான்" எனக்கூறியுளார்.

நேசித் தமுதம் படைத்தா ளுமை[1] யென்னு நீடுபுகழ்
பேசிற் பிறகலைப் பாவாணர் யார்க்கும் பெருந்துயரே. (35)

மாதா வயிற்றிற் பிறந்தவன் றேசட வாயு வென்னுந்
தீதார்ந் திடாமற் சினந்துண வின்றிச் [2]சிறந்துமலர்
வேதாவு மெய்தரும் பேறடைந் தானும் வியன்றமிழாற்
றூதார் துழாய்நிகர் பாடல்செய் தான்பலர் தஞ்சமென்றே[3].

மீனக் கொடியுடை வேல்வேந்தன் கோயில் வியன்முகப் பாந்
தானத்திற் றூக்கிய பைம்பொற் கிழியைச் சகலகலை
ஞானப் புலவருங் கண்டேங்க வேசர்தமிழ் நாவலவன்
வானத் தவர்பன் மலர்தூற்றக் கொய்த வழக்கொன்
[றுண்டே[4]. (37)

---

[1]வேம்பத்தூர் கவிராச பண்டிதர் சவுந்தரியலகரி பாடுகையில் அதிலுள்ள ஓர் பாடல் உமையம்மையைச் சின மூட்டியதால் ஊமையானார். பின் ஓர் அரிய பாடலைத் தரையில் எழுதவே பேச்சளிக்கப்பெற்று பின் பல பாடல்கள் பாடி மகிழ்வித்தார். மலைமகள் யாது வேண்டுமென ஆறுதிங்கள் உனது செங்கையால் உண்டி ஈக என வேண்டினார். பிறகு அவர் காசிக்குச் செல்லுகையில் அவரது ஒரே மகள்போல் வந்து உணவு சமைத்திட்டு உயர்ந்த வளையல்களைப் பெற்றணிந்தாள். அவர் காசியினின்று திரும்பி உண்மை மகள் நோய் வாய்ப்பட்டிருக்கக் கண்டு வருந்திய தாம் காட்சி நல்கிப் பிணி தீர்த்தாள் [2]சட வாயுவைக் கோபித்த சடகோபர் [3]பிரமதேவருக்கு உடலளிக்கும் (தந்தையாகும்) பெருமையுடைய திருமால் நிலையையுற்று, பலர் அடைக்கலமெனக் கருதும்படி அவருக்கு மேலான தமிழால் துளப மாலையை ஒத்த இன்பந் தரும் பாடலை இயற்றினார். [4]ஓர் பாண்டியன் தனது மேலான வாயிலில் ஓர்பொன் முடிப்பைக் கட்டிக் கடவுண் மேன்மை (பரத்துவம்) அறிவித்து அறுத்துக் கொள்ளச் சொன்னான். பெரியாழ்வார் திருமாலே பரம் பொருள் என நாட்டியபோது அம் முடிப்புத் தானே தாழ்ந்தது. திருப்பல்லாண்டு பாடி அறுத்துக்கொண்டார்.

மாமாலை[1] விழிக் கனியிதழ்[2] வாய்கொண்டு வண்டமிழ்ச்
[சொற்
பாமாலை யான்மிகப் பாடிய மங்கைப் பருவமுள்ளாள்
பூமாலை சூடிக் கொடுத்து மளவில் புகழ்புனைந்தாள்
காமாலைக் கண்ணிகர் நெஞ்சுடை யாரது காண்பரிதே[3].(38)

வித்தனைத் தென்று பலர்போற்றும் பல்கலை வெஃகினரும்
எத்தனை யோவித மாத்திரு மாலை யிறைஞ்சிய துண்டு
அத்தனை பேர்களுள் ளாரேனுஞ் செந்தமிழாற் பரவோர்
பத்தனை யுண்டது போலுண் ணு மேன்மை படைத்திலரே[4].

வண்டமி ழாற்றுதி செய்கின்ற சீர்மலி மங்கைமன்னன்
கண்டன யாவுங் கவருங் களவுங் கனத்தபொய்யுங்
தண்டம்வில் வாள்கொடு செய்யுங் கொலையுந் தவப்பயனு[5]
அண்டரு மெய்தற் கரிதாய வீட்டி லமைந்தனனே. (40)

---

[1]பெரிய மாலை (திருமாலை). [2]கொவ்வைக் கனி போன்ற உதடு [3]பெரியாழ்வார் வளர்த்த கோதை தன் தந்தை அரங்கருக்குக் கட்டிய மாலைகளை நாள்தொறும் சூடி ஆடியில் அழகு பார்த்து அரங்கற்கு ஏற்ற அழகிருக்கிறதா எனக் கண்டபின் அரங்கர் அணியும்படி வைத்து விடுவது வழக்கம். பெரியாழ்வார் இதனைக் கண்டிக்க அரங்கர் அவள் சூடியனவே தமக்குகந்தன வென அறிவித்தார். அவ்வாறே சூடிக் கொடுத்து தமிழாற்பாடி அவரையே மணந்தனள். இத்தகைய தமிழ்ப் பெருமையை மஞ்சட்கா மாலைக் கண்ணினர் (பொறாமை யுள்ளத் தவர்) காண்பரிதாகும். [4]திருக் குலத்தாராகிய திருப்பாணாழ்வார் திருவரங்கத் தெல்லையை மிதித்ததற்காக உலக சாரங்க முனிவர் கல்லால் எறிய அப் பிழைக்காக அவரை அம் முனிவர் தோள்மேலேயே தூக்கி வரப் பணித்து அவர் திருமுன் வந்ததும் அமலனாதிப்பிரான் எனும் பாடல் பாடவே அத் தமிழ்ச் சுவை அகத்தடங்காது அவரை அப்படியே விழுங்கியருளினர். [5]திருமங்கையாழ்வாரின் களவு, பொய், கொலை யாவும் தவப்பயனாயது தமிழால்.

ஆலிலை தன்னி லணிப்பாம் பணையி லசோதை யன்னார்
பாலிலங் கேணையிற் றன்வாய் சுவைத்த பதங்களைக்கார்
மாலிக லோகத் தருந்தமி ழான்மிக வாழ்த்து மொரு
நாலியற் பாவலன் வாயும் பருகிட நல்கினனே[1] (41)

பல்கலை போற்றும் வடகலை தென்றற் பருப்பதமுன்
நல்க வருந்தமிழ்ப் பாலிக லெய்தலி னல்விதழி
மல்கணிச் செஞ்சடை யானுந் திருகெடு மாயவனும்
ஒல்கப் புறத்துய்த்து ளார்முன்னர் நின்ற தொலிக்க
வைத்தே[2]. (42)

நணைத்துள்ள வரடை யுலருமட் டோர்கந்தை நல்கியபெண்
விணைத்துயர் நீங்கி மனமெய்தி மானிடர் வேண்டுசெல்வம்

---

[1]தன் திரு வாயாலேயே சுவைக்கப்பட்ட திருவடி விரலைக் கருத்த (மேனியுடைய) திருமால் இவ்வுலகிலுள்ள ஓர் தமிழ்ப் புலவனும் சுவைக்கக் கொடுத்த வரலாறுவது:— திருமங்கையாழ்வார் களவு செய்து திருமாலியருக்கு அமுதூட்டி வருகையில் திருவரங்கரே மணமகன் கோலத்தில் அணி பல அணிந்து வர, வழிமறித்து அணிகளை யெல்லாம் பற்றிக்கொண்டு கால் விரலிலிருந்த மிஞ்சி எனும் அணி கைக்கு வாராமையின் பல்லாற் கடித்துக் கழற்றினர். இவ்வாறு திருவடி படவே அதனால் ஞானமுண்டாகிப் பல பாடலியற்றினர். [2]பல கலைகளைத் தாங்கி நிற்கும் சமக்கிருதம் (பயில்வோர்) தென்றல் காற்றையுடைய மலை (பொதியை)ஈன்ற தமிழைப்(பயில்வோரைப்)பகைத்தலினால், கொன்றை மாலை அணிந்துள்ள சிவபெருமானும் திருமாலும்(தமது திருவிழாக்களில் வலஞ் செயுங்காலை) தமிழை (மறையை) முன்னால் ஓதச் செய்து சமக் கிருத வேதத்தை ஒடுங்கும்படி பின்னர் ஓதிவரச் செய்தனர்.

அனைத்துமெய் தும்படி செய்ததுமன்றி யரசர் கட்காப்
பனைத்துண்டு மூன்று பழந்தரக் கண்டதும் பைந்தமிழே[1].

கோளத்தை முட்டிவளரும் பொதியைக் குவடுவப்பத்
தாளத் தனத்தியர் கொண்டாடு மௌவை தமிழெயினன்
வாளற்றை நாள்வெட்டச் சாய்ந்த பலாப்புவி வானறிய
மீளத் தழைந்து கனியாச் சொரியும் வியன்றந்ததே[2]. (44)

வளப்படு தாமரைப் புத்தேள் விரிக்கு மறை முதலா
மளப்பரும் வேதப் பயனுந் தொகுத்திட் டகில்மிசை

---

[1]ஔவையார் சேர நாட்டிலிருந்து பாண்டிநாடு செல்லுகையில் மழையில் நனையவே ஆங்கு பெற்றோரற்று அண்ணன் மனைவியால் அல்லலுற்று சோளக்கொல்லை காத்திருந்த ஓரினம் பெண் தன் சிற்றுடையிற் பாதி கிழித்துத் தந்தாள். அவள் நிலையை அறிந்த ஔவை மூவேந்தருக்கும் அவ் வன தேவதையின் வாயிலாக ஓலை யனுப்பி வரவழைத்து சிறப்பாகத் திருமணம் செய்து வைத்தாள். அவ் வேந்தர் திரும்பும்பொழுது ஆங்குக் கிடந்த பனந்துண்டை நோக்கி ஓர் தமிழ்க் கவி கூறவே அது அங் கொடியே தளிர்த்துப் பூத்து மூன்று பழந் தந்தது. கடவுட்டன்மை வாய்ந்த அப் பழங்களைப் பெற்று மகிழ்ந்து சென்றனர்.
[2]விண்ணை அளாவி வளரும் பொதியை மலை(யிலுள்ள அகத்தியர்) மகிழும்படி, தாளத்தை ஒத்த கொங்கையை உடைய மகளிர் (செவ்வாய்ப் பிள்ளையார் நோன்பியற்றி ஔவை நாடகமாடிப்) போற்றும் ஔவையார் தமிழ் வேடன் வெட்டிய பலா மரத்தைத் தழைத்துக் கனி சொரியச் செய்தது தமிழே யாகும் இவ் வரலாறுவது :— தம் செல்வத்தைப் பங்கிட்டுக்கொண்ட அண்ணன் தம்பியாகிய வேடர் இருவருக்கும் ஓர் பலாமரமும் புன்செய்யும் பொதுவாயிருந்தன; தினம் அம்மாப் பலனைப் பங்கிட்டுக் கொண்டனர். அண்ணன் பிள்ளையில்லாதவன். தம்பி பல பிள்ளை பெற்றிருந்ததால் ஒரு முறை அண்ணனை நோக்கி உன் பங்கில் சிறிது என் பிள்ளைகட்குத் தரலாகாதா; அவர்கள் உன் தளர்வில் உதவ மாட்டார்களா எனக் கேட்டான். தன் பிள்ளையின்மையைப் பழித்துரைப்பதாகக் கருதி அண்ணன் அம் மரத்தையே வெட்டி வீழ்த்தினான். பின் அவன் தளர்வுற்ற காலை தம்பி கிழங்கு முதலியன கொடுக்கவே தன் தீய செயலை நினைந்து நினைந்து வருந்தலாயினான். பிறகு ஔவையார் வந்து உணவு கேட்க விதைக்க வைத்திருந்த தினையை ஈந்து அவள் பாட்டால் பலாமரம் உயிர்பெற்றெழுந்து பழஞ் சொரியப் பெற்றனர்.

சளப்படு[1]மானிட ருய்வான்முன் னாளையிற் றந்தவௌவை
யுளப்பது மத்துங் தமிழ்தோய்வ தோரு முணர்ச்சிநன்றே[2]

எல்லாக் கலைகட்குந் தாயாய் வெண் டாமரையிற் குலவு
நல்லா ளொருபொற் பலகையதாகி நறுந்தமிழை
யல்லாது மற்றொன்றைத் தாங்கினளோ வதனாலல்லவோ
கொல்லாத வேதமுந்[3]தோன்றிய திந்தக் குவலயத்தே. (46)

பற்பல வாமுல கெல்லாம் புரக்கும் பரமும் விண்ணிற்
சொற்பயின் றொப்பிய நான்முனிக் கூட்டத்தின் தொல்லர
விற்பனக் கும்பன் தவநேர் தமிழில் விளங்கிற்றன்றிக் [சாம்
கற்பவர் கற்குங் கலையாதி னாடுங் கவின்றதின்றே[4] (47)

செந்தகைத் தாமரை யானும்வெண் டாமரைச் சேயிழையு
மிந்த வுலகி னிடைப்புணர்ந் தீன்ற வெழுமகவும்
வந்தவுடன் றமிழ்ப் பாவே நுவன்ற[5]வகை யுணர்ந்தோர்
எந்த விதத்தின்மற் றோர்கலைக் கேற்ற மியம்புவரே? (48)

ஆரன்றிக்[6] கொன்றையுஞ் சூடும் பிரானை யருந்தமிழால்
ஈரம் பொலியத் துதித்தத னா[7]லன் றெழிற்றிருவா
ரூரன் தயைபெற் றவனேறும் வெண்களிற் றோடுறவாய்ச்
சேரன் குதிரை மிசைபோய்க் கயிலையிற் சேர்ந்தனனே. (49)

---

[1] தயருறநின்ற [2]ஔவையின் உள்ளமாகிய தாமரையில் தமிழ்படிந்து (ஆத்திச்சூடி, கொன்றைவேந்தன் முதலிய நூல்) ஆனதை உணர்தல் நன்றாகும். [3]கொல்லாமையை வலியுறுத்தும் தமிழ்மறையாகிய திருக்குறள். [4]மேலான பொருள் (இறைவர்) தமிழில் விளங்கிற்றேயன்றி வேறெந்தக்கலை (மொழி) யிலும் விளங்கவில்லையே என்றவாறு. [5]ஆதி என்ற பறைச்சியும் பகவன் என்ற அந்தணனும், தங்கள் மணம் தக்கதன்றாதலின் தங்களுக்குப் பிள்ளை பிறந்ததும் விட்டு நீங்கவேண்டுமென உடன்பாடு செய்துகொண்டு மணந்தனர். ஔவை, உப்பை, அதிகமான், உறுவை, கபிலர், வள்ளியம்மை, திருவள்ளுவர் என்ற எழு குழந்தைகளையும் வெவ்வேறிடங்களில் பெற்ற பொழுது விட்டு நீங்க மனமில்லாது வருந்திய தாய்க்குக் கடவுள் காப்பதற்கிருக்கின்றார் எனத் தேறுதலாகப் பிறந்ததுமே அப்பச்சிளங் குழவிகள் தமிழில் பாடல்கள் இயற்றின. [6]ஆத்திப்பூ [7]ஆதியுலா எனும் தமிழ் நூலால் அன்பு விளங்க வழிபட்டதால்

செந்தமி ழாலொரு சீதக் களபச் செழுமகவல்
தந்த மொன் றுள்ளமுன் னோன்மிசை பாடிய தன்மையினாற்
சுந்தர மூர்த்தியுஞ் சேரர் பிரானுந் துணுக்கமுற
வந்தண் கயிலையிற் சென்றிருந்தா ளௌவை யக்கணத்தே[1].

பருப்பதத் தோடொரு பேயையுஞ் செற்றுப் பதைபதைத்தாங்
கிருப்பவ ராயிரம் பேரையுங் காத்தின்னு மேத்துமவர்
விருப்பரு ளத்தகு பாமாலை யொன்றையு மேதகு சீர்த்
திருப்பரங் குன்றி லொருதமிழ்ப் பாவலன் செய்தனனே[2].(51)

மழலையங் கிள்ளை யனையார்தஞ் சிற்றிடை மாமிசத்திற்
பழகுநர் தந்தல மேகிக ராமெனும் பைந்தமிழ்நூல்

---

[1]நம்பி ஆரூரரும், சேரமான் பெருமாள் நாயனாரும் முறையே வெள்ளானை, குதிரைமீது திருக்கயிலைக்குச் சென்ற பொழுது பிள்ளையாரைப் பூசித்துக் கொண்டிருந்த ஔவை உடன் போக்குக் கருதி விரைவாக முடிக்கலுற்றாள். பிள்ளையார் அவர்களுக்கு முன் கைலையை அடைவிப்பதாகக் கூறி அமைதியாகப் பூசை செய்யத் தூண்டினர். "சீதக்களப" எனுந் தொடக்கத்தையுடைய அகவலால் போற்றி பூசையை இனிது முடிக்க உவந்தருளிய பிள்ளையார் தம் துதிக்கையில் எடுத்து நீட்டிக் கயிலையில் விடவே சுந்தரர், சேரமானை முந்தியதுடன் "மதுரமொழி நல்லுமையாள் புதல்வன மலர்ப்பதத்தை; முதிர நினையவல் லார்க்கரிதோ முகில் போன்முழங்கி, அதிர நடந்திடு மானைக்குந் தேர்க்கு மதன்பின் வருங், குதிரைக்குங் காதங் கிழவிக்குங் காதங் குல மன்னனே" என்று பாடவே அவர்கள் வெள்கினர். [2]இறையனாரை "நெற்றிக் கண்ணைக் காட்டினுங் குற்றங் குற்றமே" என்ற பழி நீங்கக் கோயில் தோறும் வழிபாடு செய்து வந்த நக்கீரர் கயிலை மலைச்சாரலில் ஓர் குளக் கரையில் சிவபூசை புரிகையில் ஓர் ஆல் இலை பாதி நீரிலும் பாதி தரையிலும் விழுந்தது. அவ்விரு பகுதியும் மீன், பறவையாக மாறி ஒன்றையொன்று இழுக்க இதனால் மனங் கலங்கிய நக்கீரரது பூசை வழுவவே ஓர் பெரும் பூதத்தால் குகையில் அடைக்கப்பட்டார். இவ்வாறு இவருடன் ஆயிரவர் அக் குகையில் சேர்ந்ததால் அவர்களை உண்ண அப் பூதம் நீராடச் சென்றது. அதுகாறும் நன்கு வளர்ந்திருந்த 999 பேர்களும் நக்கீரரால் இறக்க விருப்பதாகப் பழி தூற்றினர். அவர் திருமுருகாற்றுப்படை பாடவே முருகவேள் வேலாயுதத்தால் குகையைப் பிளந்து சிறை மீட்டுப் பூதத்தையுங் கொன்றனர்.

கழகம தூடொரு பாவலன் கூறிடற் காதுறக் கேட்
டழகிய சொக்கர்தஞ் சென்னிபல் காலு மசைத்தனரே[1] (52)
ஆரூரின் மொத்துண்டு[2] செத்தாற் குயிர்கல்கி[3] யன்னையினல்
நிரூரும் வாழையிற் றீமூட்டிக்[4] கச்சியி னிந்தைசெய்தோன்

[1] திருக்கோவையாரிலும் 100 கவி குற்றமுடையதாக ஒதுக்கினர் மதுரை மூன்றுஞ் சங்கப் புலவர். அந்நூறு பாடற் கருத்துக்களையும் அகவற்பாவால் பாடி ஓர் புலவர் செந்தமிழ்ச் சொக்கர் முன் அரங்கேற்றினர். கல் வடிவிலுள்ள சொக்கர் ஒவ்வொரு பாடலுக்குந் தலையசைத்தாராக அப்புலவர் கல்லாடர் எனவும் அந்நூல் கல்லாடம் எனவும் பெயற் பெற நேர்ந்தது. இதனை "கல்லாடர் செய்பனுவற் கல்லாட நூறு நூல், வல்லார் சங்கத்து வதிந்தருளிச்—சொல்லாயு, மாமதுரையீசர் மனமகிழ்ந்து கேட்டுமுடி, தாமசைத்தார் நூறு தரம்" எனும் பாடல் விளக்குவதாகும். [2]பட்டினத்தடிகள் (அரிய ஸ்ராகிய) மதுரையில் தங்கியிருக்கையில் ஓர் மங்கை இவரைக் காணுந்தோறும் சிவனடியாரென உணர்ந்து உணவிட்டு வந்தாள். ஒரு நன்னிரவில் பசி மிகுந்தபொழுது அது தாங்காது அப் பேதை இல்லமே சென்று இரந்தார். அவள் கணவனை எழுப்ப விரும்பாது காரிருளில் ஐயமிட்டாள். அரவக்கேட்டெழுந்த கணவன் இருவரையும் மொத்திப்பின் சிவனடியாரெனக் கண்டு வருந்தவே "விடப் படுமோ இப் பிரபஞ்ச வாழ்க்கையை விட்டு மனந், திடப்படுமோ நின் னருளின்றி யேதின மேயலையக், கடப்படுமோ அற்பர் வாயிலிற் சென்று கண்ணீர் ததும்பிப் படப்படுமோ சொக்கநாதா சவுந்தர பாண்டியனே" என்று பாடினர். [3]பட்டினத்தடிகள் திருவாரூரில் சில நாள் தங்கியிருக்கையில் முன்பு தன்னை வழிபட்டிருந்தவனும், தனது கட்டளையால் இல்லறம் பூண்டவனும் ஆகிய ஒருவன் இன்ப ஈளிரால் (சுக சன்னியால்) இறக்கவே அவன் தாய் தந்தையர் வந்து புலம்ப" எருவாய்க் கிருவிரலின்மேலேறுண்டிருக்கும், கருவாய்க்கே கண் கலக்கப்பட்டுத்—திருவாரூர்த், தேரோடும் வீதியிலே செத்துக் கிடக்கின்றாய், நீரோடுந்தாரைக்கே நீ" என்பது முதலாகிய பாடல்களைப் பாடி எழுப்பியருளினர். [4]பட்டினத்தார் தம் அன்னை இறக்குங் காலம் அணித்தாக "குடியிருந்த வீட்டிற்குக் கொள்ளி வைக்க வேண்டும்" எனக் கூறிக் கொண்டிருந்தார். பின் தன் அன்னை இறக்கவே சுற்றத்தார் ஈமத் தீ மூட்டிச் சென்றனர். இவர் பின் சென்று மூட்டத்தைக் கலைத்து வருந்தி யழுது, யாவருள்ளத்தையும் உருக்கும்படி பாடி வாழைக் கட்டைகளைக் குளிர அடுக்கி "முன்னையிட்ட தீ முப்புரத்திலே, பின்னையிட்ட தீ தென்னிலங்கையில், அன்னையிட்ட தீ அடிவயிற்றிலே, யானுமிட்ட தீ மூள்கமூள்கவே" எனப் பாடி எரியச் செய்தார்.

பேருன் வயிறு பிளந்துகைப் பாகிய பேய்க்கரும்புஞ்
சீருர்தென் ஞெற்றியில் தித்திக்கச் செந்தமிழ் செய்ததன்றே[1]

அழுதேங்கி நஞ்சிட்ட அக்காண் மனையி லனற்கொளுத்திக்[2]
கழுமரந் தீப்படக் கண்டு[3] பயறு கடலையெனக்

---

[1]பட்டினத்தடிகள் காஞ்சிபுரத்தில் பல நாளிருந்து 'ஏகம்ப மாலை' பாடி இடையிடையே "ஏனிருந்தாய் இறைவா" "ஏன் படைத்தாய்" என இழிவு சிறப்பு (நிந்தாத்துதி) செய்தும் "எத்தனையூர் எத்தனைவீ டெத்தனைதாய் பெற்றவர்கள், எத்தனைபே ரிட்டழைக்க வேனென் றேன்—நித்தம், எனக்குக் களையாற்ரு யேகம்பா கம்பா, உனக்குத் திரு விளையாட்டோ" எனக் கேட்டும் தனது பெரிய தொந்தி பிளந்து போகும் படி கசப்பாயிருந்த பேய்க் கரும்பானது "கண்டங்கரியதாம் கண்மூன் றுடையதாம், அண்டத்தைப் போல அழகியதாம் — தொண்டர், உடலுருகத் தித்திக்கு மோங்கு புக ழொற்றிக், கடலருகே நிற்கும் கரும்பு" என்பன போன்ற தமிழ்ப் பாடல்களால் தித்திப்பதாயிற்று. [2]பட்டினத்தடிகள் செல்வ வாழ்க்கையை விட்டுத் துறவு பூண்டு பிச்சை யெடுத்து உண்டது அவருடைய அக்காளுக்கு மானக் குறைவாய் இருந்தது. அதனால் அவரைக் கொல்ல நஞ்சு கலந்த அப்ப மிட்டாள். இறைவன் திருவருளால் உண்மை உணர்ந்து "தன்வினை தன்னைச் சுடும்; ஓட்டப்பம் வீட்டைச் சுடும்" என்று அதனை ஒடித்து வீட்டின் மேல் வைக்கவே பலரும் வியப்பெய்தும் வண்ணம் வீடு வெந்தது. சொல்லால் சுடுந் தன்மை தமிழ்ப் பாவலர்க்கே உரித்தாகும். [3]பட்டினத்தார் வட நாட்டுக் கோயில்களை வணங்கிக்கொண்டே உஞ்சேனை மாகாள மடைந்து ஊர்ப்புறத்துக் கோவிலினுள்ளே இருந்த பிள்ளையாரின் பின் மன மொன்றி யிருக்கையில் கள்வர் அரண்மனையில் அணிகலன்களைத் திருடித் தம் வேண்டுதலுக்கிணங்க ஓர் மணிமாலையைப் பிள்ளையாருக்கு எறிந்து சென்றனர். அது இவர் கழுத்தில் விழுந்திருந்ததால் காவலாளர் இவரைப் பிடித்து மற்றைக் கள்வரையும் காட்டுமாறு துன்புறுத்தினர். இவர் சிவ சிவ வென்று வாளாவிருந்ததால் இவரே கள்வரெனக் கூறி அரசன் ஆணை பெற்றுக் கழுவேற்றப் புகுந்தனர். அவர் தமிழ்ப் பாடலியற்றவே கழுமரம் பற்றி யெரிந்தது. அரசனும் பணிந்து துறவெய்திப் பத்திரகிரி யாராயினன்.

குழுமிய பாலர்க்கு மண்ணள்ளி யிட்டுக் கொதிகடற்பால்
விழுமிய லிங்கமு மான ளெருதமிழ் வித்தகனே[1]. (54)

எக்கால மென்று தமிழாற் பரவ வெழிற் குருவான்
மைக்கால வாதனை நீக்கித்தன் னுயுகன் மங்கையுரு
அக்காலங் கொண்டு கதிசேரச் செய்த வதிசயத்தை[2]
யிக்காலத் தும்புவி யிற்பலர் கூடி யியம்பலுண்டே. (55)

---

[1] திருவொற்றியூரில் தாம் முத்தி எய்தும் காலம் நெருங்கிய தறிந்து மாடு மேய்க்கும் பிள்ளைகளுடன் விளையாடி மண்ணள்ளிக் கொடுத்து பயறு கடலை யாக்கித் தின்னச் செய்தும், இலை சருகால் மூடச் செய்து மணற் குன்றின்மேல் தோன்றக் காட்டியும், மணலிற் புதைப்பித்து வெளிப்பட்டு நின்றும் சில நாள் ஒழுகிப் பின் தம் உடலை நீத்துச் சிவலிங்க உருவாக்கினர். [2]பட்டினத்தடிகள் திருவிடை மருதூர்க் கீழக் கோபுர வாயிலிலிருந்து வழிபட்டு வருகையில் அவரது கட்டளைப்படியே பத்திரகிரியாரும் கோயில்களைச் சுற்றிக்கொண்டே திருவிடைமருதூர் சேர்ந்தார். ஆங்கு தம் குருவைக் கண்டு வழிபட்டு பிச்சை யேற்று அவரை உண்பித்துப் பின் தானும் உண்டு மேலக் கோபுர வாயிலில் இருந்து எக்காலக்கண்ணி பாடி சிவ சிந்தனையுற்றிருந்தனர். ஓர் நாள் ஒருவர் பட்டினத்தாரை உணவு கேட்க அவர் "யான் கோவணந் தாங்குவதே பழுவாகக் கருதுபவன்; மேலைக் கோபுர வாயிலில் உள்ள ஓர் இல்லாளனைக் கேள்" எனத் திருவோடும் நாய்க்குட்டியும் தன்னைப் பற்றுடையனாக்கிய குறிப்பறிந்து பத்திரகிரிஓட்டை எறியவே அதனாலடி பட்ட நாய் இறந்தது. அது காசி அரசன் பெண்ணாகப் பிறந்து, மணப் பருவத்திலே தன் முற்பிறப் பறிந்து, வாழ்க்கைப்பட மறுத்துப் பத்திர கிரியாரை யடைந்து "அடிபட்ட நாய் மீண்டும் திருவடியை நாடி வந்தது" என்றது. அவர் அவளைப் பட்டினத்தாரிடம் கொண்டு சென்று "எம் பெருமானே நம் மிச்சில் மிசைந்த இந் நாய்க்கும் பிறவி வரலாமோ" என்ன அவர் இறைவன் திருவருளை நாடினர். ஆங்கு ஓர் பேரொளி தோன்றலும் அதில் நாயடியாளும் பத்திரகிரியாருங் கலந்தனர்.

அல்லையொப் பாமிடற் ருதிக்குச் சோழ னமுதுகைத்து
முல்லையிற் கேழ்வர காலட்ட கூழ்ச்சுவை முந்தச்செய்து[1]
தொல்லை மறைநலத் தந்தணர் பற்பலர் சூழ்ந்துவப்பத்
தில்லையிற் றேரு மிழுத்தது சேந்தன் செழுந்தமிழே[2]. (56)

வேலையுங்[3]குன்று மவுணருந் தீயவை வேல்விடுத்துச்
சேலையொப் பாம்விழித்[4]தெய்வானை தோள்புணர் சேந்தன[5]ந்
[நாள்

---

[1]பட்டினத்தடிகள் கணக்குப் பிள்ளையாயிருந்த சேந்தனர் அரசனல் விலங்கிடப்பட்டு அடிகள் பாடலால் விலங்கு முறியப்பெற்று தில்லையம்பதி சென்று தன் மனைவி, மைந்தனுடன் மேலை வாயில் வழியாக நாளும் மூன்று கட்டு விறகு கொண்டுவந்து விற்று, கேழ்வரகு வாங்கிக், கூழ் ஆக்கித் திருச்சிற்றம்பலவருக்கு அமுதூட்டிப் பின் உண்டு வருவாராயினர். ஓர் நாள் தன் விருப்பம் நிறைவேற சோழ அரசன் அம்பலவாணருக்கு நூறு கல அரிசி அட்டுப் படைத்தான். அதிற்புகை யூட்டியதும் இறையனர் "சேந்தன் கூழ் எதிர்க்கழிக்கின்றது" எனக் கழறினர். அரசன் பின் நெடுநேரஞ் சென்று படைத்து விட்டுச் சேந்தனரைத் தேடிக் கண்டுவணங்கித் தன் அரண்மனையிலேயே வாழ வேண்டினன். அதனை மறுத்ததால் கோடரியால் இறக்கத் துணியவே தான் விறகு விற்கு முன் கொடுத்து வந்த சுங்கந்தவிர்க்கச் சொல்லினர். அவ்வாறே செய்ய இசைந்து அவர் கொண்டுவரும் விறகை யெல்லாம் உரிய விலை கொடுத்து வாங்கித் திருமடப்பள்ளியிற் சேர்த்து வந்தான். [2]இவ்வாறு கிடைத்த காசுக்குக் கேழ்வரகு வாங்கி முன்னிலும் மிகுதியாகக் கூழ் படைத்து உண்டு வருகையில் ஓர் நாள் அம்பலவாணர் மேலெல்லாம் கூழாயிருந்தது, தில்லைவாழந்தணர் அரசனிடம் முறையிட அவன் இஃது அடியார் செயலாதலின் அவர்களையே தீர்த்துக் கொளச் சொன்னான். அவர்கள் சேந்தனரை வினவ அவர் யாது மறியேனென்றார். எனினும் இறைவன் திருவருளை இன்னும் மேலாக விளக்கவும் நட்டப் பெருமானே எம்மூர்த்தியினும் மேலானவர் என யாவருந் துணிந்துய்யுமாறும் அவரை அழகு படுத்தி தேரில் ஏற்றி வடம் பிடிக்காமல் ஓடி நிலைக்கும்படி செய்தருள விரும்பினர்; சேந்தனர் திருப்பல்லாண்டு பாடவே தேர் தானகவே நால் வீதியுஞ் சுற்றி வந்தது, அதனல் அவரை 63 வருக்கும் ஒப்பாக நாயனர் என அழைக்கலாயினர். [3]கடலும் [4]சேற் கெண்டையை ஒத்த [5]முருகவேள்.

ஆலையின் பாகன்ன செந்தமிழ்ப் பாட்டொன்றி னாசையினாற்
பாலையின் முட்டை யெனப்போன வாறு படிசொல்லுமே[1].

அத்தனை வேதமுஞ் சொன்னான் தனைப்புடைத்[2]தாலடியில்
லித்தனை யாண்ட முழுப்புல வோனு[3] நெடுந்தவத்தின்
வித்தனை யான்தருஞ் செந்தமிழ்ப்பாடலின் வேட்கைமிஞ்சி
யெத்தனை தொண்டர்கட் கோதுநி தானு மிசைத்தனனே[4].

---

[1]பொய்யாமொழிப் புலவரின் கவித்திறங் கண்ட முருகவேள் அவரது கனவில் தோன்றி தன்னையும் பாடக் கட்டளை யிட்டார். சிவபெருமானையே பாடிவந்த புலவர் கோழியும் பாடிக் குஞ்சையும் பாடுவனோ" என்று கூறி மறுத்தார். பிறகு புலவர் ஓர் பாலை நிலத்தின் வழியே வெயிற்குஉடைந்து செல்லுங்கால் முருகன் வேட்டுவக் கோலத்தில் தோன்றி அச்சுறுத்தி "என் பெயர் முட்டை, என் மீது இப்பாலைத் திறத்துடன் கூடிய பாடலொன்று பகர்" என்றனர். அவர் உடனே "பொன்போலுங் கள்ளிப் பொறிபறக்குங் கானிலே, என் பேதை செல்லற் கிசைந்தனளே—மின் போலும், மானவேல் முட்டைக்கு மாறாய தெவ்வர்போங், கானவேல் முட்டைக்குங் காடு" எனப்பாடினர். [2]எத்துணையோ மறைகளைக் கூறிய நான்முகனை அவற்றின் முதலாகிய 'ஓம்' எனும் எழுத்திற்குப் பொருள் கூற முடியாமல் விழித்ததற்குத், தலையில் குட்டி. [3]கல்லால் நிழலில் நால்வருக்கு அறிவு கொளுத்திய இறைவருக்கும் அறிவுரை கூறி அவரை ஆட்கொண்ட பெரும்புலவராகிய முருகவேளும். [4]அவர் பல புலவர்களைப் பாடியவற்றுள் இரண்டாவன:—(அ) கள்ளியே வெந்து பொறியாகப் பறக்குமிடத்தில் முன்னும் வெந்துபோமாதலின் தைக்காது எனப் பொய்யாமொழிப் புலவர் தன்னை (முட்டையை)ப் பாடிய பாடலிற் குற்றங்கூறித் தானும் அப்புலவர்மீது அப்பாலைத்திறத்துடன் "விழுந்ததுளி..." என்ற பாப் பகர்ந்து "குஞ்சைப்பாடாத நீ முட்டையையும் பாடினாயே" என நகையாடி முருகவேள் காட்சி நல்கி மறைந்தார் (ஆ) பகழிக் கூத்தர் சிறந்த புலமை எய்தியும் ஒருவரையும் பாடாது" எத்தெய்வம் என்னை வந்து பாடெனப் பகருமோ அத்தெய்வத்தின் புகழையே பாடுவேன் என்று சொல்லிக்கொண்டிருந்தார். முருகவேள் அவர் கனவிடைத்தோன்றி திருநீறும் "பூமாது..." எனும் பாடல் வரைந்த ஓர் சீட்டும் கொடுத்துத் திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ் பாடச் செய்தார்.

அண்ணாமலையி லொருதமிழ்ப் பாவல னன்றுகுகன்
விண்ணாடுந் தோகை மயின்மேற்கற் றூணில் விளங்கச்செய்து[1]
தண்ணா மவை யொரு மன்னனுக் கீந்து[2] கருத்திற்சற்று
மெண்ணாப் பகைவ னுயிருண்டு பேரின்ப மெய்தினனே[3]. (59)

[1]பிரபுட தேவர் எனும் அரசன்முன் சம்பந்தாண்டான் எனும் மலைமகள் அன்பன் சென்று அருணகிரிநாதரை இகழ்ந்து தான் அம்பிகையை யாவருங் காண வரவழைக்க வல்லனாகவும் அவ்வாறே அருணகிரியார் முருகவேளை வரவழைக்க வல்லரோ என வினவச் செய்தான். அவர் சம்பந்தாண்டான் முன்னதாகக் காட்டினால் தானும் காட்டுவதாகக் கூறினர். சம்பந்தாண்டான் முயன்றும் முடியாமற் போகவே அருணகிரியார் "அகில சேடனாட........." எனும் திருப்புகழ் பாடித் திருவண்ணாமலைக் கோவில் மண்டபத்தின் வடகீழ்த் தூணில் முருகவேளை விளங்கச் செய்தார். [2]அருணகிரியார் அரசனை ஒரு கண்ணால் மட்டும் பார்க்கச் சொன்னார்; அரசன் இரு கண்ணாலும் பார்த்துக் குருடாயினன்; ஆயிரக்கால் மண்டபம் கட்டுவதாக வேண்டி வணங்கினான்; அருணகிரியார் முருகனை வேண்டிக் கண் பெறச் செய்தார். [3]பின் சம்பந்தாண்டான் அருணகிரியார் பாரிசாத மலர் கொண்டு வந்தால் தவமுடையராக ஒப்புக்கொள்வதாக அரசனிடம் கூறினன். அதற்கு அருணகிரியார் மண்டபப் பணி முடிந்ததும் கொடுப்பதாகக் கூறி சம்பந்தாண்டானை ஊரை விட்டோட்டி அவன் வாழ்ந்த விடத்தில் ஓர் வாவி வெட்டி அந் நீரால் முருகவேளை திருமுழுக் காட்டச் செய்தார். பின் மண்டபம் முடிந்ததும் கோபுரத்துள் தம் உடலைச் சேமித்து வைத்து ஆங்கு இறந்த ஓர் கிளியின் உடலுட் புகுந்து விண்ணுலகஞ் சென்று தேவேந்திர சங்க வகுப்புக் கூற இந்திரன் பாரிசாத மலர் ஈந்தனன். திரும்புவதற்குள் சம்பந்தாண்டான் அவருடலைக் கண்டு பிடித்து அவர் இறந்ததாகக் கூறிச் சுடுவித்தான். அருணகிரியார் மலர் கொண்டு வரவே அரசன் சம்பந்தாண்டானைக் கொல்லப் புகுந்தான். அருணகிரியார் தடுத்துவிட்டுக் கிளிகளுடன் வாழ்ந்து பல பாடலியற்றினார். சம்பந்தாண்டான் அரசனையும் தன்னைப் பழிப்போரையும் அச்சுறுத்தவும் தன்னை வணங்காதவரைக் கொல்லவுங் கருதி காளியை நேரில் வரவழைக்கப் பல தீயவேள்வி புரிந்தான். அப்பொழுது முருகவேள் தன் தாயைப் போற்றும்படி கூற அருணகிரியார் சத்துரு சங்காரத் திருப்புகழ் (சித்து வகுப்பு) கூறினர். அம்பிகை ஆயிரந் தலை இரண்டாயிரம் கைகளுடன் சம்பந்தாண்டான் முன் தோன்றி இடிபோல் முழங்க அவன் இறந்தான். அருணகிரியார் கிளியுருவுடன் திருக் கயிலையில் கந்தவெற் படைந்து முருகவேள் தோள் மீது வீற்றிருக்கும் பேரின்ப நிலை எய்தினர்.

செத்துக் கிடந்த சினையாடுய்த் தினவுஞ்[1] செம்புலிவாய்
வைத்துக் கடித்த பசுமீண்டு வாழவும்[2] வம்பனொரு
ருத்துப் படவுங்[3] குருடா யொருவன் குலைவுறவு[4]
முத்துப் பொருதமிழ்ப் பாட்டொரு ஞானி மொழிந்தனனே.

---

[1]கன்னட நாட்டினர் ஒருவர் சிவனருள்பெற்று திருவண்ணாமலை செல்லுகையில் ஊர்களில் தங்காது குகைகளில் தனியே தங்கிச் சென்றதால் குகை நமச்சிவாயரெனப் பெயர்பெற்றார். திருவண்ணாமலைக் கருகிலுள்ள ஊரவர் தீயொழுக்கம் நிறைந்திருந்ததால் அவர்களுக்கு அறிவுரை பகர்ந்து வந்தனர். ஓரிடையன் செத்துக்கிடந்த சினையாட்டைக் கொண்டுவந்து அதன் பாலைக் கறந்து இரு குட்டிகளுடைய தெனக் காட்டினான். ஓர் கயவன் இவ்வாட்டைத் தின்னும் துறவி உள்ளாரெனக் கூறவே இடையன் அவரிடம் கொண்டுவந்து விற்பதாகக் கூறினன். குகை நமச்சிவாயர் மறுநாள் விலை தருவதாகக் கூறி அனுப்பி விட்டு இறைவனை ஏன் இவ்வாட்டை அனுப்பினாயென வினவி ஓர் வெண்பாப் பாடி திருநீற்றைத் தடவ உடனே ஆடு எழுந்து இரு குட்டிகளை ஈன்றது. மறுநாள் இடையன் வந்து குட்டிகளைத் தோள் மேல் போட்டுக்கொண்டு சென்றான். [2]ஓரிடையன் நூறு பசு மேய்த்துக் கொண்டு வருங்கால் ஒன்றை வேங்கை கடித்துக்கொண்டு ஏகிற்று. உடனே அவ்விடையன் குகை நமச்சிவாயரிடம் கூறவே அவர் அரை வெண்பா பாடுவதற்குள் புலி அப்பசுவைக் கொண்டுவந்து விட்டது. அதன் காயத்தைப் பொடியினால் அடைத்துவிட்டு மூன்று நாளைக்குக் கிலி கொல்லாதிருக்குமாறும் இறைவனை நினையுமாறும் தெரிவித்தனுப்பினர். [3]அமித் என்னும் துருக்க அரசன் பல மாதரைக் கவர்ந்து குதிரைப் படையுடன் பல கொடுமைகள் புரிந்து திருவண்ணாமலைக் கோவிலுக்குள் புகுந்து பல தீயன செய்தான். குகை நமச்சிவாயர் ஓர் வெண்பாப் பாட இறைவர் அவன் கனவில் ஓர் துறவியாய்த் தோன்றி முதுகில் வேலால் குத்தினர். விழித்ததும் ஓர் வேர்க்குருவாகப் புறப்பட்டு பிளவையாக மாறி வருந்தலுற்றான்; உடனே பயந்து கோவிலைவிட்டு நீங்கினன். பின் துடிதுடித்து இறந்தான். குடமுழுக்குச் செய்தனர். [4]ஓர் திருமாலிய (வைணவ) குரு பல்லக்கிலேறி காஞ்சிபுரத்திருந்து வடநாட்டுக் கோயில் சுற்றப்போகும் பொழுது திருக்காளத்தி மலை தோன்றிற்று. அதைக் காணவும் கூசி எடுபிடியால் மறைக்கும்படி கூறினன். இதனைத் திருவண்ணாமலையில் இருந்த குகை நமச்சிவாயர் அறிந்து ஓர் வெண்பாக் கூறவே அவன் குருடாயினன். அவன் குகை நமச்சிவாயரை வழிபட்டு கோயிற்பணி புரிந்து பாடிக் கண் பெற்றான்.

அம்பலத் தீசன் திருவுரு நாடக மாடிடவுங்
கம்பணி காதன்ன நீத்துக்குருவிற் கவின்தரவும்[1]
வம்பவிர் கொங்கைக் கயற்கண்ணி யன்னமுன் வந்திடவுஞ்[2]
செம்பவ ளக்கனி வாய்த்தமி ழாற்செய்த சித்தனுண்டே. (61)

காளிதன் தேரிற் கனல்பற்றி வேவவுங்[3] கந்தன் வந்து
தாளிணை போற்று மொருவனுக் காகயஞ் சாற்றிடவும்[4]
ஆளியொப் பாமொரு துட்டன் கணத்தி லழிந்திடவுங்[5]
கோளில னுமொரு சைவன் தமிழ்ச்சொற் குலாவியதே. (62)

மறுத்தவிர் முத்தி நிலையீதென் றுய்ந்து வகுத்ததனற்[6]
கறுத்தநெஞ் சாளர்க் கிகலாந் தவசி கவின்தமிழாற்

---

[1]குகை நமச்சிவாயாது மருகர் அவரை வழிபட்டு அடிவருடுகையில் தன் ஆடையைக் கசக்கலுற்றார். குரு காரணம் வினவ அடியார் தில்லை யம்பலத்தில் திரைச் சேலையின் மூலை பற்றியதால் கசக்கி அவித்ததாகக் கூறினர். உடனே நீ தில்லைக்கேகென ஆங்குச் சென்றதும் அம்பலவாணர் அவாது குருவின் கோலத்துடன் விளங்கினர். பின் ஒரு பாடலியற்றவே இறைவர் திருவடிச் சிலம்பு ஒலிக்க நடனமாடிக் காட்டினர். [2]பின் பல ஊர் வணங்கி மதுரை வந்து ஒருவரும் ஐயமிடாததால் அங்கயற்கண் ணம்மை திருமுன் வந்து ஓர் வெண்பாப் பாடவே அம்மை ஓர் பார்ப் பனப் பெண் வடிவுடன் வந்து பாற்சோறிட்டு மின்னல்போல் மறைந்த னள். [3]சிவப்பிரகாசர் ஓரூரில் மடமொன்றில் இருக்கும்பொழுது காளி விழா நடந்து தேரோடிற்று. நன்கு பூத்துக் காய்த்திருந்த அம் மடத்து முருங்கை மரம் அதற்கு இடைஞ்சலா யிருந்ததால் வேரோடு களையலாயி னர். அப்பொழுது அவர் இறையருளை நாடி ஓர் பாடலியற்றவே அத்தேர் பற்றி எரிந்தது. [4]மயிலம் சிவஞான பாலையசுவாமிகள் தம்மைப் பாடும்படி சிவப்பிரகாச சுவாமிகளிடம் தெரிவித்தார். அவர் மக்களைப் பாடுவதில்லை யென மறுத்தனர். முருகவேள் சிவப்பிரகாசர் கனவிற்றோன்றி பாடத் தகுமெனக் கூற நெஞ்சுவிடுதூது பாடினர். [5]சிவப்பிரகாசர் ஒருநாட் காலையில் ஓர் மாஞ்சோலை வழியாகச் சிவபூசை செய்யப் போம்பொழுது ஓர் மாங்கனி கிடந்ததைக் கண்டு தம் உயிர்க் கடவுளுக்கு ஆமென் றெடுத் தார். காவற்காரன் இவரைத் திருடரென இகழ்ந்து மடிபிடித்திழுத்து கனியைப் பிடுங்கவே வருந்தி ஓர் பாடலியற்றினர். அவன் இறந்துபட் டான். [6]குமாரதேவர் சாத்திரங்கள் உடல் விழா முத்தி நிலையீது வெனக் கூறுவனவாகும்.

செறுத்தெமன் தன்னைவென் றன்பனைக் காத்த தியாகர்
திருத்தவு மோர்சொல் நடத்தவு மோர்சொல் [தந்தேர்
[நிகழ்த்தினனே[1] (63)

ஆமைக் குளவுறுப் பென்னப் பொறிக ளடங்க நின்று[2]
மாமைப் புயல்வண்ண மாலென்ன வார்புவி வாழ்வுகண்டு[3]
தீமைக்குச் சத்துரு வாவார் பரவிய செந்திலிலோர்
ஊமைக் குழந்தை யருளாற் பயின்றிட்ட தொண்டமிழே[4] (64)

மாயிரு ஞாலத்து மன்னவர் போற்றும் வளவன்மணிக்
கோயின் முகப்பிற் றறிபட்டு வீழ்ந்தகைக் கோளர்தலை
ஆயிர மொன்றும் படிபாடி ஞறு மரியதமிழ்
வாயின னல்லது மற்றோர் கலைபயில் வாணனன்றே[5] (65)

---

[1]குமாரதேவர் தன் குருவாகிய சாந்தலிங்க சுவாமிகளின் கட்டளைப்படி சிவத் தலங்களைச் சுற்றிக்கொண்டு திருவாரூர் வந்தபொழுது ஒருவர் இவரைக் கண்டு "வீரசைவ மருளைப் பார்" என இகழ இவர் உடனே "வீரசைவ மருளாயில் தேர் நடக்க; அருளாயில் தேர் நிற்க" என்று கூறிவிட்டுப் பக்கத்திருந்த ஓர் மடத்திற் றங்கினர். தேர் அசையாமல் நிற்கவே மூன்று பங்கு ஆள் வந்திழுத்தும் பயனில்லை. அரசன் உண்மையறிந்து இவரை வந்து வணங்கவே "வீரசைவ மருளாயின் தேர் நிற்க; அருளாயில் தேர் நடக்க" என மாற்றிக் கூறித் தேரோடச் செய்தார். [2]ஆமைதன் நான்கு கால்கள், தலை ஆகிய ஐந்துறுப்புக்களையும் இடையூறு நேருங்கால் உள்ளிழுத்துக் கொள்வதுபோல ஐம்புலன்களைச் சுட்டறுத்தல். [3]இப்புவிவாழ்வு மாயையென அறிந்து. [4]தீமையின் எதிரியாகி விளங்கிய குமரகுருபரர் ஐந்து வயதுவரை ஊமையாக இருந்தார். அவர் தாய்தந்தையர் திருச்செந்தூர் சென்று வணங்கிவரவே முருகர்மீது நெஞ்சுவிடுதூது பாடிப் பேசலுற்றார். [5]ஆனந்தக்கூத்தர் எனப் பெயருடையார் தம் குலத்தவராகிய கைக்கோளரைப் புகழ்ந்து ஈட்டி எழுபது பாடி மற்றைய குலத்தவர் மதிக்கும்படி ஆயிரந் தலை கொடுத்தால் அவற்றின் மேலிருந்து அரங்கேற்றுவதாகக் கூறினர். உடனே அவர்கள் கொடுத்து அவ்வாறே அரங்கேற்றச் செய்தபின் ஓர் பாடலால் அத்தலைகள் உடலுடன் ஒட்டும்படி செய்ததால் ஒட்டக்கூத்தர் எனும் பெயர் பெற்றார்; கைக்கோளரும் மூவிலை வேலைப் பாவும் செங்குந்தாயினர்.

அம்பாரி வேழ மசையா துநிற்ப வதனின் மன்னன்
வெம்பா குலங்கொள்ள நிந்தையொன் றோங்க மிசையிருந் [தோன்
செம்பாடல் தேடித் தியங்குமவ் வேளையிற் சிற்றிடையார்
தம்பாற் சிறையிருந் தோன்றனை யாளத் தமிழ்வந்ததே[1] (66)

---

[1]புகழேந்தி பாண்டியன் அவைக்களப் புலவராய் அவன் மகளுக்குத் தமிழ் கற்பித்து வந்தார். அவள் சோழ அரசனுக்கு வாழ்க்கைப்பட்டபின் அவளை மகளென நேசித்த புலவர் பார்க்கவந்ததறிந்து ஒட்டக்கூத்தர் முன்சென்று அழைத்துப் பொன்விலங்கிட்டுத் தண்ணீர்த் துறையருகே சிறையிலிட்டு நாள்தோறும் சென்று நலம் வினவி வந்தார். அவர் மகளிர்க்கு வேண்டிய பாரதக் கதை, ஒப்பாரி முதலியன பாடிக் கொடுத்து மகிழ்வித்து அவர்கள் உதவியால் இனிது வாழ்ந்து வந்தார். குலோத்துங்க மன்னன் சிறப்பாக உலாப்போந்த ஓர் இரவில் மகளிர் உதவியால் வழியிலிருந்த அவரைப்பந்தல்மீது ஏறி, மிளரியாக வைக்கும் வெண் புள்ளிகளையுடைய சட்டியைத் தலையில் கவிழ்த்துக்கொண்டு, அதில் இட்டிருந்த தொளைவழியாகப் பார்த்துக்கொண்டு மறைந்திருந்தார். அரசன் ஊர்ந்துவந்த யானை அங்கு வந்ததும் தன் வழிபடு கடவுளாகிய திருமாலை வேண்டவே அசையாது நின்றது; அங்குள்ளார் அனைவரும் கைகொட்டி நகைத்தனர். அரசன் வருந்திக் காரணம் வினவ அவர்கள் "அற்பருக்கு புத்திவந்தால் அர்த்த ராத்திரியில் குடை பிடிப்பர்" என்பதுபோல அந் நள்ளிரவில் அரசன் குடைபிடித்து வந்ததற்காக நகையாடினதாகப் புகழேந்தி சொல்லிக்கொடுத்திருந்தபடி கூறினர். அரசன் ஒட்டக்கூத்தரை நோக்கித் தன் செயல் தகுமெனப் பாடச் சொன்னான். புகழேந்தி வேண்டுதலின்படி, திருமாலின் மருகியாகிய கலைமகள் அருளால், ஒட்டக்கூத்தரால் ஒன்றும் பாடக் கூடவில்லை. உடனே மறைந்திருந்த புகழேந்தியார் "அண்டமீ துலவி வாழும் அருந்ததிக் கற்பாளுன்னைக், கண்டதா லுவகை யெய்திக் கற்பழிந் திடுவளென்றே, எண்டிசை புரக்கும் வேந்தே இரவினிற் கவிகை நீழல், கொண்டுமோ நடாத்துமாறு குலோத்துங்கா நீதி தானே" எனப் பாடினர். அதனால் அரசன் மகிழ்ந்து புகழேந்தியை ஒட்டக்கூத்தருடன் வைத்துக்கொண்டு உலாப்போவானாயினன். அவ்வாறு பெருமைபெறச் செய்தது தமிழேயாம்.

ஏகாசம் கந்தன் கரத்தாற் புனையு மியல்படைந்து[1]
வாகார் களாசப் பொருளோர்ந்து[2]செம்பிடை மாழைநல்கிப்
போகா மயக்கினன் புந்தியைச் சீர்செய்து[3]போரியிற்[4]சி
தாகாசப் பேருடை யோன்[5]வாழ வைத்த தருந்தமிழே. (67)

அண்டிய தொண்ட ரறுபத்து நால்வரை யச்சமறக்
கொண்டிடு ஞான விழியாற் பருகிக் குறைவில்பதத்து

---

[1]சிதம்பர சுவாமிகள் திருப்போரூரில் பிச்சை யெடுத்து உண்டு திருப்பணி செய்து வருகையில் ஓரிரவு ஓர் திண்ணையில் துயிலும் போது அவர் பெருமையை யாவரும் உணரும்படி முருகவேள் ஓர் போர்வையைத் தன் கையாலேயே சாற்றி விளங்க வைத்தார். [2]சிலர் வேண்டுகோளுக் கிணங்கி அவர் கண்ணுடைய வள்ளல் இயற்றிய ஒழிவிலொடுக்கத்திற்கு உரை எழுதி வரும்பொழுது களாசம் எனுஞ் சொல்லிற்குப் பொருள் புரியாமல் முருகவேளை வேண்டவே அவர் கிழவடிவுடன் வந்து பிரம் பொன்றைக் கையிற் கொடுத்து அதன் பெயர் கூறி மறைந்தார். அதனால் பொருளுணர்ந்து உரையை முடித்தார். [3]பின் அவர் திரு மந்திரத்திற்கு உரை யெழுதப் புகுந்தார். அதனால் பொன்னில் ஆசை யுடைய ஓர் தொண்டன் தன் எண்ணம் ஈடேறுமென மகிழ்ந்தான். ஆனால் முருகவேள் உரை எழுதாமல் தடுக்கவே அத் தொண்டன் துய ருற்றான். அவனை அழைத்து ஓர் செப்புக் காசைக் கொணரச் செய்து அதனை உற்று நோக்கிப் பொன்னாக்கிக் கொடுத்து இரசவாதத்திலும் தவ வலியே சிறந்ததென அவனறிவைத் தேற்றினர். [4]திருப்போரூரில். [5]சிதம்பரசுவாமிகள்.

எண்டிசை யோரு மறிய வொருவ னினிதடைந்தான்
பண்டியற் பாடலோன் ருற்செந்தில் வேலனைப் பாடலினே[1]

கடலூர் மயானத்தொ ரந்தணன் புந்திக் கலக்கத்தினுல்
அடல்வேந்தன் தன்னெதிர் சொல்லிய வண்ண மமலைதன்கா

---

[1] திருச்சிற்றம்பல நாடிகள் பக்குவ மறிந்து அறிவுரை கூறி 64 பெயரை அடியவராக்கி ஐயமேற்றுண்டு வருகையில் ஒருவர் அவ் 65 வருக்கும் விருந்தளித்தார். ஆனுல் நெய் ஊற்றுதற்கு மாருகத் தவறி வேப்பெண்ணெய் இட்டார். சிலர் அதனை அறியாமலும், சிலர் அறிந்தும் அறியாது போலும், சுவைக்கு அடிமையாகாது உண்டனர். ஆனுல் ஒருவர் பக்குவக் குறைவால் அதைத் தெரிவித்து நீக்கும் நினைவுடன் "வே" எனத் தொடங்கிப் பின் தெளிவுற்று நிறுத்திக்கொண்டார். விருந்தளித்தோர் உண்மை யுணர்ந்து வருந்தினுர். மறுபொழுது 65 வருங் கூடி இன்பப் பேறு உசாவிய பின் திருச்சிற்றம்பல நாடிகள் "வே" என்றவரைக் கூவித் தில்லைக்குச் சென்று பக்குவ மடையுமாறு ஏவினர். அவர் பசுவை விட்டு நீங்கும் கன்றைப்போல் பிரிந்து தில்லையில் இருக்க சில நாட் கழித்து திருச்சிற்றம்பல நாடிகள் மாயூரத்திற்கு அருகிலுள்ள சித்தர்காடு எனும் ஊருக்குச் சென்று ஆங்குள்ள ஓர் செல்வரை 64 குழி வெட்டி இலிங்கமும் செயச் சொல்லி, திருச்செந்தூரகவல் பாடி முருகன் தமக்குக் குருவாய் அருளிய முறைகளை நன்கு விளக்கிப், பின் ஒவ்வொருவரையும் தன்னுடன் ஒன்ருக்கி 63 குழியிலிட்டு மூடச் செய்தார். பின் தான் அடங்கப் புகுந்தவர் சிதம்பரம் சென்ற அடியவரை நினைத்தார். அதற்கு முதல் நாளே அம்பலவாணர் இவ்வாறு நடக்குமென உணர்த்தியதால் அவர் அங்கு வந்து ஓர் பாடலியற்றினர். நாடிகள் விழித்துத் தன் றுடையிலிருத்தி ஒன்ருக்கிக்கொண்டு தாமும் அருளொடு கலந்தனர்.

திடலாய ஓலியோன் றன்மதி தன்னை யிருட்டிரவில்
திடமா வுதித்திடக் காட்டலுஞ் செந்தமிழ்ச் சிர்விழைந்தே[1]

கச்சியின் சைவப் பிராமண னன்று கனசபையில்
நச்சிய பாவலர் சொற்கேட்டு நெஞ்சக னாணுமன்று
பச்சிளங் கொங்கைக் குறமாது கொண்கனோர் பாவலனா
மெச்சியின் பந்தரச் சென்றதுஞ் செந்தமிழ் வென்றியதே[2]

தன்னுடைச் சிடன்ற னாவியைக் காத்தொரு தையனல்லாள்
இன்னுத ரத்தின் மகவாக்கி யாண்டு மிலங்கருட்சீர்

---

[1] திருக்கடவூர் மயானத்திருந்த அபிராமிப்பட்டர் அவ்வூர் அம்மனை வழி பட்டு அரசனுக்குப் பஞ்சாங்கம் சொல்லி வந்தார். அவர் வாம வழியில் ஈடுபட்டுக் கட்குடித்து இரவு பகல் மயக்கமுற்றிருந்தார். அவ்வாறு அறிவழிந்திருக்கையில் சிலர் அவரை அரசன் முன் கொண்டுபோய் விட அவன் நாளை மறுநாள் என்ன திதி யென்றான். அவர் அமாவாசை என்பதற்கு மாறாகப் பருவம் என்றனர். அன்று முழு மதியைக் காட்டா விடில் வாளால் வெட்டுவிப்பதாகக் கூறினன். அறிவு தெளிந்ததும் தன் தவறுதலுணர்ந்து 100 புரியுடைய ஓர் உரிகட்டி அதன் மேலேறிக் கீழே தீவளர்க்கச் செய்து அபிராமி அந்தாதி பாடி ஒவ்வொரு பாட்டின் முடிவிலும் ஒவ்வொரு புரியைத் துண்டித்து வந்தார். நூறாவது புரி அறுந்ததும் அவரைத் தீயில் விழாது அபிராமி அம்மன் தன் கரத்தில் தாங்கித் தரையில்விட்டு அவர் கருத்துப்படியே தன் இடது காதோலையைக் கழற்றிக் கீழ்த் திசையில் எறிந்தாள். அது யாவரும் காண முழுமதி போல விளங்கலாயிற்று. அரசன் ஓடி வந்து அடிபணிந்து தண்டிக்க முன் வந்ததற்குப் பொறுத்தருள வேண்டினன். [2]கச்சியப்ப சிவாச் சாரியார் தில்லை மூவாயிரவர் கூடிய பேரவையில் கந்த புராணத்தை அரங்கேற்றப் புகுந்தபொழுது முதற்சொற்களாகிய "திகழ் தசக்கரம்" என்பன திகட சக்கரமெனப் புணர்ந்தன எனக் கூற, அதற்கு விதியாதென அவையினர் கேட்டனர். ஆசிரியர் மயங்கி வருந்தி முருகவேளை வேண்ட அவர் பாண்டி நாட்டுப் புலவராய் அவையில் தோன்றி இரு திறத்தாரும் கூறியனகேட்டு, முருகர் அகத்தியர்க்குக் கூறிய பழைய இலக்கணம் தம்மிடம் இருப்பதாகவும் அதில் விதியிருப்ப தாகவும் எடுத்துக்காட்டி எற்கச் செய்து மறைந்தனர். அவையோர் புலவர் பெருமை யுணர்ந்து வணங்கி அரங்கேற்றினர்.

துன்னுறச் செய்துள்ள தூயோ ரொருவன் துணைக்கொளலும்
பன்னு தமிழ்க்கலை யேயென்னும் வார்கடற் பாருலகே[1] (71)

தேவாதி தேவன் திருநட மாடிய தில்லைமன்றுள்
மூவா யிரவருங் கண்டுவப் பெய்திட முள்ளெயிற்றுத்
தீவா யரவக் கடியா லிறந்துள்ள சேய்தமிழ்ச்சொற்
பாவாற் பிழைத்த விதமறி வாள்மலர்ப் பாரதியே[2] (72)

காயுஞ் சினத்தொடு சோழனக் காட்செய் கபடமஞ்சா
தாயுந் தமிழ்ப்புல வோரொரு வீட்டு ளறைந்தகவி

---

[1] திருக்கோவலூரிற் பிறந்து இலிங்கந் தரித்து முருகவேளை வழிபட்டு வந்த ஆறுமுகச்சுவாமியை வீரபத்திரன் எனும் அடியவன் வழிபட்டு வந்தான். அவன் இறப்பதன் முன் சுவாமியை நோக்கி அழுது உன் பணியில் இச்சை தணிந்திலதென்றான். அவனைத் தக்க தாய் வயிற்றிற் பிறக்கச் செய்து ஆட்கொள்வதாகத் தேற்றி அவனுயிரைத் தன் அறிவு வெளியில் கலக்கச் செய்து அவன் உடலைப் புதைக்கச் செய்தார். மகப்பேறு வேண்டுவோரைத் தம்மை வந்து காடச் சேயத் திருவருளை வேண்டவே அவ்வாறே பிள்ளையிலா ஓர் கணவன் மனைவி வந்து வேண்டினர். அவர்களுக்கு இருமகன் பிறந்தால் மூத்தவனைத் தம்மிடம் அளிக்க இசைவு பெற்றுத் திருநீறு நல்கினர். அம்மதியிலேயே ஓர் ஆண்மகவு கருவுற்றுப் பிறந்து பின் மூவாண்டினில் ஓராண்மகவும் பிறக்கவே முதற்குழவியை ஈந்தனர். அவனுக்குத் திருநீறு அக்கமணி அணிந்து உடன் உண்பித்து அவன் முற்பிறவியில் குருவிற்குப் பணிசெய விரும்பியதற்கு நேர்மாறாகக் குரு அவனுக்குப் பணிசெயும் பேறுபெற்றான். அவர் இயற்றியது ஆறுமுகம் எனப்பெயர் பெற்ற தமிழ் சிட்டானுபூதியாகும். [2] கம்பர் இராமாயணம் பாடித் தில்லை மூவாயிரவர் அவையில் அரங்கேற்றக் காத்திருந்தும் அவர்கள் யாவரும் கூடுவது எளிதாயில்லை. சில நாட்களுக்குப் பின் ஓரந்தணர் பிள்ளை பாம்பு தீண்டி இறந்தான். யாவரும் சுடலைக்கு வருவதறிந்து கம்பர் ஏடுகளுடன் சென்று இராம லட்சுமணரை இந்திரசித்து நாகபாசத்தால் கட்டிய பொழுது விடுவித்த வகையைப் படித்தவுடன் கருடன் வந்து மோதியதால் குழந்தை உயிர்த்தெழுந்தான். அக்கவிகள் அருட்செயலுடையன என்பதறிந்து மகிழ்வுடன் அரங்கேற்றினர்.

வாயும் பிளந்து முகில்போ லுருமிப்பின் வாலெடுத்துப்
பாயும் புலியைப் பதினாறு துண்டு படச்செய்ததே[1] (73)

கட்டிக் கரும்பொடு செந்தேனு நாணுங் கவின்தமிழால்
ஒட்டிப் புலவ ரிருவர்முன் பாடு மொருகவிக்காச்
சிட்டித் தொழிலுடை யான்மனை யாட்டி தெருவில்வந்து
கொட்டிக் கிழங்கெனப் பல்கால் வலைச்சியிற் கூறினளே[2] (74)

முன்னை மறையின் பொருடேர் வசிட்ட முனிமுதலோ
ரன்னையிற் சிர்த்த வபிமான ராக வரசுரிமை
தன்னை நடத்துந் தபனன் குலத்தைத் தமிழ்க்கவியோன்
றென்னை சொல்வேனைய கோவறு மாறன் றியற்றியதே[3] (75)

---

[1]தன் மகள்மீது காதல் கொண்டதற்காகச் சோழ அரசன் கம்பர் மகன் அம்பிகாபதியைக் கொன்றான். அதனால் யானைக்கு அஞ்சித் தன் வீட்டுள் நுழைந்த சோழன் மகனைக் கம்பர் எழுத்தாணியால் குத்திக் கொன்றார். அப் பழிக்குப் பழி வாங்க அரசன் ஓர் பெட்டியுள் புலியை வைத்து அதனுள்ளிருந்த பொருளை வெளிப்படுத்தச் சொன்னான். அவர் திறந்ததும் பசியால் அவரைத் தின்ன வரவே ஓர் பாப் பகர்ந்து அப்புலி 16 துண்டாய் விழச் செய்தார். [2]ஓர் நாள் சோழ அரசன் கம்பரையும் அம்பிகாபதியையும் விருந்திற்கு அழைத்துத் தன்மகளை வட்டிக்கச் சொன்னான். அம்பிகாபதி காதல் மிகுதியால் மதியும் மானமும் இழந்து அவள் மென்மையைப் புகழ்ந்து பாடத் தொடங்கினான். யாவர் மானத்தையும் காப்பாற்றும் வண்ணம் கம்பர் யாவரையும் படைக்கும் பிரமனின் மனைவியாகிய கலைமகளை வேண்டி அம்பிகாபதி ஓர் கிழங்கு விற்பாளது மென்மையைப் பாடியதுபோல் பிற்பகுதியைப் பாடிமுடித்தார். அரசன் அவளெக்கே எனலும் தன்வேண்டுதலுக் கிணங்கிக் கலைமகள் கிழங்கு விற்கும் கிழவியாகத்தெருவில் வருவதைக் காட்டினார். [3]சோழ அரசன் ஓர் சிற்பனைக் கொண்டு வியத்தகு பெட்டியொன்று செய்வித்துக் கம்பனைத் திறக்கச் சொன்னான். திறந்தவுடன் அதனுள் வில்வில் நாணேற்றப் பட்டிருந்த அம்பு மார்பிற் பாய்ந்து இறக்குந் தருணத்தில் கம்பர் ஓர் பாப் பகரவே சோழ அரசனும் வழியற்றுப்போனான்.

காவலன் தன்மகள் மேன்மயலாகிக் களவில் வரும்
பாவலன் பாடிய வெண்டமிழ்க் காமலர்ப் பாரதியாள்
பூவர சொன்றி னடியிற் பயற்றைப் புதுநிலவில்
வேவவைத் தாளென்ன வேயுல கோது மிகைபடவே[1] (76)

மரத்தாற் செயுமயில் வாய்பாம்பை விட்டது மாறிமுன்போ
லாரத்தா லெடுத்ததும்[2] பூமாலை கொய்தது[3] மூன்றனித்து

---

[1]சோழ அரசன் தன் மகள்மீது ஐயுற்று ஓர் முழு மதி நாளிலே அந்தப்புரத்திலே வந்து ஒளித்திருந்தான். அதனை அடுத்ததோர் பொழிலில் அம்பிகாபதி வந்து "பூவரசடியிலே புது நிலாவிலே, வேகுது காம நோய் விரகத் தீயினால், ஆர்மகளாயினு மறையுட் சிக்கினால், காவலென் றறியுமோ காம பாணமே" எனப் பாடின அரவங் கேட்டு ஆள்விட்டுப் பிடித்துவரச் செய்தான். அவன் "பூவரசடியிலே புது மிடாவிலே, வேகுது பயறுதான் விறகுத் தீயினால், ஆர்பயறாயினும் அவித்துத் தோண்டினால், காவலென் றறியுமோ கையும் வாயுமே" எனப் பாடியதாகக் கூறிக் கலைமகளை வேண்டிக்கொண்டு அழைத்துச் செல்ல அவளே ஓர் பெண்ணாக வந்து பயறவிப்பதைக் கண்டார்கள். [2]இரு தமிழ்ப் புலவர் மிடியால் வருந்தி இலங்கை சென்று ஆங்கு அரசு புரிந்த பாண்டிய மன்னனை அணுகினர். அவன் தன்னாட்டுப் புலவரொன ஆதரித்தும் இவர்கள் உறவு கொண்டாடா திருந்தனர். அரசன் அவர்களைக் கதிர்காமத்திற்கு அழைத்துப்போய் அங்கு முருகவேள் மயில்மீது உலாப்போதா இருவரையுங் கூவி ஒருவர் மயில்வாயிலிருந்த பாம்பை விடவும், மற்றவர் மீண்டும் அதை எடுக்கவும் பாடச் சொன்னான். அவ்வாறே பாடிப் பரிசு பெற்றனர். [3]வாக்குப் பலிக்கும் இயல்புடைய ஓர் குருட்டுக் கிழவன் சிவகாமியம்மன் வாயிலில் கட்டியிருந்த மாலையை "வாலைசிவ காமியம்மை வாசலிலே கட்டிவைத்த, மாலை துண்டு துண்டு துண்டு" என்று பாடித் துண்டித்து விழச் செய்தனன்.

விரற்பூ ணளித்தது[1] மேகஞ்சொற் கேட்டதும்[2] விக்கிரகக்
காத்தோடும் பூஞ்செண்டு பெற்றதுஞ்[3]செந்தமிழ்க் காரியமே

நிதைத் தவிர்த்து நலமே விளைக்குஞ் சிவன்மகிழு
மாதைக் கலம்பகஞ் சொல்லிய வாறொரு மாநதிநீர்
வாதைப்புரியு மவர்நாணச் செய்திட்ட வண்மையுஞ்[4]சிற்
றாதைப் பொதியைத் தமிழாண்மை யென்றுல கோதிடுமே

---

[1]காமன் என்னும் புரவலன் தமிழ்ப் புலவர்களுக்குச் சிறிதும் மடியின்றிப் பரிசில் வழங்கிவந்தான். அவன் இறந்து உடலைத் தீக் கொளுவியதும் ஓர் புலவன் வந்து ஏங்கிப் பாடியதும் அப் புரவலன் கை வெளிப்பட்டு அதன்கண் கழற்றப்படாதிருந்த மோதிரத்தைக் காட்டவே புலவன் அதைக் கொண்டுசென்று விற்று வறுமை நீங்கினன். [2]பாண்டி நாட்டில் திருச்செங்கோட்டை எனும் ஊரிலே வேளாண் மரபினராகிய நமச்சிவாயப் புலவர் அம்பிகை மந்திரம் ஓதி அருள் பெற்றுப் பல அற்புதங்கள் இயற்றி வருகையில் உழவர் மழையின்றி வருந்துதல் கண்டு பேருலகம்மனைப் பாடி மேகம் பொழியச் செய்தனர். [3]நமச்சிவாயப் புலவர் விக்கிரமசிங்கபுரத்து இறைவன்மீது சிங்கைச் சிலேடை வெண்பா எனும் அழகிய நூலியற்றி அதனால் அக்கோயில் வழிபாட்டு முடிவில் அந்தணர்க்குப் பின் முதல் திருநீறு வழங்கப்பெறும் பெருமை பெற்றார். ஓர் பாவினால் அற்புதம் நிகழச் செய்யாவிடில் அதனைத் தடுப்பதாக ஓர் அரசன் கூறினன். அதற்கு அப்புலவர் இசைந்து யாது செய்யவேண்டுமென்று வினவ அக்கோயில் உலகம்மன் செப்புச் சிலையின் கையிலிருந்த பூச்செண்டு அவர் கை புகச் செய்யவேண்டுமென அவ்வாறே பாட, ஆயிற்று. [4]இரட்டையர்கள் சிவபெருமான் கட்டளைப் படி திரு ஆமாத்தூர்க் கலம்பகம் பாடிச்சென்று அச்சுதன் எனும் அரசன் அவை கூட்ட அக்கோயிலில் அரங்கேற்றப் புகுந்தனர். "ஆலிலையோ" எனத் தொடங்கும் முதற்பாடலில் பம்பை ஆற்றின் மேல் கரையில் அக் கோயில் இருப்பதாகக் குருட்டுப் புலவரால் பாடப்பட்டிருந்தது. கோவில் கீழ்க்கரையி லிருந்ததால் யாவருங் குறை கூறினர். இதன் உண்மை அறிந்தே அதன்பின் செல்லவேண்டுமென இரட்டையர் கூறி எழுந்து அன்றிரவு உண்ணாது கோயிலில் உறங்கினர். அன்றிரவே பெருமழை பெய்து உடைப்பெடுத்துக் கோயிலின் கிழக்கே ஆறு ஓடத் தொடங்கியது. யாவரும் பணிந்து நூலை அரங்கேற்றினர். இன்றும் அவ்வாறே ஆறு ஓடுவதையும், பழைய ஆற்றையும் காணலாம்.

தேவர் முனிவர் மனிதர்முன் னாகத் திகழுமவர்
யாவரும் போற்று மிபமா முகத்தெந்தை யேசிலிரு
பாவலர் தங்கைப் பணங்கவர்ந் தோர்தமிழ்ப் பாட்டணிகை[1]
காவலந் தீவிற் பகர்வா ரனேகரெங் காளுமுண்டே (79)

விண்மாரி யொப்பக் கொடுப்பானைப் போன்றொரு [வேடமிட்டுக்
கண்மாரி பெய்யப் புலவோ ரனேகரைக் காவல்செய்தோன்
திண்மா ரிடிவின வும்பாம்பி லேங்கிச் சிதையு மட்டு
மண்மாரி காட்டிய தங்கா ளொருவன்றன் வாய்த்தமிழே[2] (80)

கருமுகில் வண்ண னரங்கத்துக் கோயிற் காத்திருந்து
பெருமடைப் பள்ளிப் பணிசெய்கு வானைப் பிறங்குதமி
ழருமைய வாய விளையாட் டனந்த மளித்து வென்றித்
திருமலை ராயன்றன் சிங்காதனத் துறச் செய்ததுவே[3] (81)

---

[1]இரட்டையர்கள் ஓர் குளக்கரையில் பிள்ளையார் முன் பண முடிப்பை வைத்துவிட்டுக் குளித்தனர். குளித்தானதும் முடிப்பைக் காணாது திகைத்தனர். குருடர் வந்து பிள்ளையார் தொந்தியைத் தடவிப்பார்த்து முடிப்பிருப்பதாகக் கண்டார். "தம்பியோ பெண்திருடி தாயாருடன் பிறந்த, வம்பனே செய்திருடு மாமாயன் - அம்புவியில், மூத்தபிள்ளை யாரே முடிச்சவிழ்த் தீர்போமோஉம், கோத்திரத்துக் குள்ள குணம்" என இருவரும் பாடவே பிள்ளையார் எடுத்த முடிச்சுடன் பணஞ்சேர்த்துக் கொடுத்தார். உடனே முடவர் குருடரைத் தழுவி உன் கண்ணே மெய்க்கண் என, குருடர் அதுவும் அம்பலவாணர் திருவடிகளை ஒத்த உம் தாள்களைச் சுமந்து பெற்ற பேறெனக் கூறி மகிழ்ந்தார். [2]மழைபோல் கொடுப்பதாகப் பாசாங்கு செய்து அதிமதுரப் புலவன் என்பானின் சொற்படி பல புலவர்களை ஏங்கி அழும்படி சிறையில் இட்ட திருமலைராயன் எனும் அரசன் இடியேறுண்ட நாகம்போல் நடுங்கி அழியுமட்டும் அவன் நகரில் மண்மாரி பெய்து அழியும்படி செய்ததும் (காளமேகத்தின்) தமிழேயாகும். [3]திருவரங்கத்து மடைப்பள்ளியில் வேலை செய்த (பின் அகிலாண்டேச்சுரி அம்மன் அருள் பெற்ற) காளமேகத்தைப் பல திருவிளையாடல் புரியவும், திருமலைராயன் அவையில் அரசனை ஒப்ப அரியணை மேவச் செய்ததுந் தமிழே யாகும்.

பள்ளிக்கு எஞ்சிப் பதுங்கும் வயினவப் பையனுக்குக்
கொள்ளிக் கனலிற் கொடிதாய வாக்குக் கொடுத்துலகில்
துள்ளிக் களிக்கின்ற பொல்லார் பலரைத் தொலைத்ததரன்
வெள்ளிக் கிரியை நிகராம் பொதியை வியன்தமிழே[1] (82)

பொன்னுடை மாயவன் போற்றிய சேதுக்குப் போய்வருமட்
டென்னுசை மாதுக்குக் காவலின் னுரென் றிரண்டு தெய்வஞ்
சொன்னுன் றமிழ்க்கவி பாதியினுலது தொல்லுலகி
லன்னுன் வருமுன் பலபேரைக் கொன்றதோ ரற்புதமே[2] (83)

---

[1]ஒட்டப்பிடாரமென்னும் ஊரிலே ஆண்டான் எனும் திருமாலியன் பள்ளிக்குப் போகாமல் ஒளிந்துகொண்டு தாய் இரங்கிக் கொடுத்த உணவை அருந்தி வளரும் நாளில் அவனது 10வது வயதில் ஓர் சித்தன் தோன்றி காளி மந்திரத்தைச் செவியுறுத்திச் சென்முன். அதை விடாது உருப்போட்டு வருகையில் ஓர்நாள் பள்ளிச் சிறுர் கண்டு தூக்கிச் செல்லாதபடி காளி கோயிலுட் சென்று ஒதிஞன். காளியம்மை நேரில் தோன்றி இசை வேண்டுமோ வசை வேண்டுமோ என வினவப் பிந்தியதையே விரும்பினன். உடனே காளி வல்லெழுத்தொன்றை வேம்பின் ஈர்க்கிஞல் அவன் நாவில் எழுதிஞள். அவனும் நீட்டின மரத்தில் கூர் பார்ப்பதுபோல் அக் காளி சிலையின் கொங்கை அற்று விழவும், பலர் இருந்த கொட்டகை தீப்பற்றி எரியவும் பாடி வசைகவி ஆண்டான் எனப் பெயர் பெற்முன். பிறகு அச்சமின்றி தெருவில் விளையாடுகையில் சில சிறுர்கள் பற்றி ஈர்த்துப்பள்ளி ஆசிரியர்முன் விட்டனர். அவர் அடித்ததால் சினந்து அவர் மனைவி தாலியறும்படி பாடினதால் அவர் தலை வெடித் திறந்தார். அரன்—சிவபெருமான்; திருக்கயிலைமலை தாழ்ந்து போகாமல் அகத்தியர் பொதியைக்கு அனுப்பப்பட்டதால் இரு மலைக்கும் ஒப்புமை கூறப்பட்டது. [2]வசைகவி ஆண்டாஞல் பலர் துன்புற்றதால் அப்பழிகளை நீக்கிக்கொள்ள, இராமன் சேதுக்குச் சென்றது போல், தானும் போகக் கருதித் தன் காதலிக்குக் காவலாக இரு தெய்வங்களை வேண்டி "சேதுக்குப்போய் நான் திரும்புமளவு மிந்த, மாதுக்குக் காவல் வயிரவனு மாடனுமே" என அரைப் பாட்டு இயற்றிச் சென்முன். அவ்வாறே அவர்கள் காவலாயிருந்து அவளை அணுகிய காமுகரை இறத்தல் கச்செய்து கொன்றனர்.

தூண்டாவிளக்கில் வருந்தும்பி போற்பலர் துஞ்சின ரென்
றூண்டான் றனது கவியாண்மை கூறின னந்தமொழி
வீண்டானென் றெள்ளிவிடேன் மின்கள் சத்திய மேதினியீர்
வேண்டாங்கு செந்தமிழ்ப் பாவாணர்க் கஞ்ச விளப்பமன்றே[1]

தந்தை தலையை யுடைத்துத்[2] தமையன் றனைவதைத்துப்[3]
பந்தையொப் பாமுலை மின்னோ ரனேகரைப் பாழ்படுத்தி[4]
நிந்தையைச் சற்று மதியாதோர் பாவல னீணிலத்திற்
சிந்தை மகிழ்தலைத் தான்றமிழ் வீரஞ் சிறக்கவென்றே (85)

ஆராயிரந் தமிழ்க் கீர்த்தனை பாடி யரியமயி
லேறூறு மாமுகத் தோர்குமரேசற் கினிதணிந்திட்

---

[1]விளக்கிற்கு வரும் விட்டில் மடிவதுபோல் ஆண்டான் கவியால் பலர் இறந்தனரென அவன் கவியின் வலிமை கூறினேன். உலகினரே அதனை வீணென்று இகழ்ந்துவிடவேண்டாம். அது உண்மையாகும்; மேன்மையைத் தாங்கிநிற்குஞ் செந்தமிழ்க் கவிகளுக்கு அஞ்சுவது குறைவாகாது; மதியுடைமையாகும். [2]வசைகவி ஆண்டான் மலையாளம் பார்க்கச் சென்றான். இவன் வசைத்திறனை ஒற்றர்களால் அறிந்த அரசன் தன் முதல் அமைச்சனை அனுப்பித் தன்முன் வாராமலும் வசையொன்றும் படாமலுமிருக்க எக்கடமை விதிப்பினும் கொடுப்பதாகக் கூற, மாதம் ஒரு மூட்டை சர்க்கரை அனுப்பச்சொல்லி அகன்றான். அச் சர்க்கரையைத் தன்னிடம் வருபவர்க்கெல்லாம் கொடுத்து வருகையில் இவன் தந்தை பன்முறை சர்க்கரை கேட்க "நக்குவதற்குத் தவிடு கூடக் கிடைக்காத இப் பஞ்சகாலத்தில் சிணுங்குகிறாயே எனப் பாடவே தலையுடைந்து இறந்தான். [3]காளி அருளால் வசை பாடக்கற்று வீட்டிற்கு வருகையில் தன்னைத் துன்புறுத்திவந்த தமையன் ஆடை நன்கு உடுத்தாது விதை தெரியும்படி உட்கார்ந்து சுவர் வைத்துக்கொண்டிருந்தான். சுவர் சற்று சரியவே, அச்சுவர்போல் அவன் விதை அற்று விழும்படி பாடவே அப்படியே விழ இறந்துபட்டான். [4]ஓர் திருமணத்திற்கு இவன் சென்றபொழுது ஒருவரும் மதிக்காமல் இடையூறும் செய்ததால் ஓர் கவி பாடி மணமகன் இறக்கச்செய்தான். செட்டிகுளமென்னும் ஊரில் குட்டிசெட்டி என்பான் "பாடுவதால் யானை குதிரைகளை அழைக்க வல்லவனாயின் இவனை மதிக்கக்கூடும்" என அவன் மகளைக் கெடுக்க அவை வருமெனப் பாடியதால் அவ்வாறே அவள் கெட்டிறந்தாள்,

டுறாருங் கண்கண் மலர்போற் றுலங்கு முறுதிபெற்று
மாறாத கீர்த்தியு முற்றான்முன் முத்து வயிரவனே[1] (86)

செந்தமிழ்ப் பிள்ளைக் கவிவேண்டி யன்று திருச்செந்தில்வாழ்
கந்த னொருவன் கனவூடோர் பாட்டுங் கழறியப்பா
லந்தப் பனுவற் கடகென்றோர் பூணு மளித்தவித[2]
மிந்த வுலகத் துரைப்பா ரனேகருண் டென்றைக்குமே (87)

---

[1]மூத்து வயிரவன் எனும் மறவன் பிறவிக் குருடாய் வருந்தி முருகவேளே தனக்கு நன்மைபயக்கவல்லவனென உணர்ந்து ஊண் உணவொழித்து ஓர் அன்பன்பால் ஆறெழுத்து ஓதப்பெற்றான். அதனை விடாது பயின்று கீர்த்தனைபாடும் ஆற்றல் அடைந்து 6000 பாக்கள் பாடிப் பல அற்புதங்கள் ஆற்றினான். ஓர் நாள் "கொண்டுவாமயிலே—ருக கெம்பிரானைக், கொண்டுவா மயிலே" எனும் பல்லவியுடைய பாடலை விளம்ப முருகவேளே நேரில்வந்து கண் தரப்பெற்றான். [2]மதுரையின் அருகே பகழிக்கூத்தன் எனும் கம்மியன் தமிழ்ப்புலமை எய்தியும் ஒருவரையும் பாடாது எத்தெய்வம் தன்னிடம்வந்து தன்மீது பாடச் சொல்லுகிறதோ அதனையே பாடவிருப்பதாகக் கூறிக்கொண்டிருந்தான். திருச்செந்தூர் முருகவேள் கனவுல் வந்து இலைத்திருநீறும் சீட்டுக்கவி ஒன்றும் கொடுப்பதைக் கண்டான். விழித்துப் பார்க்க அவை யிரண்டும் இருக்கக்கண்டு வெண்ணீறணிந்து அச் சீட்டுக் கவியின் முதற் சொற்களையே தன் பிள்ளைத்தமிழின் முதற் சொற்களாய் வைத்துப் பாடி முடித்துச் திருச்செந்திலை அடைந்து முக்காணியென்னும் குருக்களிடம் அந்நூல் அரங்கேற்ற வந்திருப்பதாக அறிவித்தான். அவர் இருநூற்றுவருள் ஒருவராவது இசையாததால் ஓரிரவில் முருகன் அருட்செயல் பெறாவிடில் அவ்வேட்டைக் கிழித்தெறிவதாகக் கருதிக்கொண்டு துயின்றான். முருகவேள் கோயிற் பதக்கமொன்றைக் கொணர்ந்து அடகாகக் கொடுத்து அருகிலுள்ள ஆத்தூருக்குப் போகக் கனவில் கட்டளையிட்டவாறே சென்று ஓர் ஆலமரத்தடியில் தங்கியிருந்தான். முருகவேள் குலசேகரப் பட்டினத்துக் காத்தபெருமாள் மூப்பனென்னும் கோயிற் பரிபாலகன் கனவில் தோன்றி நடந்தவகையும் நிகழ்த்தவேண்டியனவுங் கூறவே அவன் பல்லக்கில் வந்து பகழிக்கூத்தனையும் பக்கத்தில் வைத்துச் சென்று மிகச் சிறப்பாக அரங்கேற்றுவித்தான். முக்காணிகளும் ஆனைவர் தவிர்த்து கேட்டு மகிழ்ந்தனர்.

துண்டரி கக்கொடுங் கோன்மன்னர் கண்டு துணுக்கமுற
விண்டலத் துள்ள புலவோர் பலரும் வியந்துரைப்ப
மண்டலத் தோர்கள் வணங்கப் புளிய மரத்தின் கொப்பைத்
தண்டமிழ்ப் பாடலொன் றந்நாள் கணத்திற் றறித்திட்டதே[1]

பந்திற் றிரண்ட முலைப்பேதை துன்பம் பரிகரிக்கச்
சிந்தித் துவந்து திருமந்திரத்துத் திறற் புலவோன்
வந்தித்த செந்தமிழ்ப் பாடலொன் றூலலை வாய்மருவுஞ்
செந்திற் குமரன் றிருச் சந்நி தானத் திரையற்றதே[2] (89)

ஆயிரத் தெட்டண்ட மந்நாளி லாண்ட வவுணனிடம்
போயிகற் றூது புகன்றோன் றமிழிற் புகழுமெழில்

---

[1] தூத்துக்குடியில் பாணர் குலத்து உதித்த வீரபாண்டியப் புலவர் திருச்செந்தில் செவ்வேள் உருவை நினைத்து ஆறெழுத்து ஓதி நினைப் பவை முடிக்குந் திறலுடன் விளங்கினர். ஓர் மிலேச்ச அமைச்சன் பல பொன் அணி தரித்து ஓர் புளியமரத்தின்கீழ் விளங்கினான். அப் புலவர் அவன் முன் அஞ்சாது சென்றபொழுது அவன் ஓர் புளியங் கொம்பைக் காண்பித்து அது அற்றுவிழப் பாடினால் தன் அணிகலனையெல்லாங் கொடுப்பதாகவும் இன்றேல் தக்க தண்டனை விதிப்பதாகவுங் கூறி னான். புலவர் பாடிக் கத்தரியால் வெட்டியதுபோல் துண்டிக்கவே அமைச்சனும் சொன்னவாறே நல்கினன். [2]வீரபாண்டியப் புலவர் தன் மகளைத் தங்கை மகனுக்கு இளமையிலேயே மணஞ் செய்வித்தார். சிங்கள நாட்டிற்குச் சென்றவன் அவள் பருவமடைந்தும் வாராததால் மகளும் தங்கையும் வருந்துவது கண்டு திருச்செந்தூருக்கு அழைத்துச் சென்ற னர். ஆங்குதி ருமுழுக்கு நிகழத் திரையிட்டிருந்ததால் வருந்தி ஓர் பாட லியற்றியவுடன் திரையற்று விழுந்தது. முருகவேளைக் கண்டு வணங்கிய துய் செந்தில் ஆண்டவன் ஓர் நாளைக் குறிப்பிட்டு அன்று வீரவாகுவை அனுப்பி அவன் மருமகனைக் கொணர்வதாக அவர் மட்டுங் கேட்கும்படி கூறினன். அதை யாவருக்கும் அறிவித்துவிட்டு இலைத்திருநீறும் அமுது படையலும் பெற்றுத் தம்மூர் சென்று தெருட்டு மணத்திற் காவனை புரிந்து குறித்தநாளை நோக்கி நின்றனர்.

வாயினன் பெற்ற மகளார்வ மெய்த மறிகடலூர்
மேயின னென்னி[1] லதன்றி ரெவர்க்கும் விரிப்பரிதே (90)

குருகைத் தெருவிற் சிவிகையின் மேற்செலுங் கொள்கையி[னால்
அருகுற்றோர் வேதியன் கைமூடிக் கேட்க அவன்றமிழாற்
றிருவொத்த மங்கையர் கொங்கைக்குங் கண்கட்குஞ் [சிர்நுதற்கு
மருவத் தகு மண்ணி தென்றானென் பார்பலரிவ் வையகத்தே[2]

ஈரம் பொருந்தத் தமிழாற் றுதிக்கு மெழிற் புலமைக்
காரன் கலியறச் செய்வது நாடிக் கதிரயிற்கை

---

[1]குறித்தநாள் காலை சிங்கம்போன்ற ஓர் காளை புலவர் மனைவியிடஞ் சென்று உன் கணவன் சொற்படி உன் மகளை அழைத்துவாத் தயிர்ச் சோறு தாவெனப் பெற்று மறைந்தான். 1008 அண்டங்களையும் ஆண்ட சூரனிடம் தூதுசென்ற வீரவாகுதேவரே அவரெனக் கருதித் தன் கணவரிடம் நிகழ்ந்தது கூறினள். தான் காணாத காட்சியை அவளே கண்டதால் ஏற்றமுடையாளெனக் கூற அவள் அதுவும் நின் கைத்தாலி பெற்ற பயன் எனப் பெருமைப்படுத்தினள். அத் தேவருஞ் சிங்களஞ் சென்று தானே ஓர் மரக்கலமாய் மருகனை நிலவெழுமுன் கொண்டுவர யாவரும் மகிழ்வுற்றனர். எனவே தமிழின் பெருமை எவராலும் விரித்துக் கூறலரிதாம். [2]பாண்டிநாட்டில் ஈழுவ குலத்தில் கந்தசாமி என்பவர் தோன்றி ஓர் பெரியவரால் ஆறெழுத்து நவிலக்கேட்டு இடைவிடாது பயின்று புலவரானார். அவர் பாடலைக் கேட்ட செல்வர் அவருக்குப் பல்லக்கு முதலியன கொடுத்துப் போற்றினர். அதனை ஊர்ந்து திருச்செந்தில் செல்லும் வழியில் ஆழ்வார் திருநகரி அந்தணர் அவ்வூரில் ஆண்டவனன்றி யாரும் சிவிகையிற் செல்லல் தகாதெனத் தடுக்க அவர் ஆறுமுகனருள் பெற்றதால் தகுமெனக் கூறினர். ஆங்கு நின்ற ஓர் வல்லாளன் கையுள் ஓர் பொருளை மூடிக்கொண்டு இதனை ஓர் கவியாற் கூறினால் சிவிகை யூரலாம்; இன்றேல் அஃது பொடிபடும் என அவரும் உடனே "கொங்கைக்குச் சந்தனமாம் கோலவிழிக் கஞ்சனமாம், திங்கள் நுதலுக்குத் திலகமாம்—மங்கையர் நின்று, ஆடல் புரிகின்ற ஆழ்வார் திருநகரி, மாடத் திருவீதி மண்" எனப் பாடி மகிழ்வித்துச் சென்றனர்.

வீரன் றனது பெருமையெல் லாம்விட்டு விட்டொருக்காற்
சேரன் கனவி னிடைத்தூத னுமெனச் சென்றனனே[1] (92)

முச்சிலுஞ் செங்கைக் கழங்குங்கொள் வார்தம்மைமூரிச்சிறூர்
மெச்சிய சிற்றில் வியன்வீதிச் செந்திலின் மேயசெவ்வேள்
நச்சிய வாறுதமிழாற் றுதிக்குமோர் நாவலன்றன்
எச்சிலுங் கீழ்விழ லாகாதென் றுடையி லேந்தினனே[2] (93)

எப்புவனத்தெக் குலத்தோர்க ளேனு மிசைக்கரிய
மெய்ப்புகழ்ச் சாதனம் பெற்று லமரரின் மேலெனுஞ்சொல்
ஒப்புகி லார்நிந்தை யாற்றுதக் காளி லொருபுலவன்
செப்புசெஞ் சொற்றமி ழாற்செந்தில் வேலன் திரும்பினனே[3]

---

[1]கந்தசாமிப் புலவர் சேரர் மன்னன்பால் பொருள் பெறக் கருதி முருகவேளிடம் மொழியவே அவர் அம்மன்னன் கனவில் தோன்றி அப் புலவர் தூதனெனக் கூறி 5000 பொன் ஈயக் கட்டளையிட்டனர். புலவர் சென்றதும் எதிர்கொண் டழைத்துப் பரிசில் ஈன்றனுப்பினன். [2]கந்தசாமிப் புலவர் திருச்செந்தூரில் மணல்மேட்டிலிருந்து செந்தில் வேலனைப் பல சிந்துக்கள் பாடுகையில் அடைக்காய் மென்று எச்சில் உமிழ்வது வழக்கம். கருவரை மூலவர் புனைந்த ஆடையை அவ்வெச்சில் நனைத்து சிவப்பாக்கியதால் இவ்வாறு செய வல்லாரும் உளரோ என, அர்ச்சகர் உருகி அழுதபொழுது ஒருவன் மீது வேலவன் வந்து தன் பெயருடைய புலவன் தன்மீது அன்பு கனியப் பாடும்போது தான் அருகிருப்பதை அவன் அறியாது உமிழ்ந்து வருவதை யாவரும் அறிய விரும்பியே இவ்வாறு ஏற்றதாகக் கூறினர். [3]இக் கந்தசாமிப் புலவர் மகன் ஆறுமுகப்புலவர் துறவுவேடம் புனைந்து செந்தில் வேலன்மீது அன்பைப் பெருக்கிப் பாடிவந்தார். மாசிமாதத்து ஏழாந் திருவிழா வன்று மிகச் சிறப்புடன் முருகவேள் திருவீதி உலாப்போந்தபோது இவர் முன்னின்று கைகொட்டிப் பாடி ஆடினராகச் சிலர் சினந்து பின் னுற் போகக் கட்டளையிட்டனர். உடனே இவர் பின்சென்று "ஆறு முகச் சிவனே ஐந்துமுகச் சிவனே அடிமைக்குச் சொல்லவேணும்" எனத்தொடங்கும் கீர்த்தனையைப் பாட அவ்வாறே முருகவேள் தன்னைத் தாங்குபவர் வருந்தத் திரும்பி சதாசிவ மூர்த்தியாய்க் காட்சி நல்கி அவ் வாறே ஒவ்வோராண்டும் நிகழ்த்தும்படி கட்டளையிட்டருளினர். அதனை இன்றுங் காணலாம்.

வெங்கனற் கோப மிலேச்சர்தம் மாணையின் மேவிநொந்து
தங்கள்கண் வாழ்வது நாடிப் பெரிது தவித்தவருக்
கங்கயற்கண்ணி யருளா லொருவ னறைந்த தமிழ்
சங்கடந் தீர்த்த தறியு நெல்வேலித் தடாகமொன்றே[1] (95)

அத்தனை[2] யொத்துத் தவத்தோர் பலர்க்கு மரசனென்னும்
வித்தகப் பேர்பெற்று வீறூர் பொதியையின் மேயமுனி
முத்தமொப் பாள[3]ரு ளாற்செய்த தாந்தமிழ் மூதுலகத்
தெத்தக வோரையுந் தேவர்தந் தேவ ரெனச்செய்யுமே (96)

தமிழுணர் பாவலன் போல்வா னொருவன் தனதுகலை
அமிழ்தினு மேற்றமென் றேமாப்புறும லயற்கலையா
லுமிழ்வதென் றெப்பிடின் மற்றோர் மடந்தைக்குரிய
[கொண்கற்
குமிழ்மலர் நாசியி னுன்முகந் தாணிகர் கோதினனே[4] (97)

[1] திருநெல்வேலியில் ஓர் மிலேச்ச மன்னன் ஆண்டுவருங்கையில் மழையில்லாது பெரும் பஞ்சமுண்டாயது. தம் சமயக் குருக்களின் உதவி நாடிப் பயனில்லாதுபோகவே அந்தணர்களை வினவ அவர் இலக்கம் பொன் ஈயின் 1000 அந்தணர் 40 நாள் வருணமந்திரம் ஓதச் செய்து மழை பெய்விக்கலாமெனப் பகர்ந்தனர். அவ்வாறே கொடுத்து ஓதச் சொல்லி மழை பெய்விக்காவிடில் ஒன்று தன் மதத்திற் சேர்ந்து ஊண் உண்ணவேண்டும் இன்றேல் கண்ணிழக்கவேண்டுமெனக் கழறி அவர்கள் தப்பிப்போகாதவாறு காவலுமிட்டான். பலநாளாகியும் பயனில்லாததால் எங்கு முடிவிலும் அவ்வாறேயாகுமோ என அஞ்சி உப்பு ஒருவியும், உண்டி நீத்தும், தண்ணீர் தணர்தும் பாடுகிடந்து காந்திமதியம்மன் திருமுன் ஓதிவரலாயினர். மதுரை அங்கயற்கண் அம்மை மடைப் பள்ளியில் தொண்டாற்றி வந்து அவளருளைப் பெற்றுப் புலவனுகிய சீனிவாசன் எனும் அந்தணர் அச்சமயம் அங்குவர ஆயிரம் அந்தணரும் அவரை வேண்டவே அவர் "மழையே பெய்யவேணும் வடிவே நல்ல, மழையே பெய்யவேணும்" எனுங் கீர்த்தனை பாடி அவர்களைக் காத்தருளினர். [2]சிவபெருமானை. [3]முத்தை ஒத்த நகையுடைய அங்கயற்கண்ணம்மை. [4]தமிழுணர்ந்தவன்போல் பாசாங்குசெய்யும் ஒருபுலவன் தமிழ் அமிழ்தினும் மேம்பட்ட தெனப் பெருமையுறாமல் வேற்று மொழியுடன் ஒப்பிட்டு இகழ்வானுயின் அவன் மற்றொரு மகளின் கணவனைத் தன் மூக்கால் முகர்ந்தவளை ஒத்த குற்றமுடையவனுவன்.

சொற்சுவை யாதிய வெல்லா மறிந்து துகளிலவா
நற்சுவைப் பைந்தமிழ்ப் பாமாலை யாவு நவிலுமவன்
பொற்சுவை யாளர்க்[1] கெமன்போற் குலாவும் புகழிலனேற்
புற்சுவை யுண்டறி யாப்பசுப் போலும் புரையினனே (98)

பத்தித் துறையி னிலையார் தவமும் பழுதிலருட்
சித்தித் திறமை விழையார்தங் கல்வியுஞ் செய்யதமிழ்
உத்திப் பெருக்கத்தி னூற்சமைத் தானுக் குரிமையில்லார்
நத்திப் பயில்வன வேயென்று நாடொறு நாஞ்சொல்வமே[2] (99)

எண்வகைச் சந்தமும் பாடுந் திறமு மிகலவரை[3]
விண்வயிற் செல்ல விடுக்கின்ற சத்தியு மெய்யருளுங்
கண்வரு காட்சியுந் தோயும் பெருமைக் கவிஞர் வென்றித்
தண்வளிச் சாரற் பொதியைமுன் னீன்ற தமிழ்க்கழகே. (100)

நூன்மாட்சி

மலங்கா மனத்திற மில்லாமற் செல்வர்தம் வாயில்தொறுங்
கலங்கா விரக்குங் கவிப்புல வீரயிற் கந்தனருள்
நலங்கா தலித்துள்ள நானிந்தவாறு நவின்றதமிழ்
அலங்காரத் தின்கவி நூறுங் கருதி யறிந்துய்ம்மினே.

—தண்டபாணி சுவாமிகள்.

---

[1]செல்வருக்கு. [2]பேரன்பிலாதவர் செய்யுந் தவமும், அருட்பேறு விரும்பாதவர் கல்வியும் நன்கமைந்த தமிழின் கற்பனைகளைக் கட்டுரைத்த புலவனை (அகத்தியனை) வழிபடாதவர் விரும்புவன என்று யாம் கூறுகின்றோம். பத்தியுடைய தவமும் சித்தியுடைய கல்வியும் தமிழ் பயில்பவருக்கே உரித்தாகும் என்றபடி). [3]எதிரிகளை.

## பிற் சேர்க்கை.

உன்னை யொழிய வொருதெய்வ மில்லையம்மா
கன்னல் மொழித்தமிழ்க் கன்னியரே—மன்னுகின்ற
உன்னையே நம்பி உனக்கேதான் கோவிலெடுத்
துன்னையே தான்வணங்கு வோம்!

உன்றன் சிறப்புயர்வை உன்னியுணர்ந் துய்யாமல்
நன்றிகெட்ட பாவிகளாய் நானிலத்தில்—வென்றிகெட்ட
கீழாகிப் போனோம்! கேழ்த்தமிழே இன்னும்யாம்
பாழாகிப் போகாமற் பார்!

பிள்ளைமனங் கல்லெனினும் பெற்றமனம் பித்தன்றோ
தெள்ளுதமிழ்த் தாயேநின் சேயரின்மேல்—உள்ளிரக்கம்
கொண்டு தடுத்தாட் கொளல்கடன்காண் உன்றனுக்கே
மண்டுமருட் பார்வை வழங்கு

ஆட்சி தனைக்கொடுத் தாதரவுந் தான்கொடுத்து
மாட்சி தனைமிகுப்பாய் மாண்டமிழே—தாழ்ச்சியுற்றோர்
குற்றம் உணர்ந்தால் குறையை யொழித்துயர்த்தல்
பெற்ற கடனன்றோ பேசு!

பண்டைத் தமிழர் பசையோடும் வாழ்ந்தார்கள்
வண்டமிழ் வாணியுனை வாழ்த்திவிழாக்—கொண்டாடி!
இன்றோ தமிழர் இழிந்துள்ளோம்! எந்தாயே
நன்றோ தழைக்கவருள் நல்கு!

வேண்டாச் செலவே விதவிதமாய்ச் செய்கின்றோம்
நீண்டபல வொன்றுமிலை நின்தமிழே—தூண்டியெமை
நல்வழியிற் சேர்த்து நலம்பெறச் செய்திடுக
அல்வழியிற் சேர்க்கை யழித்து!

கற்றுத் தெளிவோம் கலைத்தமிழே நின்சீர்மை
கொற்றக் கலையெல்லாம் கூட்டிநிலை—பெற்றுயர்வோம்!

முன்னாட் பெருமை முகிழ்ந்து வரக்கருணை
இந்நாட் பெரிதருள்க இங்கு!

உடல்பொருள் ஆவி உவந்தளிப்போம்! எங்கள்
கடனுன்னைப் போற்றலென்றே கண்டோம்! —சுடர்த்தமிழே
பாரில் உயர்ந்து பழம்பெருமை யோடிருப்போம்
சீரில் உயர்ந்து சிறந்து!

—நல்லை. அ. இளங்கோவன்.[1]

துயிலெடை நிலை[2]

சென்னி[3] தன் காவிரிநீர் சேரன் பொருநை[4]நீர்
தென்னவன் வையைநீர் சென்னிவைத்—துன்னைமுற்றத்
தாட்டற் கவாவிநின்றா ரம்மே யெனவாணர்
பாட்டுக் கிரங்கிவிழிப் பாய். (1)

பொதியத் தொளிர்சந்தப் பூங்குழம்பில் வான்றோய்
மதியக் குளிர்தென்றல் மன்றல்—பொதியக்
கலவையொன்று கூட்டிக் கடவுண் முனியும்
நிலவுநன்[5] னின்னோக்கி யீங்கு. (2)

---

[1]இவர் 1920ல் சாத்தூர் அருகிலுள்ள நல்லமுத்தன்பட்டியில் அருளப்பர், நேசம்மாள் மகனாகப் பிறந்தவர். ஆசிரியர் தொழில் புரிந்து கொண்டு நல்லவை நாற்பது, வேதவெண்பா, இளங்குறள், இளங்கவி (தொகுப்பு) இயற்றியுளர். [2]ஏனைய மொழிகளுடன் அறிவுப் போரில் வெற்றியுற்று வீரத்தாலும் தன்னேரில்லாத் தகைமையாலும் பெருமிதமடைந்து பாசறையில் துயிலும் மொழியரசியைச் சூதர் பலவாறு புகழ்ந்து பாடித் தூக்கத்தினின்று எழுப்பல் எனும் புறத்துறையின் பாலது. [3]சோழன். [4]வைகையாறு. [5]பொதியமலையில் உண்டாகிய சந்தனக் குழம்பில் தென்றற்காற்றில் கலந்துவரும் (பலபூக்களின்) நறுமணத்தைக் கலந்துகொண்டு அகத்திய மாமுனி காணப்படுமென்றான்.

உத்தர வேத[1] முரைத்தான் கதையெழுதிச்
சித்திரித்த கைசேக்கச் சேலைசெய்து—மெய்த்தவன்
வள்ளுவன் நிற்கான வந்தான் தமிழரசி
உள்ளுவந்து துஞ்சல் ஒழி. (3)

பைந்தமிழ்த் தேன்சொட்டப் பாவலர் நாவூறச்
சந்தப் பலமலர்த்தார் தான்புனைந்து—செந்தமிழின்
பொற்றுவிற் சூட்டிப் புகழ்கொளற்கா நக்கபிலன்
நிற்குநன் துஞ்சாதே நீ. (4)

—பண்டிதமணி, க. சு. நவநீதகிருட்டின பாரதியார்[2]

தமிழ்ப் பேரன்பு

[ கட்டளைக் கலித்துறை ]

ஆராத காதல்என் ஆயுள்எல் லாம்நெகிழ்ந்து அன்புசெய்தும்
தீராத காதல் திருவருட் காதல்என் சிந்தைவிட்டுப்
போராத காதல் எனின்ஒன் றியகாதல் பிந்தமுந்த
நேராத காதல்[3] படைத்தேன் தமிழ்க்குளந்த நேந்துமே.

இன்னிசை வெண்பா

1. தென்றற் பொதியத் திருச்சாந்(து) அணிந்துமுல்லை
மன்றற்பூச் சூடி மணிமே—கலைமினுங்கச்
சேரன் புனைந்த சிலம்பொலிக்கச் செந்தமிழ்சால்
சீராசி வந்தருள்வாய் சேர்ந்து.

---

[1]பிற்பட்டவேதமாகிய திருக்குறள். [2]இவர் 1889ல் பிறந்தவர். தஞ்சை பட்டுக்கோட்டைத் தாலுக்கா கிருட்டிணபுரம் சுப்பிரமணிய பாரதியார் மகனுவர். திருஞானசம்பந்தர் மரபினர்; புலவர் பரம்பரையைச் சேர்ந்தவர். ஈழநாட்டுப் புலவர் மன்றத்தால் பண்டித மணி எனும் பட்டம் சூட்டப் பெற்றவர். பல சங்கங்களின் தலைவர். மதுரைத் தமிழ்ச் சங்கத் தேர்வாளர். உலகியல் விளக்கம், புத்தினஞ் செங்கதிர் (காந்தி அடிகளாரைப்பற்றி 300 வெண்பா), செழுங்கதிர்ச் செல்வம் (ஞாயிறு பற்றிய 100 விருத்தம்) என்பன இவர் இயற்றியன. [3]இருவயின் ஒத்த.

நேரிசை வெண்பா

2. முருகுத் தமிழ் ; என்றும் மூவாத கன்னித்
திருவிற்கு உரிய திருத்தமிழ் ;—உருகச்செய்
இன்பத் தமிழ் வீரம் ஏற்றிஇரு மாக்கச்செய்
அன்புத் தமிழ்என்போம் ஆர்ந்து.

3. வானத்துள் நீங்கி மனம்கசிந்து மண்ணகம்புக்கு
ஊனத்துள் நீங்கி உலகுய்ய—ஞானத்தின்
மோனத்துள் நீங்கி முகமலர்ந்து முத்தமிழ்ச்சொல்
தேனுக்கே வாழ்வாம் தெளிந்து.

4. விண்ணுலகும் செந்தமிழா வீட்டுலகும் செந்தமிழா
மண்ணுலகும் செந்தமிழா மாண்புசெயும்—பெண்ணரசி
ஓம்என்னும் மூலத் தருவுடையாய் உன்னடிக்கீழ்
நாமென்றும் வாழ்வோம் நயந்து.

5. எல்லா நலன்களையும் எள்ளளவும் என்றனக்கு
இல்லாமல் உன்பொருட்டால் ஈங்கொழிக்த—நல்லேனை
நெஞ்சில் நினைத்துக்கொள் நின்மங் கலநாளில்
செஞ்சொல் தமிழரசீ! சேர்ந்து

6. அன்புருக்கும் ஐந்திணையே ஆறு (உ)வகைக்(கு) ஓமுதே
என்புருக்கி நெஞ்சுருக்கி என்பொல்லா—வன்புருக்கி
காதல்தேன் பாய்ச்சிஎனைக் கன்னித் தமிழாக்கி
தீதற்றே னுய்வாழச் செய்.

7. சிந்தா மணியே திருத்தக்க தெய்வீக
நந்தா மணிவிளக்கே நாவரசி—எந்தாயே
எல்லா மொழிகளையும் ஈன்றநினைக் கன்னியெனச்
சொல்லாடல் என்னென்று சொல்?

8. தொல்காப் பியன்சொன்ன சொற்படியே தொல்லுலகில்
எல்லா அமைச்சும் இனிதேத்த—ஒல்காச்சீர்
வள்ளுவன் தன்னை மதியமைச்ச னுப்படைத்தாய்
தெள்ளுதமிழ் நிவாழி தேர்ந்து.

9. வாழி தமிழ்மரபு ; வாழி தமிழன்பு ;
வாழி தமிழ்வீரம் ; வாழி தமிழ்—யாழுடனே ;
நாடு(எ)ம் உலகெல்லாம் நற்றமிழ்த்தாய் ஆட்சிசெய்து
நீடுழி வாழி நிலைத்து.

—க. சு. நவநீதகிருட்டின பாரதியார்.

நிவிய செந்தமி ழின்பப் பிராட்டியைத் தீயினிலே
மேவி அழியா திருந்திடு மற்புத வித்தகியைத்
தாயினு மன்பு சிறந்தெனையாளுந் தனிப்பொருளைத்
தூய மலர்கொடு நாளும் பரசித் துதிக்குவமே
க. வடிவேலுப் பிள்ளை.

செந்தமிழ்ச் செல்வியைத் தாமரை யாட்டியைத் தென் [பொதியச்
சந்தனச் சோலையி லேழிசை கூவுந் தனிக்குயிலைச்
சிந்தையிற் பூத்துச் செந்நாவிற் பழுத்துச் செவியினிலே
வந்துகனியும் பனுவற் பிராட்டியை வாழ்த்துதுமே
க. சோமசுந்தரம் பிள்ளை.

## பாடல்கள் இயற்றியோர் அகராதி

(எண்கள் பாடல்கள் தொடங்கும் பக்கங்களைக் குறிக்கின்றன)

---

# செய்யுள் முதற் குறிப்பு அகராதி

# மொழி யரசி.

சேர்க்கை க. (பட விளக்கம்)

முகப்புப் படம்: தமிழ்த் தாய்—இந்தியா முழுவதும், இன்னும் அதற்கு அப்பாலும், தமிழ்க் குருதியும் பண்பாடும் இன்றும் நின்று நிலவுவது ஆராய்ச்சியாளர் துணிபாகும்; அதற்கு ஏற்பவே தமிழ்த் தாய்த் திருவுருவம் பரந்து விளங்குவதைக் காணலாம். தமிழ் மொழி ஒன்றே இயல், இசை, நாடகம் என முப் பகுதியாகப் பிரிக்கப்பட்டிருப்பதற்குத்தக தமிழ்த் தாயின் திருக் கைகளில், வலக்கை புத்தகத்தையும் (இயல்), வல இடக் கைகள் யாழையும் (இசை), இடக்கை தலைக் கோலையும் (நாடகம்—சிலப்பதிகாரம் பார்க்க) தாங்கி விளங்குகின்றன. இலங்கைத் தீவு அவள் திருவடிக் கீழ் அன்னமாகத் திகழ்வது ஆங்கும் தமிழ் தழைத்தோங்குவதைக் குறிப்பதாகும்.

2. VII ஆம் பக்கம்: எந்தை சாமிநாத பிள்ளை—வேலாயுதம் பிள்ளையின் மகனுவர். 1861 இல் தஞ்சையிற் பிறந்து, தமிழ் ஆங்கிலம் பயின்று. திருத்துறைப் பூண்டி, சீகாழி, வயித்திச்சுரன்கோயில் முதலிய பல ஊர்களில் புகைவண்டி நிலையத் தலைவராயும், நாகப் பட்டினம், கும்பகோணம், கரூர் முதலிய ஊர்களில் உதவித் தலைவராயும் பணி ஆற்றி, 1909 இல் இறையடி நீழல் எய்தினுர். தேவாரத்தில் பற்று மிக்குத் தாண்டகம் பாடுவதில் சிறந்தவர்.

3. 115 ஆம் பக்கம்: அரங்குக் கொடி— இதில் உள்ள நூல் இயற்றமிழையும், யாழ் இசைத் தமிழையும், அரங்கு நாடகத் தமிழையும் குறிக்கின்றன. நாடகத் தமிழானது இயற்றமிழ், இசைத் தமிழ்களை அடிப்படைகளாகக் கொண்டிருப்பதால், அரங்கி

னுள் நூலும் யாழும் வைக்கப்பட்டிருக்கின்றன. இறையோன் காளைக் கொடியையும், முருகவேள் சேவற் கொடியையும், திருமால் கருடக்கொடியையும், மலரவன் அன்னக் கொடியையும் ஏற்றிருப்பது போல் தமிழ்த் தெய்வத்திற்கு இவ்வரங்குக் கொடி கற்பிக்கப்பட்டிருக்கிறது. கயல், வில், புலி தமிழ் நாட்டுக் கொடியின் இலச்சினை ஆகும். எனவே, இவ்விரு கொடிகளுக்குள்ளும் மாறுபாடு இல்லை.

### சேர்க்கை உ. (பிற் குறிப்புகள்)

(முதல் எண் பக்கத்தையும், அடுத் துள்ளவை வரிகளையும் குறிப்பன ஆகும். வரி எண்கள் அச்சிட்டுள்ள வரி எண் அல்ல; மேலிருந்து எண்ணி வந்தன ஆகும்.)

30, 31, 32 ஆம் பக்கங்களில் ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும் "எங்கள் தமிழன்னை வாழிய................" என்னும் ஈற்றடியை மீண்டும் சேர்த்துக் கொள்ளவும்.

40—28 பின்னர் "இவர் 1947 இல் யாழ் நூலைச் சிறப்பாக அரங்கேற்றிய பின் காலஞ் சென்றார். இப் பாடல் பிள்ளையார் வணக்கப் பாடலும் ஆகும்.

41— 2 அம்மம்=தாய்ப் பால்.

42—24 "பெறுகின்றார்"—பெற்று இப்பொழுது பாலைக்காட்டு விக்டோரியாக் கல்லூரித் தமிழ் விரிவுரையாளராய்த் திகழ்கின்றார்.

44—34 இப் பாடல் கடைப் பாடலாகும். இப் பாடலாசிரியர் தமது பதிகம் ஒவ்வொன்றின் இறுதிப் பாடலில் வள்ளுவரை. வாழ்த்தும் வழக்க முடையவ ராவர்

45— 8 போது மூன்றுவன இறப்பு நிகழ்வு எதிர்வு என்ற காலங்கள். முக் காலத்தும் வழங்கும் மொழி இஃதொன்றே யாம்.

45— 9 "ஒரும் எந்தவ வாழ்வே பராவுதும்" என்பதும் பாட மாகும்.

51—19 நான்கு கணங்கள் :—உயிர்க்கணம் (அ, இ), வன் கணம்(த்), மென் கணம்(ம்), இடைக் கணம்(ழ்) [த் + அ, ம் + இ, ழ் = தமிழ்]

56—28 முதலியார் மணி விழா—முதலியார் தமை யனர் திரு. வி. உலகநாத முதலியார் மணி விழா.

56—30 "வருகிறார்"—வந்து பின் மதுரைத் திரு ஞானசம்பந்தர் ஆதீனத்து மாணிக்க வாசகத் தம்பிரானுய்ச் சைவ ஒளி பரப் பித் திகழ்கின்றார்.

60— 3 "திரு சோம"—நவாலியூர் திரு. க. சோம.

67—21 அலகினில்—அளவிடுதலில்.

70—10 நந்தலில்—கெடுதலில்லாத.

73—23 இப்பொழுது யாழ்ப்பாணம் பரமேச்சுரக்கல் லூரித் தமிழாசிரியராகத் திகழ்கிறார்.

78— 7 பெருந்தெய்வங்க ளாய மால், மலரவன் முத லியோர்.

103—20 க. வேலுப் பிள்ளை என்பதே இவர் பெய ராகும். உடுவில் இவர் புக்ககமாகும். இவர் நவாலியூர் சோமசுந்தரப் புலவர் இளவலாவர்.

111— 3 மிடையும்—நெருங்கிய.

113—30 கலந்து—(சிவபெருமானைப் போலக்)கலந்து

138—29 இவர் மகா வித்துவான் எனப் பலரால் போற்றப்பட்டனர். தில்லையில் மணி வாசக மன்றம் நிறுவிய பொழுது இப் பாடல் எழுந்த தாகும்.

## சேர்க்கை ௩ (பிழையும் திருத்தமும்)

| பக்கம் | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| 7 | 11 | மாவெனவே | மாலெனவே |
| | 19 | இநன் ஆசிரியர் | இவர் |
| 13 | 21 | ஙரத்தே | காத்தே |
| 17 | 21 | நடைவன்மை | நாவன்மை |
| 19 | 10 | க. சோம | ச சோம |
| 20 | 1 | யாவரும் | யாவர் |
| 23 | 21 | தலைவராவர் | தலைவராயிருந்தவர் |
| 26 | 3 | மனோன் | மனோன் |
| 27 | 29 | சந்தர | சுந்தர |
| 32 | 28 | வாழ்த்துவமே | வாழ்த்துவமே[1] |
| | 29 | பிள்ளை[1] | பிள்ளை |
| 38 | 6 | தாழுயர்த்து | தாமுயர்ந்து |
| 40 | 23 | இப்பொழுது | (விடுக) |
| | 24 | வருபவர் | வந்தவர் |
| 47 | 5 | இன்புறு | இன்புரு |
| 60 | 20 | பெங்களூர் | வங்களூர் |
| 66 | 3 | ஈனனையும் | ஈனனுக்கும் |
| 74 | 21 | இயநூல் | இயல்நூல் |
| 75 | 22 | பெயர்த்தாய் | பெயர்தங்கு |
| 78 | 21 | பேசினர் | பேசினர் |
| 87 | 22 | குவலையக் | குவலயங் |
| 102 | 10 | நிறைத்த | நிறைந்த |
| 109 | 11 | ஒபகுவாறி | ஒருகுவாறி |
| 110 | 28 | போன்ற | போன்ற |
| 111 | 1 | குஞ்சரமும் | குஞ்சரமாம் |
| 114 | 11 | விரித்து | விரித்துக் |
| 119 | 22 | துறவியுமோர் | துறவியோர் |
| 134 | 7 | தமிழ்தெய்வம் | தமிழ்த் தெய்வம் |
| 144 | 12 | எடுத்தான்ளுட | எடுத்தாளுட |
| 147 | 18 | காட்டலங் | காட்டவங் |
| 149 | 14 | மினே[4] | மினே[5] |
| | 16 | மென்பர்[5] | மென்பர் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| 152 | 20, 21 | கவிப்பினுள் உள்ளவற்றை சேர்க்கவும் | முன்பக்கத்தின் இறுதியில் |
| 157 | 14 | அழைத்து | அழைத்துச் |
| 164 | 4 | கெடுங் | நெடுங் |
| 166 | 3 | ருத்து | சூத்து |
| 172 | 2 | உதித்திடங் | உதித்திடக் |
| 176 | 33 | ஆறு ஓட | ஆறு மாறி ஓட |
| 179 | 4 | எண்டாங்ஞ் | எண்டாங்குஞ் |
| 180 | 17 | கனவுல் | கனவில் |
| 185 | 21 | விரும்புவன் | விரும்புவா |
| | 22 | பத்தியுடைய | (பத்தியுடைய |
| 189 | 20 | தமிழாக்கி | தமிழாக்கித் |
| 193 | 2*28 | இமிழலல | இமிழல |
| 195 | ,, 21 | கொடியயார்த்திரு | கொடியுயர்த்திரு |
| 198 | 1* 2 | கிறைவாள | கிறைவான் |
| | ,, 28 | பற்றுவைத்தே | பற்றுவைத்து |
| | 2*11 | பின்னோன்றி | பின்றோன்றி |
| 200 | 1*17 | வாழி தமிழ | வாழி தமிழ் |

* இவை பத்தியைக் குறிப்பன ஆகும்.

## சேர்க்கை ௪. (மதிப்புரைகள்)

1 புதுவை யோகி சுவாமி சுத்தானந்த பாரதியார் :—மொழியரசி தமிழன்னைக்குச் சூட்டிய புகழ் மாலைகளில் மிகச் சிறந்ததாகும். இப்படி ஒருங்கே தமிழன்னையின் மாண்பையும் அருள் விளக்கத்தையும் துலக்கும் நூல் வேறில்லை.

2. திரு. ச. சோமசுந்தர பாரதியார் (முந்திய தமிழ்ப் பேராசிரியர்);—தமிழ்த் தெய்வ மாலை அமிழ்தினுமினிய நல் விருந்தை அனவரதம் உதவுகிறது. தேர்ந்து தொகுத்த பாமாலை, புனைந்த புலவர் கவித்திறனும், பொறுக்கிக் கோத்தோர் சுவைப் பரிசும் ஒருங்கு விளங்க அமைந்துள்ளது.

3. திருவனந்தபுரம் தமிழ் இசை மணி திரு. ஓ. இலக்குமணப் பிள்ளை:—மொழியரசி எனும் நூல் தலை சிறந்தது. அதில் அடங்கியுள்ள இரத்தினங்களைப் போன்ற செய்யுட்களைத் தெரிந்தெடுக்கும் இந்த அரிய தொண்டிற்குத் தமிழுலகம் என்றும் கடமைப் பட்டுள்ளது.

4. மதுரை, திரு. கார்மேகக்கோன் (தமிழ்ப் பேராசிரியர்):—மொழியரசி எனும் பனுவல் பெற்று மகிழ்ந்தனன். பாடல்களைப்பற்றியும், இயற்றிய ஆசிரியர் பற்றியும் வரைந்திருக்கும் குறிப்புக்கள் மிகவும் இன்சுவை பயப்பனவாயும் பொருள்வளங் கெழுமியனவாகவும் அமைந்துள்ளன.

5. திரு. R. விசுவநாதய்யர் (தமிழ்ப் பேராசிரியர், சென்னை):—மொழியரசி, தமிழ்ப்புகழைப் படிக்குங்கால் எனக்குண்டான மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. பாடல்களைச் சேகரிக்கவும், அவற்றை உரிய தலைப்புகளுடன் பிரசுரிக்கவும், அவற்றிற்குக் குறிப்புரை எழுதவும் எடுத்துக் கொண்டுள்ள பெருமுயற்சியை நோக்க மனம் மிகவும் இறும்பூதெய்துகின்றது. ஆசிரியர்கள் பற்றிய வரலாறுகள் பெரும்பயன் அளிக்கத் தக்கவை.

6. கலை முதுபுலவர் (Dr.) இராவ்பகதூர் T. S. திருமூர்த்தி ஐயர் (முந்திய துணைவேந்தர்—ஆந்திரப் பல்கலைக்கழகம்):—இத்தகைய வேலைசெய்ய இதுவரை ஒருவரும் முற்படவில்லை. இது தமிழ் மொழியின் வரலாறு அழகுகளைப் பற்றிய உயர்தனிச் செந்நூலாவதுடன் தக்க கருவி நூலும் ஆகும்.

7. புலவர் திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டார், தமிழ்க் கல்லூரித் தலைவர்:—மொழியரசி எனும் நூல் தமிழ் மக்களுக்கு ஓர் நல்விருந்தாகும். இந் நூலை ஒரு முறை நோக்குபவர் வேறெம் மொழிக்குமில்லாத சிறப்பு தமிழ் மொழிக்கிருத்தலை அறிந்து தமிழ்ப்பற்றும் தமிழ் கற்பதில் ஊக்கமும் மிகப் பெறுவர் என்பது தோற்றம்.

8. திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை எம். ஏ., எம். எல்.; (முந்திய தமிழ்ப் பேராசிரியர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்).—பல்கலைக் களஞ்சிய அறிவுறுத்தலுடன் கூடிய இவ்வேலைப்பாடு படிப்போரின் தமிழ் அன்பைப் பெருக்கி (இந்நூலில்) கிளர்ச்சியுடன் ஈடுபடும்படி செய்ய வல்லதாகும்.

9. திரு. ச. தண்டபாணி தேசிகர், தமிழ்ப் பேராசிரியர், தருமபுரம் :—

மொழியரசி முடிசூடிப் படியாளு முதன்மைபெற்று முயற்சி யுள்ளே
வழியாகப் பலவுடைத்தாய் வருமிந்த வெளியீடு தமிழர் செல்வப்
பொழிலூடு தேன்பெருக்கிப் புதுமணத்தை மிகப்பெருக்கிப்
[பொருந்திவாழ
எழிலாருங் கொடையரசர் இன்னருளை மிகப்புரிக இனிதுமாதோ.

10. கண்ணறச்சேரி திரு. கன்னிசாமி:—

செழியமுது தேன்கலந்த செவ்வியெனச் செழுந்தமிழின் சீர்த்தி
[யெல்லாம்
வழிவழியாய் வந்ததமிழ் மாபினரே யன்றிபிற மாட்சியோரும்
கழிமகிழ்வு கொளக்கண்டு காதலிப்பக் கமலையினிற் கருதியாய்ந்த
மொழியரசி யெனுமரிய முடியரசி வாழ்ந்திடுக முதன்மைவாய்ந்தே

11. திருக்கோகரணம் திருவாட்டி சி. பிருந்தா:—

தண்ணுலவு கடலாடை தனையுடுத்த வுலகமெழில் தாங்கி யோங்க
எண்ணான்கு அறங்களையும் இயம்பியதோ டமையாம லியற்றி
[நாளும்
விண்ணுடர் தொழுதேத்த விளங்குமுயர் தென்னாட்டின்
[விளக்கே ! ஞானக்
கண்ணாகும் தமிழ்த்தாயின் கழலடிசேர் 'மொழியரசி'! கவினார்
[பூவே !
தேனூறும் சொன்மலரே ! தேவர்களும் பெறவரிதாம் திருவே !
[சீர்சால்

வானுறும் மலர்போல வாடாது விளங்கிடுவாய் வையமீதில்
கானுறும் இருடிகளும் கையேந்தி நின்றுதொழும் கவிவல்லோர்கள்
ஆனுர்சொல் மணமலரே அன்னைதமிழ்த் தாய்க்கனியாய்
[அமைக நீயே !

12. புலவர் திரு. மி. தங்கவேலு, ஆசிரியர், உரத்த நாடு :—

செந்தமிழே தீஞ்சுவையே ! நிலவொளியே ! நறும்பாகே ! செம்
[மைமல்கி
நந்தவிலாப் பேரொளியே அகத்திருளை நீக்குவிக்கும் நங்காய் !
[நின்சீர்
இந்தவுல காசியற்ற ஏற்றபல புலவர்களும் இருந்தும் நின்னைச்
சந்தமுற அரசியாய்ச் செய்திலரால் இன்றுகுறை தவிர்ந்தாய்
[வாழி.

விலங்குகளும் பயிலவல்ல எளியநிலை பெற்றென்றும் விலங்கித்
[தாய்தாய்
இலங்குமெந்தாய் அரசிழந்து இருக்குநிலை அகல்வதென் றென்
[றேங்கித்
துலங்குபுல முதிர்வன்மைத் தொண்டர்வே லாயுதனார் ஊக்கத்
[தோடு
நலங்குளிர மொழியரசி யாக்கியடி பணிந்தனர்நீ நன்றேவாழி.!

13. சுவாமி சுத்தானந்த பாரதியார் "புலவர்மணி" சாமி வேலாயுதனாருக்கு :—

மொழியரசியெனும் எழில் மிகு நூலைக்
கோத்த தங்கள் கொள்கை வாழ்கவே........
தமிழெனும் போதே தழைக்குமென் உள்ளம்
இன்பக் கரைபுரண் டேறிய தின்றே
நாற்ப தாண்டுகளாய் நற்றமிழ் வளர்த்த
கனியை இன்றே கண்டனம் மன்றே.

